501

# பொன்னித் தமிழ்ச் சோலை

ஆறும் வகுப்பு




ஜெனரல் புக் கம்பெனி
.. கும்பகோணம் ..

TB
031C6?
N63..
46693

# பொன்னித் தமிழ்ச் சோலை

## ஆறாம் வகுப்பு

(1957ஆம் ஆண்டு இணைக்கப்பெற்ற ஆரம்பக்கல்வி
புதிய பாடத்திட்டப்படி தயாரிக்கப்பெற்றது)




* *

தொகுப்பாசிரியர் :
**புலவர் ப. திருநாவுக்கரசு,**
தலைமைத் தமிழாசிரியர்,
சிறியமலர் உயர்நிலைப்பள்ளி, கும்பகோணம்.

ஜெனரல் புக் கம்பெனி
டவுன் ஹைஸ்கூல் ரோடு, கும்பகோணம்
9, பிரான்சிஸ் ஜோசப் தெரு, சென்னை-1

முதற் பதிப்பு — 1960
நான்காம் பதிப்பு — 1963



10·9 கிலோ கிராம் வெள்ளைக் காகிதத்தில் அச்சிடப்பெற்றது.




தமிழ்நாடு பாடப்புத்தகக் குழுவினரால் அங்கீகாரம் செய்யப்பெற்றது
கெசட் பக்கம் 6 தேதி 10—5—61

பதிப்புரிமை

விலை ரூ. **1-40**

ஹோமியோபதி பிரஸ், கும்பகோணம்

# முன்னுரை

அரசியலார் 25—12—1957இல் திருத்தி வெளியிட்டுள்ள இணைக்கப்பெற்ற ஆரம்பக் கல்வியின் பாடத் திட்டப்படி எழுதப் பெற்றுள்ள நூல் வரிசையில் ஆறும் வகுப்பிற்கென இப்புத்தகம் தயாரிக்கப் பெற்றுள்ளது.

தாய்மொழியைக் கற்பிப்பதில் புதிய பாடத்திட்டம் கொண்டுள்ள நோக்கம், முதல் ஏழு ஆண்டுகளில் மாணவர்கள் தாய்மொழியைப் பொருளுணர்ந்து உணர்ச்சியுடன் பேசவும், பிழையின்றி எழுதவும் பயிற்சி பெறுவதுடன், அடிப்படையான இலக்கண அறிவையும் பெற்று, அவற்றை மொழியிடைப் பயன்படுத்தவும், தமிழ் இலக்கியங்களைப் பற்றிய அறிவினை ஓரளவு பெறவும் பயிற்சி அளிப்பதாகும். இந்நோக்கங்களை உளத்திற்கொண்டே இத்தொகுப்பு நூல் அமைக்கப்பெற்றுள்ளது.

இத்தொகுப்பு நூலில் ஏறத்தாழ 240 வரிகள் கொண்ட செய்யுட் பகுதி பாடமாக இருத்தல் வேண்டும் என்பது விதி. எனினும் கற்பிக்கும் ஆசிரியர் மனநிலைக்கு ஏற்றபடி செய்யுட்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் வாய்ப்பு இருக்குமாறு ஏறக்குறைய 290 வரிகள் இங்குத் தரப்பெற்றுள்ளன. ஒவ்வொரு செய்யுட் பகுதியின் இறுதியிலும், நூல் வரலாறு, ஆசிரியர் வரலாற்றுக் குறிப்பு, அருஞ்சொல் விளக்கம், வினக்கள் முதலியன மாணவர் நலங்கருதித் தரப்பெற்றுள்ளன.

இந்நூலில் உரைநடைப் பகுதியில் உள்ள பாடங்கள் மாணவர் தகுதிக்கேற்றவாறு எளிய நடையில் உயரிய கருத்துக்களைக் கொண்டு பல்வேறு அறிஞர் பெருமக்களால் எழுதப்பெற்றன ஆகும். பாடவியலில் கண்டுள்ள பல்வகைப் பிரிவுகளும் இடம் பெறுமாறு இப்பாடங்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொல் விளக்கம், வினக்கள் முதலியன தரப் பெற்றுள்ளன. இவ்வகுப்பிற்கேற்ற இலக்கணப் பகுதி முறையாக ஆங்காங்கே விளக்கப்பெற்றுள்ளன. இந்நூலில் தம் கவிதைகளையும் கட்டுரைகளையும் சேர்த்துக்கொள்ள இசைவு தந்தவர்களுக்கு என் உளமார்ந்த நன்றி.

இளைஞர்கட்குப் பெரிதும் நன்மை விளைவிக்குமாறு அமையப் பெற்றுள்ள இந்நூல் மாணவர்கட்குப் பெரும் பயன் அளிக்கத் தமிழன்னை அருள்புரிக.

*ஆசிரியர்*

# இசைவு வழங்கிய அறிஞர்கட்கு நன்றியுரை

| பாடம், ஆசிரியர் பெயர் | இசைவளித்தோர் |
|---|---|
| 1. **கடல் தரும் செல்வம்** புலவர் தணிகை உலகநாதன் அவர்கள் | புக்ஸ் இந்தியா (பிரைவேட்) லிமிடெட், சென்னை—1. |
| 2. **திருக்குறளால் வந்த பயன்** | தியாகராஜ விலாசம், சென்னை—5. |
| 3. **சீனச் சிறுகதை** | திரு. பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ. அவர்கள். |
| 4. **யான் கண்ட இலங்கை** | டாக்டர் மு. வரதராசனுர் எம். ஏ., எம். ஓ. எல்., பிஎச்.டி. அவர்கள். |
| 5. **சாரணர் படை** வித்துவான் கோ. வில்வபதி அவர்கள் | வார்தா பதிப்புக் கழகம், சென்னை—5. |
| 6. **இலக்கியச் செல்வம்** | அருள்திரு யோகிசுத்தானந்த பாரதியார் அவர்கள். |
| 7. **காவிரி நங்கை** வித்துவான் வீர. இராம லிங்கம் அவர்கள் | அமுத நிலையம் (பிரைவேட்) லிமிடெட், சென்னை—18. |
| 8. **பெண்கள் பந்தாட்டம்** | டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், எம். ஏ., பிஎச்.டி. அவர்கள். |
| 9. **வள்ளலும் முல்லையும்** வித்துவான் ஐயன்பெருமாள் கோனுர் அவர்கள் | வாசன் பதிப்பகம், மதுரை. |
| 10. **தாயும் தள்ளு வண்டியும்** திரு எஸ். கோவிந்தன் பி.ஏ., அவர்கள் | கிராம அபிவிருத்தி தல நிர்வாகத்துறை, போர்ட் செயிண்ட் ஜார்ஜ், சென்னை—9. |
| 11. **கடற்கரையில் பாரதியார்** | திரு. ரா. பி. சேதுப்பிள்ளை, பி. ஏ., பி. எல். அவர்கள். |
| 12. **குமண வள்ளல்** டாக்டர் மா. இராசமாணிக்கனர், எம். ஏ., எல். டி., எம். ஓ. எல்., பிஎச். டி. அவர்கள் | நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி சென்னை—1. |

# உள்ளுறை

## உரைநடைப் பகுதி

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
    பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
    த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
    உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
    தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கல தாயக ஜயஹே
    பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
    ஜய ஜய ஜய ஜயஹே.

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்

# தேசீய கீதம்

(பொருள்)

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி
செலுத்துகிறாய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் ஸிந்துவையும்
குஜராத்தையும் மகாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில்
கலக்கிறது;

இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை உன் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப்
பாடுகின்றன;

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

# செய்யுட் பகுதி

## I. வாழ்த்துப் பகுதி

### (அ) தேவாரம்

பொன்னார் மேனியனே!
புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல்
மிளிர்கொன்றை அணிந்தவனே!
மன்னே! மாமணியே!
மழபாடியுள் மாணிக்கமே!
அன்னே! உன்னையல்லால்
இனியாரை நினைக்கேனே.

— சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### (ஆ) திருவாசகம்

பாரோர் விண்ணோர் பரவி ஏத்தும்
பரனே! பரஞ்சோதி!
வாராய்; வாரா உலகந் தந்து
வந்தாட் கொள்வோனே!
பேரா யிரமும் பரவித் திரிந்தெம்
பெருமான் எனஏத்த
ஆரா அமுதே! ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே!

— மாணிக்கவாசகர்

## (இ) திவ்வியப் பிரபந்தம்

### பெருமாள் திருமொழி

எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவை
போல்
மெய்த்துயர்வீட் டாவிடினும் வித்துவக்கோட் டம்மா! என்
சித்தமிக உன்பாலே வைப்பன் அடியேனே.

— குலசேகர ஆழ்வார்

## (ஈ) தேம்பாவணி

அறக்கடல் நீயே! அருட்கடல் நீயே!
அருங்கரு ணைகரன் நீயே!
திறக்கடல் நீயே! திருக்கடல் நீயே!
திருந்துளம் ஒளிபட ஞான
நிறக்கடல் நீயே! நிகர்கடந் துலகில்
நிலையுநீ! உயிருநீ! நிலைநான்
பெறக்கடல் நீயே; தாயுநீ! எனக்குப்
பிதாவுநீ! அனைத்தும்நீ யன்றோ!

— வீரமாமுனிவர்

## (உ) சீறாப்புராணம்

சிறந்த மெய்ப்பொருளை அழிவிலா மணியைத்
தெரிந்து முக்காலமும் உணர்ந்து
துறந்தவர் இதயா சனத்திருந் தவனைத்
தொடரின்ப துன்பமற் றவனைப்

பிறந்தபல் லுயிரின் மனத்தள் வுறைந்து
பிறப்பிறப் பென்றிலா தவனை
மறந்தவர் சுவர்க்கப் பதியையும் மறந்து
மண்ணினில் மதிமறந் தவரே.

— உமறுப்புலவர்

1. குறிப்பு:

(அ) தேவாரம்: தே+வாரம்=தேவாரம். தே-தெய்வம்; வாரம்—ஒருவகை இசைப்பாட்டு. தெய்வத்தைப்பற்றிய ஒரு வகை இசைப்பாட்டு என்பது பொருள். இத்தொடரைத் தே+ ஆரம் எனப்பிரித்துத் தெய்வத்திற்கு அணியப்படும் பூமாலை போன்ற பாமாலை எனவும் பொருள் கொள்ளலாகும். சைவ சமய குரவர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவரும் சிவபெருமான்மீது பாடிய தோத்திரப் பாடல்களின் தொகுதியே தேவாரம் ஆகும்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள்: பிறப்பிடம் — திருநாவலூர். பெற்றோர் — சடையனார், இசைஞானியார். மரபு — ஆதி சைவர். இவர் நரசிங்க முனையதரையர் என்ற பல்லவ மன்னனால் வளர்க்கப்பட்டவர்; சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப் பெற்றவர்; நம்பி ஆரூரர், வன்றொண்டர், ஆளுடைய நம்பி எனவும் அழைக்கப்பட்டவர் ஆவார். காலம் — கி. பி. 8ஆம் நூற்றாண்டு.

(ஆ) திருவாசகம்: சைவ சமய குரவராகிய மாணிக்க வாசகரால் சிவபெருமான்மீது பாடப்பட்ட தோத்திரப் பாக்களின் தொகுதி திருவாசகம் ஆகும்.

மாணிக்கவாசகர்: பிறப்பிடம் பாண்டிய நாட்டில் உள்ள திருவாதவூர். பெற்றோர்—சம்புபாதசிருதர், சிவஞானவதியார். இவர் அரிமர்த்தன பாண்டியனிடம் அமைச்சுத் தொழில் புரிந்தவர்; திருப்பெருந்துறையில் சிவபெருமானால் ஆட்கொள்ளப் பட்டவர்; தில்லையில் இறைவனுடன் இரண்டறக் கலந்தவர். காலம் — கி. பி. 3ஆம் நூற்றாண்டு என்றும் கி. பி. 9ஆம் நூற்றாண்டு என்றும் கூறுவர்.

(இ) திவ்வியப் பிரபந்தம்: திருமாலின் அடியவர்களான பன்னிரு ஆழ்வார்களும் திருமாலின் மீது பாடிய பாமாலைகளின் தொகுதி திவ்வியப் பிரபந்தம் ஆகும்.

பெருமாள் திருமொழி: பன்னிரண்டு ஆழ்வார்களுள் குலசேகர ஆழ்வார் பாடிய பாடல்களின் தொகுதி பெருமாள் திருமொழி ஆகும்.

குலசேகர ஆழ்வார்: இவர் குலசேகரப் பெருமாள் எனவும் வழங்கப்படுவார். பிறப்பிடம்-சேர நாடு. தந்தையார்—திடவிரதர் என்னும் சேர மன்னர். காலம் — கி. பி. ஏழாம் நூற்றாண்டு என்பர்.

(ஈ) தேம்பாவணி: வாடாத மாலை என்றும், தேன் போன்ற பாக்களாகிய மாலை என்றும் பொருள்படும். இஃது இயேசு நாதரின் தந்தையாகிய சூசையப்பரின் வரலாற்றைக் கூறும் நூலாகும். இதனுள் இயேசு நாதரின் வரலாறும், கிறித்துவமதக் கொள்கைகளும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

வீரமாமுனிவர்: பிறப்பிடம் — இத்தாலிய நாடு. இயற்பெயர் — கான்ஸ்டன்டைன் ஜோஸப்பு பெஸ்கி. 1714ஆம் ஆண்டில் தமிழ் நாட்டிற்குக் கிறித்துவச் சமயப் பணி புரிய வந்துள்ளார். திருக்காவலூர்க் கலம்பகம் போன்ற தமிழ் நூல்கள் பல இயற்றியுள்ளார்.

(உ) சீறாப்புராணம்: இது நபிநாயகத்தின் வரலாற்றைக் கூறும் நூல் ஆகும்.

உமறுப் புலவர்: பிறப்பிடம் — கீழக்கரையை அடுத்த சிற்றூர். வாழ்ந்த இடம் — எட்டையபுரம். தந்தையார் — சேகு முதலியார். இவர் இஸ்லாம் மார்க்கத்தைச் சார்ந்தவர். எட்டையபுரத்துக் கடிகை முத்துப் புலவரின் மாணவர் ஆவார். காலம் — கி. பி. 17ஆம் நூற்றாண்டு.

**2. அருஞ்சொல் விளக்கம் :**

(அ) தேவாரம்: அரைக்கு அசைத்தல் — அரையில் உடுத்துதல்; செம்மை + சடை = செஞ்சடை; மிளிர்—விளங்குகின்ற; மன் — தலைவன்; மாமணி — சிறந்த இரத்தினம் (மாணிக்கம்); மழபாடி — திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள ஒரூர்; அன்னே—தாயே.

(ஆ) திருவாசகம்: பாரோர்-மண்ணுலக மக்கள்; விண்ணோர்—தேவர்கள்; பரவி—வணங்கி, வாழ்த்தி; ஏத்தும்—துதிக்கும்; பரன் — மேலானவன்; வாரா உலகம் — முத்தியுலகம்; பேராயிரமும் பரவுதல்—இறைவனது பல பெயர்களையும் கூறித் துதித்தல்: ஆரா அமுதே—தெவிட்டாத அமுதம் போன்றவனே.

(இ) திவ்வியப் பிரபந்தம்: வான்-மேகம்; பைங்கூழ்-பசுமையான பயிர்கள்; மைத்து எழுந்த மாமுகில்—(கடல் நீரை முகந்து) கருமை நிறங்கொண்டெழுந்த கார்மேகம்; வித்துவக் கோடு—ஒரூர்; அம்மா—அம்மானே.

(ஈ) தேம்பாவணி: கருணாகரன்—கருணைக்கு இருப்பிடமானவன்; திறம் — ஆற்றல், வலிமை; ஞானம்—அறிவு; நிகர் கடந்து—ஒப்பற்று.

(உ) சீருப்புராணம்: மெய்ப்பொருள்—உண்மைப் பொருள்; இதய + ஆசனம் = இதயாசனம்; உறைந்து—தங்கி; மதி—அறிவு.

**3. வினாக்கள் :**

1. தேவாரம், திருவாசகம்—இதன் பொருளை விளக்குக.

2. தேம்பாவணி, சீருப்புராணம்—பெயர்க் காரணம் தருக.

3. சுந்தரர், மழபாடி இறைவனை எவ்வாறு போற்றியுள்ளார்?

4. மாணிக்கவாசகர் தம் ஆசையாகக் கூறுவதென்ன?

5. குலசேகர ஆழ்வார் வித்துவக் கோட்டம்மானிடம் முறையிடுவதென்ன?

6. வீரமாமுனிவர் இறைவனை எவ்வாறு போற்றியுள்ளார்?

7. இறைவன் தன்மைகளாக உமறுப்புலவர் குறிப்பிடுவன யாவை.?

8. உமறுப் புலவர், சுவர்க்கப் பதியையும் மண்ணினில் மதியையும் மறந்தவராக எவரைக் குறிப்பிடுகின்ருர்?

9. உவமேயந்தருக :—

எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்.

---

# II. நீதிப்பகுதி

## (அ) நீதிநெறி விளக்கம்

### கல்வியின் சிறப்பு

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்–உறுங்கவலொன்(று)
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை. 1

### கல்வி அழகே அழகு

கற்ருேர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்ருேர் அணிகலம் வேண்டாவாம்;—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக்கு அழகுசெய் வார். 2

### கல்வியில் அவா

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென்று அகமகிழ்க—தம்மினும்
கற்ருரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே இவர்க்குநாம் என்று. 3

### கருமமே கண்ணுயினர்

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணுயி னர். 4

### நல்லார் இயல்பு

நல்லா ரொழுக்கின் தலைநின்ருர் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற்(கு) ஒருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே(று) அறப்பசித்தும் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ். 5

—குமரகுருபரர்

1. **குறிப்பு :**

நீதிநெறி விளக்கம் : நீதி + நெறி + விளக்கம். நீதி மார்க்கங்களை விளக்கும் நூல் என்பது பொருள். இந்நூல் திருக்குறளின் சாரமாகத் திகழ்வது; 102 வெண்பாக்களையுடையது.

குமரகுருபரர் : பிறப்பிடம்—திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சீவைகுண்டம். பெற்ருேர்—சண்முக சிகாமணிக் கவிராயர், சிவகாமசுந்தரி அம்மையார். மரபு—சைவவேளாளர். இவர் ஐந்து வயதுவரை வாய் பேசாதிருந்தார்; பின்னர் திருச்செந்தூர் முருகப்பெருமான் திருவருளால் பேசும் ஆற்றல் பெற்றுக் கல்வியறிவும் கவிபாடும் திறனும் பெற்ருர்; பல தலங்

களுக்கும் சென்று, இறுதியில் வடநாட்டில் உள்ள காசியம்பதியில் மடம் நிறுவித் தமிழோடு சைவத்தையும் வளர்த்தார். இவர் இயற்றிய நூல்கள்: கந்தர் கலிவெண்பா, மதுரைக் கலம்பகம், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ். மீனாட்சியம்மை குறம், நீதிநெறி விளக்கம், சகலகலாவல்லி மாலை முதலியன. காலம்—கி. பி. 17ஆம் நூற்றாண்டு (1623—1688) என்பர்.

2. அருஞ்சொல் விளக்கம்:

1. புறங்கடை - கடைவாயில், ஊர்ப்புறம்; இசை-புகழ்; நாட்டும்-நிலைநிறுத்தும்; உறும் - வரவேண்டிய; கவல்—கவலை; உற்றுழி - உற்ற + உழி - வந்தவிடம்; கல்வியின் ஊங்கு - கல்வியைவிடச் சிறந்தது; சிறுமை + உயிர் = சிற்றுயிர் - குறுகிய வாழ்நாளையுடைய மக்களுயிர்.

2. நலன்-அறிவு; கலன்-அணிகலம், ஆபரணம்; முற்ற-முழுவதும்; முழுமணி-பெரிய மணிகள், பருத்த இரத்தினங்கள்; பூண்-ஆபரணம்.

3. தம்மின்-தம்மைக் காட்டிலும்; மெலியார்—செல்வத்தில் குறைந்தவர்; உடைமை-செல்வம்; அம்மா-வியப்பைக் காட்டும் இடைச்சொல்; கருத்து - மனம்; அழிக - வருந்துக; எற்று - எத்தன்மையன.

4. மெய்-உடல்; துஞ்சார் - தூங்கமாட்டார்; எவ்வெவர் - யார் யார்; மேற்கொள்ளார்-பொருட்படுத்த மாட்டார்; செவ்வி-காலம்; கருமம்-காரியம்; கண்ணுயினர்-முடிப்பதிலேயே ஊக்கமுடையவர்.

5. நல்லாறு - நல்ல நெறி; ஒழுக்கு - ஒழுகும் ஒழுக்கம்: தலைநின்றார் - நிலைத்து நின்றவர்; நல்கூர்ந்தும் - வறுமையடைந்தும்; அல்லன - நல்லவை அல்லாத தீச்செயல்கள்; ஒருப்படார் - உடன்படமாட்டார்; பல்பொறிய - பல புள்ளிகளையுடையன; செம்மை + கண் = செங்கண் – சிவந்த கண்; புலியேறு - ஆண் புலி; அறப்பசித்தும் - மிகப் பசித்தாலும்;

பைங்கண் = பசுமை + கண் - பசுமையான இடத்தையுடைய; புனத்த-கொல்லைகளிலுள்ள; கூழ்-புல், பயிர்கள்.

"புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது" என்பது பழமொழி. "பல்பொறிய..........பைங்கூழ்"—உபமானம்; நல்லார்......... ஒருப்படார்"—உபமேயம்.

3. **வினாக்கள் :**

1. சிற்றுயிர்க்கு உற்ற துணையாவது யாது? ஏன் அவ்வாறு கூறவேண்டும்?

2. கற்றோர்க்கு வேறு அணிகலன் வேண்டப்படுவது இல்லை—ஏன்?

3. செல்வத்திலும், கல்வியிலும் நீ மேற்கொள்ள வேண்டியன யாவை?

4. கருமமே கண்ணாயினர் செயல்களைக் குறிப்பிடுக.

5. புலியின் தன்மையாக என்ன காட்டப்படுகிறது? இதனால் அறிவிக்கப்படும் உண்மையினைப் புலப்படுத்துக.

---

## (ஆ) நன்னெறி

### நல்லவர் வன்சொல்லும் நல்லதே

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி(து) ஏனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க—ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ நன்னுதால் ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு. 1

### கல்விச் செருக்குக் கூடாது

கடலே அனையம்யாம் கல்வியால் என்னும்
அடலே(று) அனையசெருக்(கு) ஆழ்த்தி—விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலும் உண்ணப் படும். 2

### சிறந்த குணம்

உள்ளங் கவர்ந்தெழுந்து ஓங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு. 3

### விழுமியோர் இயல்பு

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதாது உலகில்
நிறையிருளை நீக்கும்மேல் நின்று. 4

### ஈகையின் உயர்வு

எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந்து என்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ—பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவுங் கனி. 5

1. குறிப்பு :

நன்னெறி : மனிதர்கள் அறிந்து நடந்துகொள்ள வேண்டும் வழிகளைக்கூறும் 40 வெண்பாக்களைக் கொண்ட நீதி நூல். (நன்மை + நெறி = நன்னெறி).

சிவப்பிரகாசர் : இவர் நடுநாட்டில் உள்ள துறைமங்கலம் என்னும் ஊரில் தோன்றியவர். தந்தை குமரசாமிப் பண்டாரம். வீர சைவ மரபினர். காலம் 17ஆம் நூற்றாண்டு. இயற்றிய நூல்கள்: பிரபுலிங்க லீலை, நால்வர் நான்மணிமாலை முதலியன.

2. அருஞ்சொல் விளக்கம் :

1. நல்லோன்-இங்குச் சாக்கிய நாயனாரைக் குறிக்கும்; சிலை-கல்; நுதல்-நெற்றி; ஒண்-சிறந்த; கருப்பு வில்லோன்-கரும்பு வில்லையுடைய மன்மதன்.

2. அடல்ஏறு-வலிய ஆண்சிங்கம்; முனிக்கரசு-அகத்தியர்; முகந்து-மொண்டு; பனி-குளிர்ச்சி.

3. தடங்கரை—பெரியகரை; விளம்பு-சொல்.

4. விழுமியோர் - சிறந்தவர்; திங்கள் - சந்திரன்; கறை-களங்கம்; உள்ளார்—நினையார்.

5. எம்+தந்தை=எந்தை; நல்கூர்வு-வறுமை; பசுமை+தொடி=பைந்தொடி—பசிய பொன்னால் ஆகிய வளையலணிந்த பெண்; பயன்-பழம்; அரம்பை-வாழை.

3. வினாக்கள் :

1. யாருடைய வன்சொல் இனிது?

2. கல்விச் செருக்குக் கூடாது என்பதனை ஆசிரியர் எவ்வாறு கூறியுள்ளார்?

3. எந்தக் குணம் சிறந்த குணமாகும்?

4. விழுமியோர் இயல்பினைப் புலப்படுத்துக.

5. நற்குடிப் பிறந்தாரின் ஈகையை எவ்வாறு விளக்கியுள்ளார்?

---

## (இ) திருக்குறள்

### வான் சிறப்பு

விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்(து)
உள்நின்று உடற்றும் பசி. 1

### அறன் வலியுறுத்தல்

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. 2

### அன்புடைமை

அன்பின் வழிய(து) உயிர்நிலை அஃதிலார்க்(கு)
என்புதோல் போர்த்த வுடம்பு. 3

### இனியவை கூறல்

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்(கு)
அணியல்ல மற்றுப் பிற. 4

### செய்ந்நன்றி அறிதல்

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 5

### அடக்கமுடைமை

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு. 6

### ஒழுக்கமுடைமை

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்; தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். 7

### பயனில சொல்லாமை

சொல்லுக சொல்லில் பயனுடைய சொல்லற்க
சொல்லில் பயனிலாச் சொல். 8

### புகழ்

தோன்றில் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலில் தோன்றாமை நன்று. 9

### வாய்மை

புறந்தூய்மை நீரால் அமையும்; அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும். 10

### கல்வி

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. 11

### காலமறிதல்

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து. 12

### ஊக்கமுடைமை

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை. 13

### ஆள்வினையுடைமை

முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 14

### வினைத்திட்பம்

எண்ணிய எண்ணியாங்(கு) எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின். 15

### நாடு

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா(து) இயல்வது நாடு. 16

### நட்பு

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு. 17

### மருந்து

அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு. 18

மானம்

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். 19

உழவு

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். 20

—திருவள்ளுவர்

1. குறிப்பு:

திருக்குறள்: திரு+குறள். அழகிய குறள் வெண்பாவினாலாகிய ஒரு நூல் என்பது பொருள். குறள் வெண்பா-இரண்டடிகளாலாகிய ஒரு வகைப்பா. தமிழில் உள்ள அற நூல்களில் ஒப்புயர்வற்ற உயர்ந்த நூல் திருக்குறள் ஆகும். இந்நூல் சாதி, சமய, இன வேறுபாடு கருதாமல் எல்லோராலும் விரும்பி ஏற்றுக்கொள்ளக்கூடியதாகும். அறம், பொருள், இன்பம் என்ற பகுதிகளை 133 அதிகாரங்களில் 1330 அருமையான குறட்பாக்களால் எடுத்தியம்புவது திருக்குறள்.

திருவள்ளுவர்: திருக்குறளின் ஆசிரியர் தெய்வப் புலவர் திருவள்ளுவர் ஆவார். இவர் வரலாறு திட்டமாக அறிவதற்கு இல்லை. காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு என்பர்.

2. அருஞ்சொல் விளக்கம்:

1. வான் சிறப்பு: மழையினது சிறப்பு.

விண் + இன்று = விண்ணின்று; விண்-மழை; இன்று-பெய்யாமல்; விரிநீர்-விரிந்த நீர்ப்பெருக்கினையுடைய கடல்; வியன் உலகம்-அகன்ற உலகம்; உடற்றும்-வருத்தும்.

2. அறன் வலியுறுத்தல்: அறத்தின் வலிமை கூறல்.

மாசு-குற்றம்; ஆதல்-ஆகக் கடவன்; அறன் அனைத்து-அறன் அவ்வளவே; ஆகுல நீர-ஆரவாரத் தன்மையுடையன.

3. அன்புடைமை: அன்புடையவனாக இருத்தல்.

அன்பின் வழியது–அன்பு முதலாக அதன்வழி நின்றது; உயிர்நிலை – உயிர் நின்ற வுடம்பு.

4. இனியவை கூறல்: இனிய சொற்களைச் சொல்லுதல்

பணிவு + உடையன் = பணிவுடையன்; பிற – மற்றைய அணிகலன்கள்.

5. செய்ந்நன்றி அறிதல்: பிறர் செய்த நன்மையை மறவாமை.

காலம் – துன்பம் வந்த காலம்; ஞாலம் – உலகம்; மாணப் பெரிது – மிகப் பெரியது.

6. அடக்கமுடைமை: மனமும் மொழியும் மெய்யும் தீய வழியில் செல்லாது அடங்குதலை யுடையவனாதல்.

உள் ஆறும் – மனத்தின்கண் ஆறிவிடும்; வடு – காயம், தழும்பு.

7. ஒழுக்கமுடைமை: நல்லொழுக்கம் உடையவனாதல்.

நன்றி – நன்மை, அறம்; வித்து – விதை, காரணமாக இருப்பது; இடும்பை – துன்பம்.

8. பயனில சொல்லாமை: நன்மை தராத சொற்களைச் சொல்லாமை.

பயனுடைய - பயனுடைய சொற்கள்; சொல்லற்க – சொல்லாதே.

9. புகழ்: அழியாது நிற்கும் கீர்த்தி.

தோன்றில்–மக்களாகப் பிறந்தால்; புகழொடு–புகழுக்குரிய நற்குணங்களோடு.

10. வாய்மை: உண்மை உரைத்தல்.

புறம் – உடல்; அகம் - மனம்; மனத்தூய்மையே வாய்மையாகும்.

**11.** கல்வி : கற்றற்குரிய கல்வியைக் கற்றல்.

கேடு + இல் = கேடில் – அழிவில்லாத; விழுச்செல்வம் – உயர்ந்த செல்வம்; மாடு – செல்வம்; மற்றையவை – பிற மணி, பொன் முதலான செல்வங்கள்.

**12.** காலமறிதல் : பகைவர்மேல் செல்வதற்குரிய காலத்தை அறிதல்.

கூம்பும் பருவம்–அடங்கி இருக்கும் காலம்; சீர்த்த இடம் – செல்லத் தகுந்த காலம். "ஓடுமீனோட உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு" என்பது ஔவையார் வாக்காகும்.

**13.** ஊக்கமுடைமை : மனக்கிளர்ச்சி உடையவராக இருத்தல்.

ஆக்கம்–செல்வம்; அதர்–வழி; உடையானுழை–உடையவனிடத்தில்.

**14.** ஆள்வினையுடைமை : மெய்ம் முயற்சி உடையவராக இருத்தல்.

திரு–செல்வம்; இன்மை–வறுமை; புகுத்திவிடும்–அடையச் செய்யும்.

**15.** வினைத்திட்பம் : தூய்மையான செயல்களைச் செய்பவனுக்குரிய மனவுறுதி.

எண்ணிய – அடையவேண்டும் என்று நினைத்தபொருள்கள்; எண்ணியாங்கு – நினைத்தவாறே; எய்துப – அடைவார்கள்; திண்ணியர் – மனவுறுதி உடையவர்.

**16.** நாடு : நாட்டின் சிறப்புக் கூறுதல்.

உறுபசி – மிக்கபசி; ஓவாப் பிணி - நீங்காத நோய்; செறுபகை – வெளியே இருந்து வந்து துன்பம் செய்யும் பகை; இயல்வது – இன்பமாக நடப்பது.

**17.** நட்பு : நட்பின் சிறப்புக் கூறுதல்.

'நீரவர் கேண்மை பிறைநிறை நீர; பேதையார் நட்பு மதிப்பின் நீர' என மாற்றிப்பொருள்கொள்க. நீரவர்–அறிவுடையார்;

கேண்மை - நட்பு; பிறை நிறை நீர - பிறைச் சந்திரன் நிறைந்துவரும் தன்மை போல நாள்தோறும் வளர்ந்து வரும்; பேதையார் - அறிவில்லாதவர்; மதியின் நீர - நிறைந்த மதி பிறகு குறைந்து வருதலைப் போன்று நாள்தோறும் தேய்ந்து ஒழியும்.

**18.** மருந்து: நோயைத் தீர்க்கும் மருந்தின் தன்மையைக் கூறுதல்.

அற்றுல் - முன்னுண்டது சீரணித்துப் போனல்; அளவு - சீரணிக்கும் அளவு; உய்க்கும் ஆறு-கொண்டு செலுத்தும் வழி.

**19.** மானம்: தம் நிலையில் தாழாமை; தாழ்வு வந்த பொழுது உயிர் வாழாமை.

நீப்பின் - நீங்கினல்; கவரிமா - ஒரு வகை மான்; மானம் வரின்-மானத்திற்குக் கேடு வருமானல், கவரிமா - தன் மயிர்த் திரளில் ஒன்றை இழந்தாலும் உயிர்வாழாது; அது போன்று பெரியோர் தம் பெருமைக்கு இழுக்கு வருமானல் உயிரை விடுவாரேயன்றி, மானத்தை விடமாட்டார்.

**20.** உழவு: உழவுத் தொழிலின் சிறப்புரைத்தல்.

உழுது + உண்டு = உழுதுண்டு: தொழுது + உண்டு= தொழுதுண்டு: வாழ்வார் – உரிமையுடன் வாழ்பவராவார்; தொழுதுண்டு பின் செல்பவர் - உரிமை இல்லாமல் பிறரைத் தொழுது அதனல் தாமும் உண்டு அவரைப் பின்பற்றிச் செல்பவர்.

**3. வினக்கள்:**

1. மழை பெய்யாது தவறுமாயின் என்ன நேரிடும்?

2. அறம் என்பது யாது?

3. உயிர் நிலைத்து வாழும் இடமாக எதனை வள்ளுவர் கூறுகின்ருர்?

4. அன்பு இல்லா உடம்பு எத்தன்மையது ?

5. ஒருவனுக்குச் சிறந்த அணிகளும், சிறந்த அணிகள் அல்லாதனவும் யாவை ?

6. உலகத்தினும் பெரியது யாது ?

7. ஆருத வடு என்று எதனைக் கூறுகின்ருர் வள்ளுவர் ? இதனல் நீ அறிவதென்ன ?

8. நல்லொழுக்கமும் தீயொழுக்கமும் ஒருவனுக்கு என்னென்ன உண்டாக்கும் ?

9. ஒருவன் எவ்வாறு சொற்களைச் சொல்லுதல் வேண்டும் ?

10. புறமும் அகமும் முறையே எவ்வெவற்ருல் தூய்மை யாகும் ?

11. அழியாத செல்வம் எது ?

12. கொக்கை உவமை காட்டித் திருவள்ளுவர் என்ன நீதியைப் போதிக்கின்ருர் ?

13. செல்வம் யாரிடம் வழி வினவிச் செல்லும் ?

14. முயற்சியால் ஒருவனுக்கு உண்டாவதென்ன ?

15. நல்ல நாட்டின் இலக்கணம் என்ன ?

16. அறிவுடையார், அறிவற்றவர் இவர்கள் நட்பிற்கு வள்ளுவர் காட்டும் உவமை என்ன ?

17. உடலை நீண்ட காலம் கொண்டு செலுத்தும் வழி யாது ?

18. கவரிமாவின் இயல்பு என்ன ? இதனை ஒத்தவர் யார் ? அவர் குணம் யாது ?

19. உழவின் சிறப்புப் பற்றித் திருவள்ளுவர் என்ன கூறுகின்ருர் ?

---

## (ஈ) நான்மணிக்கடிகை

### நல்லவர் எங்குந் தோன்றுவர்

கள்ளி வயிற்றில் அகில்பிறக்கும்; மான்வயிற்றில்
ஒள்ளரி தாரம் பிறக்கும்; பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும்; அறிவார்யார்
நல்லாள் பிறக்கும் குடி. 1

### வாழும் வகை

இன்னாமை வேண்டின் இரவெழுக; இந்நிலத்து
மன்னுதல் வேண்டின் இசைநடுக; — தன்னொடு
செல்வது வேண்டின் அறஞ்செய்க; வெல்வது
வேண்டின் வெகுளி விடல். 2

### உண்மை உரைப்பன

நாற்றம் உரைக்கும் மலருண்மை; கூறிய
மாற்றம் உரைக்கும் வினைநலம்; தூக்கின்
அகம்பொதிந்த தீமை மனமுரைக்கும்; முன்னம்
முகம்போல முன்னுரைப்ப(து) இல். 3

### போற்றப் படுபவர்

திரியழற் காணின் தொழுப; விறகின்
எரியழற் காணின் இகழ்ப; ஒருகுடியில்
கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றான்
இளமைபா ராட்டும் உலகு. 4

## தமக்கென ஓர் ஊரில்லார்

நல்லார்க்குந் தம்மூர்என்(று) ஊரில்லை; நன்னெறிச்
செல்வார்க்குந் தம்மூர்என்(று) ஊரில்லை — அல்லாக்
கடைகட்குந் தம்மூர்என்(று) ஊரில்லை தங்கைத்(து)
உடையார்க்கும் எவ்வூரும் ஊர். 5

—விளம்பி நாகனார்

**1. குறிப்பு :**

நான்மணிக்கடிகை : நான்கு மணித்துண்டுகள் என்பது பொருள். பொறுக்கி யெடுத்த சிறந்த நான்கு நீதிமணிகளால் ஆக்கப்பட்ட நூலாகும். இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று; 101 வெண்பாக்களைக் கொண்டது ஆகும்.

விளம்பிநாகனார் : இவர் விளம்பி என்ற ஊரினர் என்றும், இவரது இயற்பெயர் நாகனார் என்றும் சிலர் கூறுவர். காலம்—கடைச் சங்க காலம் என்பர்.

**2. அருஞ்சொல் விளக்கம் :**

1. அகில்-ஒரு வாசனைப்பொருள்; அரிதாரம்-ஒரு மருந்து; முத்தம் - முத்து; நல்லாள் - நல்லவர்.

2. இன்னுமை - இழிவு; இரவு எழுக - பிச்சை எடுத்தலை மேற்கொள்க; மன்னுதல் - நிலைத்து வாழுதல்; இசை - புகழ்; வெகுளி - கோபம்.

3. நாற்றம்-மணம்; மாற்றம்-சொல்; வினைநலம்-செய்யும் காரியத்தின் நன்மை; தூக்கின் - ஆராய்ந்து பார்த்தால்; பொதிந்த - பொருந்தியுள்ள; முன்னம் - மனக்கருத்து. உள்ளக்குறிப்பு

4. திரியழல் - விளக்கில் எரியும் சுடர்; தொழுப - தொழுவார்கள்; இகழ்ப - இகழ்வார்கள்; பாராட்டும் - போற்றிக் கொண்டாடும்.

5. கடைகள்–கீழ்மக்கள்; கைத்துடையார்–கைப்பொருள் உடையவர்கள்.

3. வினாக்கள் :

1. நல்லவர் எங்கும் தோன்றுவர் என்பதனை விளம்பி நாகனார் எவ்வாறு விளக்குகின்றார்?

2. உலகில் வாழும் வகையாகக் கடிகை ஆசிரியர் கூறுவ தென்ன?

3. மலருண்மை, வினை நலம், மனத்தில் பொருந்திய தீமை, உள்ளக் குறிப்பு — இவற்றை முறையே வெளிக் காட்டுவன யாவை?

4. திரியழல், விறகின் எரியழல்–இவற்றைக்கண்டு மக்கள் என்ன செய்கின்றனர்? இதனால் நீ அறிவது யாது?

5. தமக்கென்று ஓர் ஊர் இல்லாதவர் யார் யார்?

## (உ) ஆசாரக்கோவை

### எண்வகை நல்லொழுக்கங்கள்

நன்றியறிதல்; பொறையுடைமை; இன்சொல்லோ(டு)
இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை; கல்வியோ(டு)
ஒப்புரவு ஆற்ற அறிதல்; அறிவுடைமை;
நல்லினத் தாரோடு நட்டல் இவை எட்டும்
சொல்லிய ஆசார வித்து. 1

### பெரியோர் கண்ட ஒழுக்கங்கள்

வைகறை யாமம் துயிலெழுந்து தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை. 2

### நல்லறிவுடையார் செயல்

சுடரிடைப் போகார்; சுவர்மேல் உமியார்;
இடரெனினும் மாசுணி கீழ்தம்மேற் கொள்ளார்;
படைவரினும் ஆடை வளியுரைப்பப் போகார்;
பலரிடை ஆடை உதிராரே என்றும்
கடனறி காட்சி யவர். 3

### பிறர் ஓரிடம் புறப்படும் பொழுது செய்யத் தகாதவை

எழுச்சிக்கண் பிற்கூவார்; தும்மார்; வழுக்கியும்
எங்குற்றுச் சேறீரோ என்னரே; முன்புக்கு
எதிர்முகமா நின்றும் உரையார்; இருசார்வும்
கொள்வர் குரவர் வலம். 4

### பெரியார் முன் செய்யத் தகாதன

நகையொடு கொட்டாவி காறிப்புத் தும்மல்
இவையும் பெரியார்முன் செய்யாரே செய்யின்
அசையாது நிற்கும் பழி. 5

— பெருவாயின் முள்ளியார்

1. குறிப்பு :

ஆசாரக்கோவை : நல்லொழுக்க முறைகளை எடுத்துக் கூறும் நூல் ஆசாரக்கோவையாகும். இந்நூல் பதினெண்கீழ்க் கணக்கில் ஒன்று.

பெருவாயின் முள்ளியார்: ஆசாரக் கோவையின ஆசிரியர் பெருவாயின் முள்ளியார். காலம்: கி. பி. 5ஆம் நூற்றுண்டிற்கும் கி. பி. 8ஆம் நூற்றுண்டிற்கும் இடைப்பட்ட தென்பர்.

2. அருஞ்சொல் விளக்கம் :

1. பொறை — பொறுமை; ஒப்புரவு — உலக நடையை அறிந்து செய்யும் உபகாரம்; நட்டல்—நட்புச்செய்தல்; வித்து—விதை; அடிப்படைக்காரணம்.

2. வைகறையாமம்-விடியற்காலை; ஒண்பொருள்-சிறந்த பொருள்களை அடைவதற்குரிய வழிகள்; வாய்வதில்-பொருந்தும் முறையில்; முந்தையோர்—அறிவுடைய முன்னோர்.

3. சுடரிடைப்போகார்-விளக்கிற்கும் ஒருவருக்கும் இடையில், அவர்மேல் தம் நிழல் படும்படி போகார்; சுவர்மேல் உமியார் — சுவருக்கு இப்பக்கத்தில் நின்று அப்பக்கம் பாராமல் எச்சில் உமிய மாட்டார்; மாசு+உணி=மாசுணி — அழுக்கடைந்த ஆடை; இடர் — துன்பம்; ஆடைவளிஉரைப்ப—தம் ஆடையின் காற்று பிறர்மேல் படும்படியாக; கடனறி காட்சியவர்—கடமையுணர்ந்த அறிவுடையோர்.

4. எழுச்சி-எழுந்து செல்லல்; பிற்கூவார்-பின்னிருந்து அழைக்கமாட்டார்கள்; எங்குற்றுச் சேறீர்-எங்கு செல்கின்றீர்; முன் புக்கு-முன் புகுந்து; இருசார்வும்-இருபக்கமும்; குரவர்-பெரியோர்.

5. காறிப்பு—காறுதல்; அசையாது—நீங்காது.

3. வினாக்கள் :

1. ஆசார வித்து எனக் கூறப்படுவன யாவை?

2. பெரியார் கண்ட ஒழுக்கங்களாக ஆசாரக் கோவை ஆசிரியர் கூறுவதென்ன?

3. கடனறிகாட்சியவர் செயல்களாகக் கூறப்படுவன யாவை?

4. பிறர் ஓரிடம் புறப்படும்பொழுது செய்யத் தகாதவை யாவை?

5. பெரியார் முன் செய்யத் தகாதனவாகக் கூறப்படுவன யாவை?

## III. கதைப் பகுதி

### (அ) ஆசியசோதி

#### புத்தரும் ஏழைச் சிறுவனும்

(நாடு நகரங்களைத் துறந்து, கானகத்தையடைந்த கௌதம புத்தர் வழிநடந்த களைப்பினால் சோர்வுற்று மயங்கி மண்ணில் சாய்ந்தார். அதனை, ஆங்கே ஆடுகள் மேய்த்துக் கொண்டிருந்த ஓர் ஏழைச்சிறுவன் கண்ணுற்று மனமிளகி ஓடி வருகின்றான்.)

#### சிறுவன் செயல்

ஆடுகள் மேய்த்துவரும்—ஒருவன்
ஆயர் குலச்சிறுவன்
வாடிக் கிடந்தவனைச்—செல்லும்
வழியின் மீதுகண்டான். (1)

வையகம் வாழ்ந்திடவே—பிறந்த
மாதவச் செல்வன்முகம்
வெய்யிலில் வெந்திடாமல்—தழைகள்
வெட்டி அருகில்நட்டான். (2)

தெய்வ குலத்திவனை—எளியேன்
தீண்டலு மாகாதினிச்
செய்வதும் யாதெனவே—சிறிது
சிந்தை தயங்கிநின்றான். (3)

உள்ளம் தெளிந்துடனே—வெள்ளாடு
ஒன்றை யழைத்துவந்து
வள்ளல் மயக்கொழிய—மடுவை
வாயில் கறந்துவிட்டான். (4)

புத்தர் எழுந்து பால் கேட்டல்

நிலத்தில் கிடந்தஐயன்—மெல்ல
நிமிர்ந்து தலைதூக்கிக்
''கலத்தினி லேகொஞ்சம்—பாலைக்
கறந்து தருவாய்''என்றான். (5)

சிறுவன் மறுத்தல்

"ஐயையோ! ஆகாது''என்றான்—சிறுவன்
"அண்ணலே! யானும்உனைக்
கையினால் தீண்டவொண்ணு—இடையனோர்
காட்டு மனிதன்''என்றான். (6)

புத்தர் அறிவுரை

உலகம் புகழ்பெரியோன்—இந்த
உரையினைக் கேட்டந்நாள்
அலகில் கருணையினால்—சொன்ன
அமுத மொழியிதுவாம்: (7)

"இடர் வரும்போதும்—உள்ளம்
இரங்கி டும்போதும்
உடன் பிறந்தவர்போல்—மாந்தர்
உறவு கொள்வரப்பா''!. (8)

"பிறப்பி னாலெவர்க்கும்—உலகில்
பெருமை வாராதப்பா!
சிறப்பு வேண்டுமெனில்—நல்ல
செய்கை வேண்டுமப்பா! (9)

"நன்மை செய்பவரே—உலகம்
நாடும் மேற்குலத்தார்
தின்மை செய்பவரே—அண்டித்
தீண்ட வொண்ணாதார்." (10)

சிறுவன் பால் தருதல்

நிலத்துயர் ஞானி—இவை
நிகழ்த்தி, "என்தம்பீ!
கலத்தினி லேகொஞ்சம்—பாலைக்
கறந்து தா" என்றான். (11)

ஆயர் சிறுவனும்—கலத்தில்
அளிக்க, வாங்கியுண்டு
தாயினும் இனியன்—கொண்ட
தளர்ச்சி நீங்கினனே. (12)

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

1. குறிப்பு :

(அ) ஆசிய சோதி: ஆசியாவின் சோதியாக விளங்கியவர் புத்தர் பெருமான் ஆவார். அவர்பால் மிகவும் ஈடுபட்ட ஆங்கில அறிஞர் சர். எட்வின் ஆர்னால்டு என்பவர் புத்தர் பெருமான் வரலாற்றை "ஆசிய சோதி" என்ற ஒரு பெரிய நூலாகப் பாடியுள்ளார். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் அந் நூலைத் தழுவி "ஆசிய சோதி" என்ற பெயரில் இந் நூலினை இயற்றினார்.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை : பிறப்பிடம்-கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள சுசீந்திரத்தையடுத்த தேரூர்.

பெற்றோர்–சிவதாணுப் பிள்ளை, ஆதிலட்சுமி அம்மையார். இவர் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர். மலரும் மாலையும் என்பது இவரால் பாடப்பட்ட உயரிய நூலாகும் காலம்: 1876-1954.

## 2. அருஞ்சொல் விளக்கம் :

வாடிக்கிடந்தவன் – புத்தர் பெருமான்; வையகம் – உலகம்; மாதவம் - சிறந்த தவம்; வள்ளல் - இங்குப் புத்தர் பெருமான்; மடு – பால் மடி; கலம் - பாத்திரம்; அண்ணல் - பெருமையிற் சிறந்தவன்: அலகில் - அளவற்ற; இடர் - துன்பம்; நாடும் - விரும்பும்; தின்மை - தீமை; ஞானி - அறிஞன்.

## 3. வினாக்கள் :

1. ஆடுகள் மேய்த்து வரும் சிறுவன் வழியில் கண்ட காட்சி என்ன? அதனைக் கண்ட அவன் என்ன செய்தான்?

2. புத்தர் பெருமான் சிறுவனிடம் கேட்டதென்ன? அதற்கவன் அளித்த மாற்றம் யாது ?

3. புத்தர் பெருமான் சிறுவனிடம் கூறிய அறவுரைகளைத் தொகுத்து எழுது.

# (ஆ) குசேலோபாக்கியானம்

### சுசீலையின் தன்மை

மாசிலாக் குலத்து வந்தாள்,
வருவிருந்து உவப்ப ஊட்டும்
நேசமிக் குடையாள், கொண்கன்
நினைப்பறிந்து ஒழுகும் நீராள்,
தேசுறு வாய்மை உள்ளாள்,
சினந்திடல் என்றும் இல்லாள்,
பேசுதிண் கற்பு வாய்த்தாள்,
பெற்றதே கொண்டு உவப்பாள். (1)

### சுதாமரின் எளிய வாழ்க்கை

இருநிலத் தியாவர் கண்ணும்
　　‘ஏற்பதை யிகழ்ச்சி’ யென்ன
ஒருவிய உளத்தான், காட்டில்
　　உதிர்ந்துகொள் வாரு மின்றி
அருகிய நீவா ரப்புல்
　　தானியம் ஆராய்ந் தாராய்ந்(து)
உருவவொள் நகத்தாற் கிள்ளி
　　எடுத்துடன் சேரக் கொண்டு. (2)

வந்துதன் மனைகைந் நீட்ட
　　வாங்கிமற் றவற்றைக் குற்றி
அந்தமெல் லியல்பா கஞ்செய்(து)
　　அதிதிக்கோர் பாகம் வைத்துத்
தந்ததன் பங்க யின்று
　　தவலரும் உவகை பூத்து
மந்திர மறைகட் கெட்டா
　　மாலடி நினைந்தி ருப்பான். (3)

### மக்கள் உணவு பெறத் துன்புறுதல்

ஒருமகவுக்கு அளித்திடும்போது ஒருமகவு
　　கைநீட்டும், உந்தி மேல்வீழ்ந்(து)
இருமகவுங் கைநீட்டும், மும்மகவும்
　　கைநீட்டும், என்செய் வாளால்!
பொருமிஒரு மகவழும்,கண் பிசைந்தழும்மற்
　　றொருமகவு, புரண்டு வீழாப்
பெருநிலத்திற் கிடந்தழும்மற் றொருமகவெங்
　　ஙனம்சகிப்பாள் பெரிதும் பாவம்! (4)

'அந்தோ ! என் வயிற்றெழுந்த பசி அடங்கிற்று
இல்லை !' என அழுமால் ஓர்சேய்;
'சிந்தாத கஞ்சிவாக் கிலேஎனக்கன்
ஞய் !' எனப்பொய் செப்பும் ஓர்சேய்;
முந்தார்வத்து ஒருசேய்மி சையப்புகும்போ
தினில்ஓர்சேய் முடுகி ஈர்ப்ப,
நந்தாமற்று அச்சேயும் எதிரீர்ப்பச்
சிந்துதற்கு நயக்கும் ஓர்சேய். (5)

'அடுத்தமனேச் சிருஞெருவன், 'இன்றுநுமது
அகம்கறியென் அட்டார்?' என்று
தொடுத்துவிஞயினஞல்,அச்சொற்பொருள்யாது?
அதுதான்எச் சுவைத்து ?அன் ஞய் !நீ
எடுத்துரை,'என் றிடும்மகவுக்கு 'உரைக்கில்அது
செய்யெனில்என் செய்வாம்;' என்று
'மடுத்தவஃது அறிந்திலேன்.' எனமற்றென்
றுரைத்துஅதனே மறக்கச் செய்வாள். (6)

சுசீலையின் பெருமைக் குணம்

இவ்வாறு மிடியென்னும் பெருங்கடலுள்
அழுந்தியும்தற்கு இனிமை சான்ற
செவ்வாய்மை அந்தணனே வெறுத்(து) உரையாள்,
அலர்மொழிகள் சிறிதுஞ் செப்பாள்,
துவ்வாமை மைந்தர்கள்பால் மறந்தும் இயற்
றுள், அவள்தன் சுகுணம் என்னே !
'எவ்வா(று) இத் துயர்க்கடல்நீந் துவம்' எனுமோர்
எண்ணமுளத்(து) என்றும் உண்டால். (7)

சுசீலை குசேலரிடம் கூறுவன

"கொழுந்துவிட்(டு) எரியும் முத்தழல் வளர்க்கும்
கோதிலா முனிவ! நம்சிறுர்கள்
அழுந்துபட்(டு) ஏங்க எழும்பசி ஒழிக்க
அனமிலா(து) உயங்கினர் அந்தோ!
முழங்குமீர் ஒன்பான் புராணம்நன்(கு) ஓர்ந்தோர்
மூரலால் உயிர்நிற்கும் என்று
வழங்குவர்; அச்சொல் மறிதிரைக் கடல்சூழ்
மண்ணிடத்(து) உண்மையே யாமே. (8)

"யாதவர் குலத்தில் தோன்றிய அரசர்
யாவர்க்கும் அதிபனும் இணையில்
மாதவன் உடன்நீ பலகலைக் கடலை
வாய்மடுத் தனையென வகுப்பார்;
ஆதலின் அப்பீ தாம்பரன் மருங்கில்
அணைந்(து)அவன் பாற்பெருஞ் செல்வம்
தீ(து)அறக் கொண்டு கொடுத்துநஞ் சிறுவர்
செல்லல் நோய் தவிர்க்குதல் வேண்டும்" (9)

—வல்லூர் தேவராசப் பிள்ளை

1. குறிப்பு:

(ஆ) குசேலோபாக்கியானம்: குசேலருடைய வரலாற்றைக் கூறும் கிளைக்கதை என்பது பொருள். குசேலர்–கந்தலான ஆடையை உடுத்தியவர். உபாக்கியானம்–கிளைக்கதை. இந் நூலின் ஆசிரியர் வல்லூர் தேவராசப் பிள்ளையாவார். காலம்: கி. பி. 19ஆம் நூற்றுண்டு.

2. அருஞ்சொல் விளக்கம்:

1. மாசு–குற்றம்; நேசம் – அன்பு; கொண்கன் – கணவன்; நினைப்பறிந்து ஒழுகுதல் – குறிப்பறிந்து நடத்தல்; நீராள் –

நீர்மை (தன்மை) உடையவள்; தேசு-ஒளி; திண்கற்பு-உறுதியான கற்பு.

2. ஒருவிய – நீக்கிய; அருகிய – அற்பமான; நீவாரப்புல்-ஒருவகைக் காட்டுப்புல்; புல்தானியம் – புல்லரிசி.

3. மனை – மனையாள்; மெல்லியல் – மென்மைத் தன்மை வாய்ந்த சுசீலை; அதிதி – விருந்தினர்; அயின்று – உண்டு; தவலரும் - கெடுதலில்லாத; மறை-வேதம்; மால்-திருமால்.

4. மகவு-குழந்தை; உந்தி-விரைந்து; பொருமி-தேம்பி; வீழா – விழுந்து.

5. சேய் – குழந்தை; வாக்கிலை – வார்க்கவில்லை; ஆர்வம் – ஆசை; மிசைய-உண்ண; முடுகி-விரைந்து; ஈர்ப்ப – இழுக்க; நந்தா (மல்) – பின்னிடாமல்; நயக்கும் – விரும்பும்.

6. அட்டார் – சமைத்தார்; அன்னுய் – அன்னையே.

7. மிடி – வறுமை; அந்தணன் - இங்குக் குசேல முனிவர்; அலர் - பழிச்சொல்; செப்பாள் – சொல்லாள்; துவ்வாமை – வெறுப்பை; சுகுணம் – நல்ல குணம்.

8. கோது-குற்றம்; முத்தழல்-மூன்றுவகையான தீ; உயங்கினர் – வாடினர்; ஈரொன்பான் – பதினெட்டு; ஓர்ந்தோர் – உணர்ந்தவர்கள்; முரல் – உணவு; என்னு - என்று; மறிதிரை-மடங்கிவிழும் அலை.

9. யாதவர்-யது என்னும் அரசனது மரபினர்; அதிபன்-தலைவன். மாதவன்-கண்ணன்; பலகலைக்கடல்-பல கலைகளாகிய கடல், கலைகள்; வாய்மடுத்தனை-உண்டாய்; கற்ருய், நூலைக் கடல் என்று கூறியதற்கு ஏற்றவாறு, கற்றலை, வாய்மடுத்தனை எனக் கூறப்பட்டது; வகுப்பார்-வகுத்துச் சொல்வார்கள்; பீதம் + அம்பரன் = பிதாம்பரன் – பொன்னுடை அணிந்த கண்ணன்; செல்லல் நோய் – வறுமைத்துன்பம்.

3. **வினாக்கள் :**

1. சுசீலையின் இயல்புகளைக் குறிப்பிடுக.

2. சுதாமரின் நித்திய வாழ்க்கை முறையினை எழுதுக.

3. குசேலரின் மக்கள் உணவுக்காகப் படுந்துயரினை விவரித்து எழுதுக.

4. சுசீலையின் பெருமைக் குணத்தை எழுதுக.

5- சுசீலை குசேலரிடம் என்ன கூறினாள் ?

# IV. பல்சுவைப் பகுதி

## (அ) முக்கூடற்பள்ளு

### மழைக்குறி

ஆற்று வெள்ளம் நாளை வரத்
    தோற்று தேகுறி —மலை
யாள மின்னல் ஈழ மின்னல்
    சூழ மின்னுதே !
நேற்றும் இன்றும் கொம்பு சுற்றிக்
    காற்ற டிக்குதே —கேணி
நீர்ப் படுசொறித் தவளை
    கூப்பிடு குதே !
சேற்று நண்டு சேற்றில் வளை
    ஏற்ற டைக்குதே —மழை
தேடி யொரு கோடி வானம்
    பாடி யாடுதே !
போற்று திரு மால ழகர்க்
    கேற்ற மாம்பண்ணைச் —சேரிப்
புள்ளிப் பள்ளர் ஆடிப் பாடித்
    துள்ளிக் கொள்வோமே.

—என்னயினுப் புலவர்

1. குறிப்பு :

முக்கூடற்பள்ளு : பள்ளு என்பது எளிய நடையில் எழுதப்படும் பாடல்களைக் கொண்ட ஒரு வகை நூல்; பள்ளர் வாழ்க்கையை விளக்குவது. பள்ளர் – உழவர். இப்பள்ளு திருமுக்கூடல் என்னும் தலத்தில் உள்ள திருமால்மீது பாடப் பெற்றது. திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரவருணி யாற்றங் கரையில் உள்ள சீவலப்பேரி என வழங்கப்படும் சிற்றூரே திருமுக்கூடல் ஆகும்.

ஆசிரியர் : இந்நூலின் ஆசிரியரைப்பற்றித் தெளிவாக அறிதற்கில்லை. ஆயினும் ஒரு சிலர் என்னயினுப் புலவர் என்று கூறுவர். காலம் : கி பி. 17ஆம் நூற்றுண்டு.

இப் பாடலானது மழைக்குறியைக் கண்டு உழவர்கள் ஆடிப்பாடி மகிழ்வதைக் குறிக்கும்.

2. அருஞ்சொல் விளக்கம் ;

ஈழம் – இலங்கைத் தீவு; 'ஈழமும் கன்னியும் எதிர்த்து மின்னினுல் நாளை மழை பெய்யும்' என்பது தென்பாண்டி நாட்டில் வழங்கிவரும் பழமொழி; ஈழம்–தென்கிழக்குத் திசை யில் உள்ளது; கொம்பு சுற்றிக் காற்றடித்தல் – காற்றுச்சுழற்றி அடித்தல்; கேணி-கிணறு; சொறித்தவளை – சொறிகளையுடைய தவளை; மாம்பண்ணை–பெரிய பண்ணை; புள்ளிப்பள்ளர்.–பள்ளர் வகையினரெல்லாம்.

3. வினுக்கள் :

1. ஆற்றிலே வெள்ளம் வருவதற்காகத் தோன்றும் குறிகள் யாவை ?

2- மழைக்குறி கண்டு உழவர்கள் என்ன செய்தனர் ?

## (ஆ) மீனாட்சியம்மை குறம்

### பொதிய மலை

### குறத்தி மலைவளம் கூறல்

திங்கள்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை,
தங்குபுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழுமலை,
அங்கயற் ணம்மைதிரு வருள்சுரந்து பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை பொதியமலை என்மலையே (1)

சிங்கமும் வெங்களிறுமுடன் விளையாடும் ஒருபால்
சினப்புலியும் மடப்பிணையும் திளைத்திடுமங்
கொருபால்,
வெங்கரடி மரையினெடும் விளையாடும் ஒருபால்,
விடவரவும் மடமயிலும் விருந்தயரும் ஒரு பால்,
அங்கணமர் நிலங்கவிக்கும் வெண்கவிகை நிழற்கீழ்
அம்பொன்முடி சூடும்எங்கள் அபிடேக வல்லி
செங்கமலப் பதம்பரவும் கும்பமுனி பயிலும்
தென்பொதிய மலைகாண்மற் றெங்கள்மலை
அம்மே! (2)

### குறக்குடியின் இயல்பு

கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக்
கிழங்குகல்லி எடுப்போம்;
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக்
கொடியில்வைத்துத் தொடுப்போம்;
பழம்பிழிந்த கொழுஞ்சாறும்
தேறலும்வாய் மடுப்போம்;
பசுந்தழையும் மரவுரியும்
இசைந்திடவே உடுப்போம்;

செழுந்தினையும் நறுந்தேனும்
விருந்தருந்தக் கொடுப்போம்;
சினவேங்கைப் புலித்தோலின்
பாயலிற்கண் படுப்போம்;
எழுந்துகயற் கணிகாலில்
விழுந்துவினை கெடுப்போம்;
எங்கள்குறக் குடிக்கடுத்த
இயல்பிதுகாண் அம்மே, (3)

—குமர குருபரர்

1. **குறிப்பு :**

மீனாட்சியம்மை குறம்: மதுரையில் கோயில் கொண்டெழுந்தருளி இருக்கும் மீனாட்சியம்மை மீது பாடப்பட்ட குறம் என்பது பொருள். குறம்—இஃது ஒரு வகைச் சிறு நூல். குறத்திப் பாட்டு எனவும் குறவஞ்சி எனவும் வழங்கப் பெறும். இதன் ஆசிரியர் குமரகுருபர அடிகள் ஆவார்.

2. **அருஞ்சொல் விளக்கம் :**

1. திங்கள்-சந்திரன்; தென்றல்-தென் திசையிலிருந்து வீசும் மெல்லிய காற்று; புயல் - மேகம்; தமிழ் முனிவன் - அகத்திய முனிவர்; அங்கயற்கண் அம்மை-மீனாட்சியம்மை; பொங்கு-மிகுந்த.

2. வெங்களிறு - வெம்மை + களிறு - கொடிய யானை; மடப்பிணை - இளமை பொருந்திய பெண்மான்; மரை - ஒரு வகை மான்; விடம் + அரவு = விடவரவு-விடம் பொருந்திய நாகம்; விருந்தயரும் - (ஒன்றற்கொன்று) விருந்து செய்யும்; கவிகை-குடை; அபிடேகவல்லி - மீனாட்சியம்மை; கமலப்பதம்-தாமரை போன்ற திருவடிகள்; பரவும்-வழிபடுகின்ற; கும்பமுனி-அகத்திய முனிவர்; பயிலும்-வாழ்கின்ற.

3. கொழுங்கொடி - செழுமையான கொடி; கல்லி - தோண்டி; குறிஞ்சி மலர்-மலைப் பகுதிகளில் மலரும் ஒரு வகை மலர்; தேறல் - தேன்; வாய் மடுப்போம் - வாயிற் பெய்து கொள்வோம்; பாயல்-படுக்கை, கயற்கண்ணி-கயல் போன்ற கண்ணையுடையவள், மீனாட்சி.

3. **வினாக்கள் :**

1. பொதிய மலையின் வளமாகக் கூறப்படுவன யாவை?

2. பொதிய மலையில் வாழும் உயிரினங்கள் எவ்வாறு கூடி வாழ்கின்றன ?

3. குறக்குடியின் இயல்புகளாகக் குறத்தி கூறுவதென்ன?

---

## (இ) பாம்பும் எள்ளும்

ஆடிக் குடத்தடையும் ஆடும்போ தேயிரையும்
மூடித் திறந்தால் முகங்காட்டும்—ஓடிமண்டை
பற்றிப் பரபரெனும் பாரில்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம் பெள்ளெனவே ஓது.

—காளமேகப் புலவர்

1. **குறிப்பு :**

காளமேகப் புலவர் : இவர் கவிகளை விரைந்துபாடும் ஆற்றல் பெற்றவர். காலம் 16ஆம் நூற்றாண்டு.

2. **அருஞ்சொல் விளக்கம் :**

பாம்பு : ஆடிக் குடத்தில் அடையும்; ஆடும்போதே சீறும்; பாம்பைக் குடத்திலிட்டு மூடித் திறப்போமானால் தன் தலையைக் காட்டும்; அதன் விடம் சிரத்திலேறும்; பிளவுபட்ட நாக்கினை யுடையது.

எள் : செக்கிலிட்டு ஆட்டி எண்ணெயாகக் குடத்தில் அடைக்கப்படும். எள்ளைச் செக்கிலிட்டு ஆட்டும் போது, செக்கானது ஒரு விதமான கூச்சலை எழுப்பும்; எண்ணெய்க் குடத்தை மூடித் திறந்தால் அதில் நம் முகம் தெரியும்; எண்ணெயைத் தலையிலிட்டுப் பரபரென்று தேய்ப்பார்கள்; எண்ணெய் எடுக்கப்பட்ட பிறகு பிண்ணாக்கு உண்டாகும்.

மண்டை - தலை ; பிண்ணாக்கு-பிள் + நாக்கு = பிண்ணாக்கு

## (ஈ) பாரதியார் கவிதைகள்

### தொழில்

இரும்பைக் காய்ச்சி உருக்கிடு வீரே!
இயந்தி ரங்கள் வகுத்திடு வீரே!
கரும்பைச் சாறு பிழிந்திடு வீரே!
கடலில் மூழ்கிநன் முத்தெடுப் பீரே!
அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயி ரந்தொழில் செய்திடு வீரே!
பெரும்பு கழ்நுமக் கேயிசைக் கின்றேன்.
பிரம தேவன் கலையிங்கு நீரே! (1)

மண்ணெ டுத்துக் குடங்கள்செய் வீரே!
மரத்தை வெட்டி மனைசெய்கு வீரே!
உண்ணக் காய்கனி தந்திடு வீரே!
உழுது நன்செய்ப் பயிரிடு வீரே!
எண்ணெய் பால்நெய் கொணர்ந்திடு வீரே!
இழையை நூற்றுநல் லாடைநெய் வீரே!
விண்ணி னின்றெமை வானவர் காப்பார்!
மேவிப் பார்மிசைக் காப்பவர் நீரே! (2)

—பாரதியார்

1. குறிப்பு:

பாரதியார் கவிதைகள்: தேசீயக் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் அவர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பே பாரதியார் கவிதைகள் ஆகும்.

சுப்பிரமணிய பாரதியார்: பிறப்பிடம்—எட்டையபுரம்; பெற்றோர்—சின்னசாமி ஐயர், இலட்சுமி அம்மாள். இவர் தமிழ், ஆங்கிலம், இந்தி முதலான பல மொழிகளை அறிந்தவர்; தமிழார்வமும் சுதந்திர வேட்கையும், சமத்துவ உணர்ச்சியும், நாட்டுப்பற்றும் கொண்டவர். இவருடைய கவிதைகள் உணர்ச்சி யூட்டும் தன்மை வாய்ந்தவையாகும். காலம்: 1882—1921.

**2. அருஞ்சொல் விளக்கம் :**

1. வகுத்தல்-அமைத்தல்; அரும்பும்-தோன்றும்.

2. மனை-வீடு; இழை-நூலிழை; விண்-வானம்; மேவி-பொருந்தி.

**3. வினாக்கள் :**

1. பிரமதேவன் கலையாகக் கூறப்படுவன யாவை?

2. உலகத்தின் மீதிருந்து நம்மைக் காப்பவர் யாவர்?

---

## (உ) அழகும் விடுதலையும்

'என்னை ஏனோ அழகாக
ஈசன் படைக்க வில்லை'யென
எண்ணி, எண்ணி ஒருகாக்கை
ஏங்கிச் சுற்றித் திரிகையிலே,
கூட்டில் அழகிய கிளியொன்றைப்
போட்டு அடைத்து ஒருபையன்
வாட்டி வதைக்கக் கண்டதுவே;
மனத்தில் வருத்தம் கொண்டதுவே.
'அழகாய் என்னைப் படைத்திருந்தால்
அடியே னுக்கும் இக்கதிதான்;
அழகைக் காட்டிலும் விடுதலையை
அளித்தார் ஆண்டவன்' என்றதுவே.

—அழ. வள்ளியப்பா

**1. குறிப்பு :**

**1.** மலரும் உள்ளம் : குழந்தைக் கவிஞர் திரு. அழ. வள்ளியப்பா அவர்கள் பாடிய குழந்தைக் கவிகளின் பாடல் தொகுதியே மலரும் உள்ளம் ஆகும். எளிய நடை; இனிய சொற்கள்; உயர்ந்த கருத்துக்கள்; அழகிய தமிழ்க் கவிதைகள் – இவை நிறைந்தது மலரும் உள்ளம் ஆகும்.

அழ. வள்ளியப்பா இவர் குழந்தைக் கவிஞர் எனப் பாராட்டப்படுபவர் ஆவார். இவர் இப்பொழுது சென்னையில் வாழ்ந்து வருகின்றார்.

2. **வினாக்கள் :**

1. காக்கை என்ன எண்ணி ஏக்கமுற்றது ?
2. சிறுவன் கிளிக்கு என்ன தீங்கு செய்தான் ?
3. கிளியின் துயரைக் கண்ட காக்கை என்ன நினைத்தது ?
4. இதனால் நீ அறியும் நீதி யாது ?

---

## (ஊ) நிலாக் காட்சி

முதுமைநிலா அழகுநிலா
முளைத்ததுவிண் மேலே—அது
பழமையிலே புதுநினைவு
பாய்ந்தெழுந்தாற் போல
அழுதமுகம் சிரித்ததுபோல்
அல்லிவிரிந் தாற்போல்—மேல்
சுழற்றிஎறிந்த வெள்ளித்தட்டு
தொத்திக்கிடந் தாற்போல்
(முதுமைநிலா அழகுநிலா)

குருட்டுவிழியும் திறந்ததுபோல்
இருட்டில்வான விளக்கு !—நம்
பொருட்டுவந்து பாடிஆடிப்
பொழுதுபோக்கத் துவக்கு !
மரத்தினடியில் நிலவு வெளிச்சம்
மயிலின்தோகை விழிகள்
தெருக்கள்எலாம் குளிரும்ஒளியும்
சேர்ந்துமெழுகும் வழிகள்
(முதுமைநிலா அழகுநிலா)

— புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

1. **குறிப்பு :**

பாரதிதாசன் : இவர் புரட்சிக் கவிஞர் எனப் பாராட்டப் படுபவர். இயற்பெயர் கனக சுப்புரத்தினம். தந்தை கனகசபை முதலியார். புதுச்சேரியில் வாழ்ந்து வருகிறார். இவர் இயற்றிய நூல்கள் : பாரதிதாசன் கவிதைகள், பாண்டியன் பரிசு, குடும்ப விளக்கு, அழகின் சிரிப்பு, நல்ல தீர்ப்பு முதலியன.

2. **அருஞ்சொல் விளக்கம் :**

முதுமைநிலா-முழுநிலா

---

## (எ) வாழ்த்து

வாழிய செந்தமிழ் வாழ்கநற் றமிழர்
வாழிய பாரத மணித்திரு நாடு.

— பாரதியார்.

1. குறிப்பு :

வாழ்த்து : இப்பாடல் பாரதியார் கவிதைகளில் 'வாழிய செந்தமிழ்' என்ற பாடலின் இரண்டு அடிகளாகும்.

2. **அருஞ்சொல் விளக்கம் :**

நன்மை + தமிழர் = நற்றமிழர்; மணித்திரு நாடு — அழகிய தாய்நாடு.

---

# 1. கப்பலோட்டிய தமிழர்

[வித்துவான் எம். சுந்தரேசன் அவர்கள்]

நம் பாரதநாடு இன்று சுதந்திரம் பெற்றுக் குடியரசு நாடாகத் திகழ்கின்றது. நம் நாட்டு விடுதலைக்காகத் தம் இன்ப வாழ்வைத் துறந்து உரிமைப் போரில் ஈடுபட்ட பெரியார் பலராவர். அவர்களுள் கப்பலோட்டிய தமிழர் எனப் பாராட்டப் படும் வ. உ. சிதம்பரம் பிள்ளையும் ஒருவராவார்.

திருநெல்வேலி மாவட்டத்தில் ஒட்டப்பிடாரம் என்ற சிற்றூரிலே, வேளாளர் மரபைச் சார்ந்த உலகநாத பிள்ளை என்ற அறிஞரின் அருமை மகனாராக 1872ஆம் ஆண்டு, செப்டம்பர் திங்கள், 5ஆம் நாள் நம் சிதம்பரனார் பிறந்தார். சிதம்பரனார் இளமையில் உள்ளூரிலே ஆரம்பக் கல்வியைப் பயின்று, பின்னர் தூத்துக்குடியில் உயர் கல்வியைப் பெற்றார். சிதம்பரனார் பள்ளிப் படிப்போடு தம் தந்தையாரிடத்துத் தமிழ் நூல்கள் பலவற்றையும் ஐயந்திரிபறக் கற்றுத் தெளிந்தார். பிறகு சிதம்பரனார் வழக்கறிஞர் கல்வியிலும் கற்றுத்தேர்ந்து வழக்கறிஞர் ஆனார்.

வழக்கறிஞர் சிதம்பரனார் பின்னர் வக்கீல் தொழிலை மேற்கொண்டார். அத் தொழிலில் அவர் வல்லவர் எனப் பெயர் பெற்றார். அதனால் தூத்துக்குடியிலும், அதன் சுற்றுப்புறங்களிலும் அவர் பெயர் பரவலாயிற்று. பொய் வழக்குகளை அவர் மேற்கொள்ள மாட்டார்; நியாயமான வழக்குகளை

ஊதியமின்றியும், தாமே வலிய வந்து ஏற்று நடத்து வார். அவர் வழக்கறிஞர் தொழிலை நடத்தி வந்த பொழுதே ஏழை மக்கட்கும் தொழிலாளர்கட்கும் பல நன்மைகளைப் புரிந்து அவர்களது அன்பையும் பெற்றார்.

சிதம்பரனார் வள்ளியம்மை என்ற பெண்மணி யைத் திருமணம் செய்துகொண்டார். அவ்வம் மையார் பெண்களுக்குரிய உயர்குணங்கள் யாவும் அமையப் பெற்றவராதலின் அவர்கள் இல்வாழ்க்கை நல்வாழ்க்கையாகத் திகழ்ந்தது. எனினும், அவ்வின்ப வாழ்வு நெடுங்காலம் நிலைத்திராமல், 1901 ஆம் ஆண்டில் அம்மையார் நோய்வாய்ப்பட்டு இறைவன் திருவடியை அடைந்தனர். அருமை மனைவியாரின் பிரிவால் மனம் வருந்தி இருந்த பிள்ளையவர்கள் அன்பர்களின் வற்புறுத்தலுக்கு இணங்கி, மீனாட்சி யம்மை என்ற மாதரசியை மறுதாரமாக மணம்புரிந்து கொண்டார். இவ்வம்மையாரும் வள்ளியம்மையாரின் அருங்குணங்கள் அனைத்தும் வாய்க்கப் பெற்றிருந்தா ராதலின், சிதம்பரனாரின் இல்வாழ்க்கை மீண்டும் ஒளிபெற்று விளக்கமுறத் தொடங்கியது.

இவ்வாறு இல்வாழ்க்கையிலும், தொழில் முறை யிலும் இன்புற்று வாழ்ந்த சிதம்பரனார் அரசியலிலும் ஈடுபடலாயினர். அவ்வமயம் இந்தியநாடு முழுவதும் மக்களிடையே ஆங்கில அரசாங்கத்தின்மீது வெறுப்பும், விடுதலை பெறுவதில் ஓர் உணர்ச்சியும் எழலாயின. அந்நிலையில் வங்காள நாட்டை இந்து— வங்காளம், முஸ்லிம்—வங்காளம் என இரண்டாகப் பிரிக்க ஆங்கில அரசாங்கம் திட்டமிட்டது. அரசாங் கத்தின் இப்போக்கை இந்துக்களும் முஸ்லிம்களும்

எதிர்த்தனர். இவ்வெதிர்ப்பு இயக்கம் நாடு முழுவதும் பரவியது. இவ்வியக்கத்தில் சிதம்பரனாரும் ஈடு பட்டார். தமிழ் நாட்டின் பல இடங்களுக்கும் சென்று ஆங்கில ஆட்சியின் கொடுமைகளைப் பொதுமக்கள் உளங்கொள எடுத்து விளக்கினார். "வெளிநாட்டுப் பொருள்களை வாங்குவதால் இந்திய நாட்டின் செல்வம் வெளியே செல்கிறது; அதனால் நாடு வறுமை அடைகிறது. இந்திய மக்கள் தம் நாட்டுப் பொருள்களையே வாங்கிப் பயன்படுத்த வேண்டும்" என்ற இவரது வீரவுரையால் மக்களுக்கு நாட்டுணர்ச்சி மிகுந்தது.

திரைகடல் ஓடியுந் திரவியந்தேடி வல்லாங்கு வாழ்ந்த தமிழ் மக்கள், கடல் வாணிகத்தை மறக்கும் படி, ஆங்கிலக் கப்பல் கம்பெனிகள் மிகுந்திருத்தலைச் சிதம்பரனார் கண்டார். ஆங்கிலக் கப்பல் கம்பெனியால் இந்திய வணிகர் பலவாறு துன்புற்றனர். கப்பல் கம்பெனியை நடத்தும் வெள்ளையர் இந்தியர் சரக்கு களை வெளிநாடுகட்குக் கப்பல்களில் ஏற்றுவதில்லை; அவ்வாறு ஏற்றுவாராயினும் இந்தியர் பொருள் களுக்கு அவர்கள் விதிக்கும் கட்டணம் அதிகமாக இருந்தது. இந்திய வணிகரது துன்பங்களைக்கண்ட சிதம்பரனார் சுதேசிக் கப்பல் கம்பெனி ஒன்றைத் தோற்றுவிக்க உளங்கொண்டார். சிதம்பரனார், பல் வேறு இடங்களுக்குச் சென்று வணிகரிடத்தும், செல் வரிடத்தும் பொருள் பெற்று, அவர்களை அக்கம்பெனி யின் பங்குதாரராகச் சேர்த்துக்கொண்டார். எண்ணி யதை எண்ணியாங்கு முடிக்கும் இயல்பினராகிய சிதம்பரனார், 1906ஆம் ஆண்டில் சுதேசிக் கப்பல் கம்பெனியைத் தோற்றுவித்தார். 'லாவோ'

'காலியா' என்னும் இரு கப்பல்கள் வாங்கப்பெற்றுத் தூத்துக்குடித் துறைமுகத்தை வந்தடைந்தன.

தூத்துக்குடிக்கும் இலங்கைக்கும் வாணிபப் பொருள்களை ஏற்றிச் செல்ல அமைக்கப்பட்ட சுதேசிக் கப்பல்களை இந்தியர் ஆதரித்தனர். ஆங்கிலக் கம்பெனியார், 'சுதேசிக் கப்பல் கம்பெனியின்' வளர்ச்சியைக் கண்டு நடுக்குற்றனர். தம் கம்பெனியின் வளர்ச்சி கேடுறுதலைக் கண்ட ஆங்கிலேயர், சுதேசிக் கப்பல் கம்பெனியின் அழிவிற்குப் பலவாறு சூழ்ச்சி புரிவாராயினர். இந்நிலையில் நாட்டில் உரிமைக் கிளர்ச்சி பரவலாயிற்று.

சிதம்பரனார் பொதுக்கூட்டங்களில் ஆங்கில அரசாங்கத்தைத் தாக்கி ஆவேசமாகப் பேசினார். 1906ஆம் ஆண்டு தமக்குப் பிறப்பிக்கப்பட்ட தடையுத்தரவை மீறி ஊர்வலம் ஒன்று நடத்திப் பொதுக் கூட்டத்தில் சொற்பொழிவு ஆற்றினார். அதனால் சுப்பிரமணிய சிவா என்னும் தேச பக்தரோடு சிதம்பரனாரும் சிறை செய்யப்பட்டார். அரசாங்கம் சிதம்பரனார்மீது பல குற்றங்களைச் சுமத்தி அவருக்கு ஆறு ஆண்டு சிறைத் தண்டனை விதித்தது.

சிதம்பரனார் சிறையில் அடைந்த துன்பங்கள் பல. சிறை அதிகாரிகள் இவரைப் பலவாறு துன்புறுத்தினர். இன்ப வாழ்க்கையில் திளைக்கவேண்டிய சிதம்பரனார் சிறையில் கற்களை உடைத்தார்; செக்கிழுத்தார்; இன்னும் பல துன்பங்களுக்கும் ஆளானார்.

சிதம்பரனார் சிறைத் தண்டனையை அனுபவிக்கும் காலத்தில் 'சுதேசிக் கப்பல் கம்பெனி' முறிந்து விட்டது. தண்டனைக் காலம் முடிவுற்றதும்

சிதம்பரனார் விடுதலை பெற்றார். இவர் பெற்ற தண்டனை காரணமாக இவரது 'வழக்கறிஞர் உரிமை' பறிமுதல் செய்யப்பட்டது. எனவே, தொழில் புரிய வகையும் இல்லாது, சிதம்பரனார் சென்னையில் வாழ்ந்து வரலானார்.

தமிழ்ப் புலமை நிறைந்த சிதம்பரனார் சிறைத் தண்டனைக்கு உள்ளாகிச் சிறையில் வாழ்ந்த காலத்தும் பிற சமயங்களிலும் இயற்றிய தமிழ்ப் பாக்கள் பல. அவை இலக்கிய நயங்கனிந்த பாடல்களாகும். தொல்காப்பியம் என்ற தமிழ் இலக்கண நூலுக்கு இளம்பூரணர் என்னும் பெரியார் உரை வகுத்துள்ளார். அவ்வுரையை முதன் முதல் அச்சிட்டு வெளிப்படுத்தியவர் நம் சிதம்பரனாரே! அவ்வாறே மணக்குடவர் என்னும் பெரியார் இயற்றிய திருக்குறள் உரையையும் முதன் முதல் பதிப்பித்தார். இவையேயன்றித் தாமே வேறு பல நூல்களும் இயற்றியுள்ளார். அவற்றுள் மெய்யறிவு, வள்ளியம்மை சரித்திரம், என்பாடல் திரட்டு என்பன குறிப்பிடத் தக்கனவாம்.

தீண்டாமையை ஒழிக்கவேண்டும் என்று பேச்சளவில் மட்டும் நில்லாது தம் வாழ்விலும் நடத்திக் காட்டியவர் சிதம்பரனார். வழக்கறிஞர் தொழில் நடத்திய காலத்தில் சிதம்பரனார் தாழ்ந்த குலத்தவர் எனக் கருதப்படும் பெரியார் ஒருவரைத் தம் வீட்டோடு வைத்துப் பாதுகாத்து வந்தார். இந் நிகழ்ச்சிகளால் சிதம்பரனார் 'பிறப்பினால் உயர்வு தாழ்வு கற்பிக்கலாகாது' என்ற கருத்துடையவர் என்பதை அறிகிறோம்.

நாட்டின் நலனையே பெரிதாகக் கருதித் தொண்டாற்றிய சிதம்பரனார் 1936ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 18ஆம் நாள் காலமானார். அவரது பெயர் இந்திய வரலாற்றில் சிறந்ததொரு இடத்தைப் பெற்றுத் திகழ்கின்றது.

## பயிற்சி

### I. அருஞ்சொல் விளக்கம் :

ஐயந் திரிபு அற-சந்தேகம், வேறுபாடாக உணர்தல் முதலியன நீங்கும்படியாக; வற்புறுத்தல்-கட்டாயப்படுத்துதல்; உளங்கொள-மனத்தில் நன்கு பொருந்தும் வகையாக; வல்லாங்கு-நல்ல முறையில்; உளங் கொண்டார்-எண்ணினர்; எண்ணியாங்கு-எண்ணியபடி.

### 2. வினாக்கள் :

1. சிதம்பரனாரின் கல்விப் பயிற்சியைப் பற்றி எழுதுக.
2. சிதம்பரனார் மேற்கொண்ட தொழில் யாது? அத் தொழிலில் அவர் அடைந்த சிறப்புக்கள் யாவை?
3. சுதேசிக்கப்பல் கம்பெனி நிறுவப்பட்டதன் காரணத்தைப் புலப்படுத்துக.
4. சிதம்பரனார் சிறைப்படக் காரணம் என்ன?
5. சிதம்பரனார் ஆற்றிய தமிழ்த்தொண்டினைக் குறிப்பிடுக.
6. சிதம்பரனாரின் குணவியல்புகளை எழுதுக.

### 3. இலக்கணம் :

தமிழ் மொழியைப் பிழையில்லாமல் எழுதவும் பேசவும், கற்பிக்கும் நூல் தமிழ் இலக்கணம் ஆகும். தமிழ் இலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்து வகையாகும். முன் வகுப்பில் கற்ற இலக்கண அறிவை மீண்டும் மறு பார்வையாக அறிவதோடு புதிய இலக்கணப் பயிற்சிகளையும் அடுத்து வரும் பாடங்களில் விரிவாகத் தெரிந்து கொள்வீர்களாக.

---

## 2. கடல் தரும் செல்வம்

[புலவர் தணிகை. உலகநாதன் அவர்கள்]

நாம் கடலிலிருந்து பல வகையான செல்வங்களைப் பெறுகிறோம். அவற்றில் சிறந்தது முத்து. முத்து நவமணிகளில் ஒன்று. மிகப் பழங் காலத்திலிருந்தே நம் நாட்டுப் பெண்களும் ஆண்களும் முத்துக்களை மாலையாகக் கோத்து அணிந்து மகிழ்ந்தனர். முற்கால மன்னர்களும் முடியிலும் குடையிலும் முத்துக்களைப் பதித்து அழகு செய்து வந்தனர்; தம்மிடம் வரும் புலவர்களுக்கு முத்து மாலையைப் பரிசாக வழங்கிப் பெருமைப் படுத்தினர். இவ்வாறு பண்டைக் காலத்திலிருந்தே நம் நாட்டு மக்களும் அரசரும் முத்தைச் சிறந்த பொருளாகப் போற்றி வந்தனர்.

இத்தகைய சிறப்புடைய முத்து நமக்கு எப்படிக் கிடைக்கிறது? முத்து பல இடங்களில் தோன்றுவதாக நம் முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள். சங்கு, சிப்பி, யானை, கரும்பு, நத்தை, நெல், மூங்கில், பாக்குமரம் முதலிய இடங்களில் முத்துக்கள் தோன்றும் என்று அவர்கள் கூறியுள்ளனர். இவற்றில் வலம்புரிச் சங்கிலிருந்து பிறக்கும் முத்தே மிகவும் சிறந்ததாகும். ஆனால், அந்த முத்து நமக்குக் கிடைப்பதில்லை. பெரும்பாலும் சிப்பியில் தோன்றும் முத்தே நமக்குக் கிடைக்கிறது.

உலகில் பல இடங்களில் முத்துச் சிப்பிகள் காணப்படுகின்றன. இலங்கைத் தீவை அடுத்துள்ள மன்னார் குடாவிலும், தூத்துக்குடிக்கு அண்மையில்

உள்ள பிரவையிலும், ஐக்கிய மர்காணத்தில் பாயும் ஆறுகளிலும், பாரசீகக் குடாக்கடலிலும், பசிபிக் மகா சமுத்திரம் இந்துமகா சமுத்திரம் ஆகியவற்றில் உள்ள சில தீவுகளுக்கு அருகிலும் முத்துச் சிப்பிகள் கிடைக்கின்றன.

சிப்பியிலிருந்து நமக்கு எவ்வாறு முத்துக்கள் கிடைக்கின்றன? சிப்பியில் முத்து உண்டாகும் விதமே மிகவும் வியப்பானது கடற்கரையிலும் ஆற்றோரங்களிலும் நீங்கள் கிளிஞ்சல்களைப் பார்த்திருப்பீர்கள். சிப்பி, இரண்டு கிளிஞ்சல்கள் ஒன்றன் மீது ஒன்று பொருந்திய வடிவத்தை உடையது. இது மிகவும் மெல்லிய தசையை உடையது. இதனை மேற்கூறிய இரண்டு கிளிஞ்சல்களும் பாதுகாக்கின்றன. சிப்பி உணவிற்காகக் கிளிஞ்சலைச் சிறிது திறக்கும்போது சிறு மணல், மீன் முட்டை போன்ற சிறிய பொருள்கள் உள்ளே நுழைந்து விடுவது உண்டு. அப்பொருளை வெளியேற்ற அதனால் முடிவதில்லை. மணலின் உறுத்தலால் சிப்பி நெளியும். அப்போது சிப்பியின் உள்ளே ஒரு வகையான நீர் கசியும். அந்நீர் மணலுடன் சேர்ந்து நாளடைவில் இறுகும். இறுகிய பொருள் ஏறக்குறைய ஐந்து ஆண்டுகளில் சிறந்த முத்தாக மாறும். இவ்வாறு சிப்பிக்குள் முத்துக்கள் உண்டாகின்றன.

முத்துச் சிப்பிகள் கடலில் ஆழம் நிறைந்த இடங்களில் நூறு அடிக்குள் இருக்கும். மக்கள் படகுகளில் சென்று கடலில் மூழ்கி முத்துச் சிப்பிகளை வெளியே கொண்டு வருவர். அவர்கள்

இவ்வாறு முத்துச் சிப்பிகளைக் கொண்டு வருவதை 'முத்துக் குளித்தல்' அல்லது 'முத்து எடுத்தல்' என்று சொல்வார்கள்.

முற்காலங்களில் முத்துக் குளித்தல் மிகவும் துன்பமான தொழிலாக இருந்தது. ஒரு படகில் ஐந்தாறு பேர் வீதம் பல படகுகளில் மக்கள் செல்வர். ஒரு குறிப்பிட்ட இடத்தை அடைந்ததும் முத்துக் குளிப்பவர் உடல் முழுவதும் ஆமணக் கெண்ணெயைப் பூசிக்கொள்வர். கனத்த கருங்கல்லை உறுதியான கயிற்றினால் ஒரு காலில் கட்டிக் கொள்வார்கள். மற்றொரு காலில் சிப்பிகளைப் பிடிக்கும் வலையைக் கட்டிக்கொள்வார்கள். அப்படியே ஒரு கயிற்றைப் பிடித்துக்கொண்டு நீரில் இறங்கு வார்கள். கல்லின் கனத்தினால் அவர்கள் விரைவாக நீருள் மூழ்குவார்கள். சிப்பிகள் இருக்கும் இடத்தை அடைந்ததும் காலில் உள்ள வலையைக் கழுத்தில் மாட்டிக்கொண்டு அதில் முத்துச் சிப்பிகளை வாரிப் போடுவார்கள். அப்போது மூச்சுப் பிடித்துக் கொண்டிருப்பார்கள். இவ்வாறு நீருக்குள் நெடு நேரம் மூச்சுப் பிடிக்க முடியாதல்லவா? அவர் களால் மூச்சை அடக்க முடியாத நேரத்தில் காலில் உள்ள கருங்கல்லை அவிழ்த்துவிட்டுத் தாம் பிடித்துக் கொண்டிருக்கும் கயிற்றை அசைப்பார்கள். அந்த அடையாளத்தை அறிந்துகொண்டு படகிலிருப்ப வர்கள் கயிற்றை இழுத்து அவர்களைப் படகில் ஏற்றிக்கொள்வார்கள். சிறிது நேரம் களைப்பாறி விட்டு மீண்டும் நீருள் இறங்குவார்கள். இவ்வாறு முத்துக் குளிப்பதனால் சில சமயங்களில் உயிருக்கும் கேடு உண்டாகலாம் அல்லவா? முத்துக்களின்

மதிப்பை உணர்ந்து பலர் தம் உயிரையும் பொருட் படுத்தாமல் இத்தொழிலை மேற்கொண்டனர்.

தற்காலத்தில் முத்துக் குளித்தல் இவ்வளவு துன்பமானதன்று. நீருள் இறங்கும்போது உடம்பு முழுவதும் அணிந்துகொள்வதற்காகப் புதுவகை இயந்திரங்களும் இரும்புக் கவசங்களும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அக்கவசங்களின் உதவியினால் விரைந்து உள்ளே செல்லலாம்; நீரில் வாழும் சுரு முதலியவற்றாலும் தீமைகள் உண்டாகமாட்டா. இவர்கள் மூச்சு விடுவதற்கு ஏற்ற முறையில் முக மூடிகள் அமைந்துள்ளன. நீருள் செல்பவர்கள் எத்தகைய தொல்லையும் இல்லாமல் நெடுநேரம் நீருக்குள் இருந்து முத்துச் சிப்பிகளைச் சேகரிப்பார்கள்.

கடலிலிருந்து எடுக்கப்பட்ட முத்துச் சிப்பிகளைப் பூமிக்குள் புதைத்து வைப்பார்கள். ஏறக்குறைய ஒரு வாரத்துக்குப் பின்னர் பூமியிலிருந்து அவற்றை வெளியில் எடுப்பார்கள். அவற்றைக் கொதிக்கும் நீரில் போட்டுச் சுத்தம் செய்வார்கள். பின்னரே சிப்பிகளை அறுத்து முத்து எடுப்பார்கள். இவ்வாறு எடுக்கப்படும் முத்துக்களில் சில சிறியனவாயும், சில பெரியனவாயும் இருக்கும். சில சிப்பிகளில் முத்துக்கள் இல்லாமலும் போகும்.

சப்பானியர் முத்தெடுக்கும் தொழிலில் சிறந்தவர். அந்நாட்டுப் பெண்களும் இத்தொழிலில் ஈடுபடு கிறார்கள். அவர்கள் செயற்கையாகவும் முத்துத் தயாரிக்கிறார்கள். அவர்கள் கடலிலிருந்து எடுக்கப் பட்ட சிப்பிகளின் உயிருக்கு இடையூறு வராமல் உள்ளே இருக்கும் முத்தைப் பக்குவமாக எடுத்துக்

கொள்வார்கள். பின்னர் மணல் போன்ற சிறு பொருளை உள்ளே போட்டு அவற்றை வலைகளில் மூட்டையாகக் கட்டிக் கடலில் குறிப்பிட்ட இடத்தில் போட்டு வைப்பார்கள். ஐந்தாண்டுகளுக்குப் பின்னர் அவற்றை வெளியே எடுத்து முத்தைப் பெறுவார்கள். ஒருமுறை இப்படிச் செய்த பின்னர் அச்சிப்பிகளி லிருந்தே அவர்கள் மீண்டும் மீண்டும் முத்துத் தயாரிப்பார்கள்.

இப்படி எடுக்கப்பட்ட முத்துக்களுக்குத் தொழில் வல்லவர் மெருகிட்டுத் துளை போடுவர். இதனால் முத்தின் மதிப்பு மேலும் அதிகமாகிறது. முத்து மதிப்பிட முடியாத விலையுயர்ந்த பொருளாகும். சில காலத்துக்கு முன்னர் அரேபியாவில் ஒரு சிறந்த முத்து கிடைத்ததாம். அதனைப் பதினொரு லட்ச ரூபாவுக்கு விற்றார்களாம். முத்தின் பெருமைதான் என்னே!

பயிற்சி

1. **அருஞ்சொல் விளக்கம்:**

நவமணி–ஒன்பது மணிகள் (முத்து, பவளம், வைடூரியம், புட்பராகம், கோமேதகம், நீலம், மரகதம், மாணிக்கம், வயிரம் என்பன); வெளியேற்ற – வெளிப்படுத்த; போற்றி – பாராட்டி; பொருட்படுத்தாமல் – பொருளாக மதிக்காமல், கவசம் – மேலே அணியும் உறை; சேகரித்தல் – சேர்த்தல்; இடையூறு – துன்பம்; அண்மையில்–அருகில்.

2. **வினாக்கள்:**

1. முற்காலத்தில் மக்கள் முத்துக்களை எவ்வாறு பயன் படுத்தினார்கள்?
2. முத்து எவ்வெப் பொருள்களிலிருந்து கிடைக்கும் என்று முன்னோர்கள் கூறியுள்ளார்கள்?
3. உலகில் முத்து எடுக்கும் இடங்கள் எவை?
4. சிப்பியிலிருந்து எவ்வாறு முத்து எடுக்கப்படுகின்றது?



5. முத்துக் குளித்தல் என்றால் என்ன ?

6. முத்துக் குளிக்கும் தொழில் முற்காலத்தில் எவ்வாறு நடைபெற்று வந்தது ?

7. தற்காலத்தில் முத்துச் சிப்பிகள் எவ்வாறு எடுக்கப் படுகின்றன ?

8. செயற்கை முத்து எவ்வாறு தயாரிக்கப்படுகிறது ?

9. முத்து விலையுயர்ந்த பொருளாகக் கருதப்படுவது ஏன்?

3 இலக்கணம் :

சொற்கள் உண்டாவதற்கு முதற் காரணமாக இருக்கும் ஒலி எழுத்து என்றும், அவ்வெழுத்து ஒலி வடிவம். வரிவடிவம் என்ற இரு வடிவங்களைப் பெறும் என்றும் அறிந்துள்ளீர்கள். அவ்வெழுத்துக்கள் உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய் யெழுத்து, ஆய்தவெழுத்து என நான்கு வகைப்படும்.

உயிரெழுத்து: அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்ற பன்னிரண்டும் ஆகும்.

மெய்யெழுத்து: க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என்ற பதினெட்டும் ஆகும்.

உயிர்மெய்யெழுத்து: க, கா, கி, கீ முதலான இரு நூற்றுப் பதினாறும் ஆகும்.

ஆய்தவெழுத்து: ஃ என்ற ஒன்று ஆய்தவெழுத்து ஆகும்.

---

# 3. திருக்குறளால் வந்த பயன்

[டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்]

தஞ்சாவூர் அரண்மனையில் சரசுவதி மகால் என்னும் பெயர்பெற்ற பழைய புத்தகசாலை ஒன்று உண்டு. அங்கே உள்ள ஏட்டுச் சுவடிகளையும் அச்சுப் புத்தகங்களையும் பார்க்கும் பொருட்டு ஒவ்வொரு நாளும் பலர் சென்று வருவார்கள். சரபோசி அரசர் அமைத்த பல தருமங்களுள் இப்பொழுது மிக்க பயனுடையதாக விளங்குவது

அந்தப் புத்தகசாலை. அதில் அம்மன்னர் காலத்தில் பல்லாயிரக் கணக்கான சுவடிகள் இருந்தன. தென் மொழி, வடமொழி, தெலுங்கு, மகாராட்டிரம் முதலிய மொழிகளில் உள்ள சுவடிகள் அங்கே உண்டு. இசை, பரத சாத்திரம், வைத்தியம், சோதிடம், யானை சாத்திரம், அசுவ சாத்திரம் முதலிய பல்வகைக் கலைகளுக்குரிய நூற் சுவடிகளும் இருந்தன. அந்த அந்த வகையில் தேர்ச்சிபெற்ற புலவர்களைக்கொண்டு அந்நூல்களை வருவித்துச் சரபோசி மன்னர் தொகுத்து வைத்தார். அந்தப் புத்தகசாலையில் தமிழ் நூல்கள் பல சேகரிக்கப்பட்டதற்குக் காரணமான ஒரு நிகழ்ச்சியை நான் சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அது வருமாறு:—

சரபோசி மன்னர் ஒருமுறை காசி யாத்திரை சென்றார். அப்பொழுது கல்கத்தா நகரத்தில் இருந்த அரசப் பிரதிநிதியைக் காண எண்ணினர். அவரைப் பார்க்கவேண்டியதற்குரிய அனுமதியை முன்னரே பெற்று ஏற்ற கையுறைகளுடன் சென்று கண்டார்.

அந்த அரசப் பிரதிநிதி தமிழ் நாட்டிலுள்ள ஓர் அரசர் தம்மைப் பார்க்க வருவதை அறிந்து தமிழ் நாட்டின் சிறப்புக்களை விசாரித்து வைத்திருந்தார். அவர் திருக்குறளின் ஆங்கில மொழிபெயர்ப்பைப் படித்து இன்புற்றவர். அது தமிழ் நாட்டில் உண்டான சிறந்த நூலாதலின் தமிழ் மூல நூலைப் பற்றிச் சரபோசி அரசரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்று எண்ணினர்.

சரபோசியும் அரசப் பிரதிநிதியும் வழக்கம்போல் ஒருவருக்கொருவர் செலுத்தவேண்டிய மரியாதை

களைச் செலுத்திவிட்டுப் பிறகு உரையாடத் தொடங்கினர். அப்பொழுது அரசப் பிரதிநிதி தஞ்சை அரசரைப் பார்த்து, "தமிழ் நாட்டில் உண்டான திருக்குறளின் ஆங்கில மொழிபெயர்ப்பை நான் படித்து இன்புற்றதுண்டு. அதன் தமிழ் மூலத்தைப்பற்றிக் கேட்க வேண்டுமென்ற ஆவல் எனக்கு இருக்கிறது. ஆதலின், சில செய்யுட்களைச் சொல்லவேண்டும்" என்றார். அரசர் அதுகாறும் தமிழின்பால் கவனங்கொண்டவரல்லர். தம் அரண்மனையில் சில புத்தகங்கள் உள்ள ஒரு சிறிய புத்தகசாலை இருப்பதை மட்டும் அறிந்திருந்தார். பயணக் காலத்திலும் வடமொழி, மகாராட்டிரம் முதலிய மொழிகளில் தேர்ச்சிபெற்ற வித்துவான்களையே உடன் வைத்திருந்தார். அவருடைய தாய் மொழி மகாராட்டிரமாதலின் திருக்குறளைப்பற்றி அந்தச் சமயத்தில் தாமாகவேனும் அருகிலுள்ள வித்துவான்கள் வாயிலாகவேனும் அறிந்துசொல்லும் நிலையில் அவர் இல்லை. இன்னது செய்வதென அவருக்கு முதலில் தோன்றவில்லை. மிகவும் கூரிய அறிவுடையவராதலின் அரசர் அப்பால் அரசப் பிரதிநிதியை நோக்கி, "என்னுடைய புத்தகசாலையில் இதைப்போல ஆயிரக்கணக்கான தமிழ் நூல்கள் இருக்கின்றன. ஆனால், எல்லாவற்றையும் நான் தெரிந்துவைத்திருப்பது முடியாத காரியம். தாங்கள் உத்தரவு கொடுத்தால் நான் ஊர் போய்ச் சேர்ந்தவுடன் அந்தப் புத்தகத்தை அனுப்புகிறேன்" என்றார். அரசப் பிரதிநிதி, "இதைப்போல எவ்வளவு தமிழ்ப் புத்தகங்கள் இருக்கின்றன ?" என்று கேட்டார். "எவ்வளவோ இருக்கின்றன. ஊர் போனவுடன்

அவற்றின் பட்டியலையும் அனுப்புகிறேன்" என்றார் அரசர். அரசப் பிரதிநிதி அங்ஙனமே செய்யலா மென்று சொல்லி விடைகொடுத்தனுப்பினர்.

தாம் அரசராகவுள்ள நாட்டுக்குரிய மொழியில் கவனம் செலுத்தாதிருந்தமை ஒரு பெருங்குறை யென்பது அதன் பின்னரே சரபோசி அரசர் மனத்திற்பட்டது. இனி அங்ஙனம் இருத்தல் கூடாது; தமிழ்ச் சுவடிகளைத் தொகுத்துத் தமிழ்ப் புலவர்களையும் ஆதரித்து வரவேண்டும் என்ற உறுதியை அவர் மேற்கொண்டார். ஆதலின் தஞ்சாவூர் சேர்ந்தவுடன் எங்கெங்கே தமிழ்ப் புலவர்கள் உள்ளார்கள் என்பதை அறிய அவர் தலைப்பட்டார். தமிழ் ஏட்டுச் சுவடிகளையும் விலை கொடுத்து வாங்கித் தொகுத்தார். அப்பொழுது ஒவ்வொரு நூலிலும் பல பிரதிகள் கிடைத்தன; திருக்குறளில் எத்தனையோ சுவடிகள் வந்து குவிந்தன. தமிழ் வித்துவான்களுடைய பரம்பரையில் பிறந்தவர்கள் பலர் தங்கள் முன்னோர்கள் சேர்த்து வைத்திருந்த சுவடிகளைப் பயன்படுத்தப் வகை யறியாமல் இருந்தனர். அவை இடத்தை அடைத்துக் கொண்டு கிடப்பது அவர்களுக்கு வெறுப்பைத் தந்தது. அதனுல் பலர் பதினெட்டாம் பெருக்கிற் காவிரியாற்றிலே சுவடிகளை விட்டும், அவற்றை நெய்யில் தோய்த்து விதிப்படி தீயில் ஆகுதி பண்ணி யும் அழித்து வந்தனர். தங்கள் வீட்டிலுள்ள சுவடிக் குவியல்களை வேறு வகையிலே பலர் குறைத்து வந்தனர். அத்தகைய சமயத்தில் சரபோசி அரசர் செய்த முயற்சிகளால் அச்சுவடிகளுக்கு மதிப்பும் உயிரும் உண்டாக ஆரம்பித்தன. தங்கள் வீட்டில்

சுமையாகக் கிடந்த சுவடிகளுக்கு விலை கிடைப்ப தென்றால் யார் விடுவார்கள்? பலர் பல சுவடிகளைக் கொடுத்து விலை பெற்றார்கள். அக்காலத்தில் ஒரு சுவடியை ஏட்டில் எழுதவேண்டுமானால் நூலின் அளவுக்கு ஏற்றபடி ஒரு குறிப்பிட்ட கூலி உண்டு. தஞ்சை புத்தகசாலைக்கு அரசர் புத்தகங்களை வாங்கு கின்றாரென்பது தெரிந்தவுடன் அவற்றின் விலைகள் ஏறின. நான்கு ரூபாய் விலை மதிப்புள்ள புத்தகம் நாற்பது ரூபாய்க்கு விற்கப்பட்டது. தமிழ்ப் புத்தகங் களை வாங்கிய தோடன்றி அவற்றிற்கேற்ப மற்ற மொழிகளிலுள்ள புத்தகங்கள் பலவற்றையும் அரசர் வாங்கித் தொகுத்தார். இதனால் சரசுவதி மகால் ஒரு பெரிய புத்தகசாலையாயிற்று.

தமிழ் நூல்களைச் சேர்ப்பதற்கும் அவற்றின் சம்பந்தமான காரியங்களைக் கவனிப்பதற்கும் சில புலவர்களை அரசர் நியமித்தார். அங்ஙனம் நியமிக்கப் பட்டவர்கள் கோடீச்சுரக்கோவை முதலிய நூல்களை இயற்றிய கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், காரைக்குறிச்சி வேலாயுத உபாத்தியாயர், திருவேங் கடத்தா பிள்ளை, சுப்பராயக் கவிராயர், வேங்கடாசலம் பிள்ளை முதலியோர் ஆவர்.

தாம் வாக்களித்தபடியே சரபோசி அரசர் திருக் குறட் பிரதியையும், தமிழ் நூற் பெயர்களையும் அரசப் பிரதிநிதிக்கு அனுப்பி மகிழ்வித்தார்.

அந்தக் காலத்தில் தமிழ்ப் புலவர்களல்லாத சிலர் ஏட்டுப் பிரதிகளைப் பட்டியல் பண்ணி வைத்திருந்தனர். அதனை நான் பிற்காலத்தில்

பார்த்ததுண்டு. 'சிவமயம் நாலடியார்,' 'கணபதி துணை நாலடியார்,' 'ராமசெயம் நாலடியார்' என்றும், 'நன்ருக குரு வாழ்க குருவே துணை நாலடியார்' என்றும் புத்தகங்களின் பெயர்கள் அதில் எழுதப் பட்டிருந்தன. அதைப் பார்த்த சாதாரண மக்களும் தமிழறிவில்லாத வேறு பலரும் "இத்தனை நாலடி யாரா? இவ்வளவையும் எப்படிப் புலவர்கள் படிக் கிருர்கள்?" என்று ஆச்சரியமுற்ருர்கள். ஏட்டில் எழுதுபவர்கள் தங்கள் தங்கள் மதக் கொள்கைக்குத் தக்கபடி, கணபதி துணையென்றும், சிவமயமென்றும், சிவாய நம என்றும் பிறவாறும் முதலில் எழுதி விட்டுப் பிறகு நூற் பெயரை எழுதியிருப்பார்கள். இடையே முற்றுப்புள்ளி முதலிய குறியீடுகள் இரா. ஆதலின், அவற்றைக்கண்டு பட்டியல் செய்தவர்கள், தமிழறிவு இல்லாமையால் அவற்றைப் புத்தகப் பெயராக எண்ணிச் சேர்த்து எழுதிவிட்டார்கள். பின்பு தஞ்சையில் நீதிபதியாக இருந்தவரும் வட மொழி, தென்மொழிகளில் பயிற்சியுடையவருமாகிய பர்னல் துரை என்பவர் இந்தப் பட்டியலின் விசித்திர அமைப்பை அறிந்ததும் வியப்பும் வருத்தமும் அடைந்தார். அவர் தக்க வித்துவான்களைக்கொண்டு ஒழுங்கான பட்டியல் ஒன்றை எழுதச் செய்தார்; அங்ஙனம் செய்வித்த பிரதிகளைத் தம் நாட்டுக்குச் செல்லுகையில் உடன்கொண்டு சென்ருர்.

சரபோசி அரசர் காலத்திற்குப் பின்பும் பர்னல் துரை வந்ததற்கு முன்புமாகிய காலத்தில் அப்புத்தக சாலையிலுள்ள நூல்களிற் பலவற்றைப் பலர் இரவலாக வாங்கிச் சென்று திருப்பிக் கொடாமல் இருந்துவிட்டனர். அங்ஙனம் போன நூல்கள் பல.

பர்னல் துரையின் கருத்து இதன்பால் செலுத்தப் பட்ட பிறகே இத்தகைய குறைபாடு நீங்கி ஒழுங்கு ஏற்பட்டது. இன்றும் பல அருமையான ஏட்டுச் சுவடிகள் சரசுவதி மகாலில் காணப்படுகின்றன.

பயிற்சி

1 **அருஞ்சொல் விளக்கம் :**

பரத சாத்திரம்–நாட்டியத்தைப் பற்றிய நூல்; அசுவம்–குதிரை; கையுறை-பெரியோரைக் காணச் செல்லும் பொழுது உடன் கொண்டு செல்லும் பரிசுப்பொருள்; பிரதிநிதி - பதிலாக இருப்பவர்; ஆகுதி பண்ணுதல்-தேவர்களுக்காக ஓமத் தீயில் இடுதல்: குறியீடு-அடையாளம்; தென்மொழி–தமிழ்.

2. **வினாக்கள் :**

1. சரபோசி மன்னர் அமைத்த அறங்களுள் மிகப் பயனுடையதாகக் கருதப்படும் அறம் யாது? விளக்குக.

2. அரசப் பிரதிநிதி சரபோசி மன்னரை என்ன கேட்டார்? அதற்கவர் அளித்த பதில் யாது?

3. சரபோசி மன்னருக்குத் தமிழ் நூல்களைத் தொகுத்து வைக்கும் எண்ணம் உண்டாகக் காரணம என்ன ?

4. பழந்தமிழ்ச் சுவடிகள் அழிந்ததற்கு ஆசிரியர் கூறும் காரணங்களை எழுதுக.

5. பல நாலடியார்கள் பெயர்ப் பட்டியலில் எவ்வாறு இடம் பெற்றன ?

6. திருக்குறளால் வந்த பயன் என்ன ?

3. **இலக்கணம் :**

அ, இ, உ, எ, ஒ

இவ்வுயிரெழுத்துக்கள் குறுகி ஒலிக்கின்றன. இவ்வாறு குறுகி ஒலிக்கும் எழுத்துக்கள் குற்றெழுத்து எனப்படும்.

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ

இவ்வுயிரெழுத்துக்கள் நீண்டு ஒலிக்கின்றன. இவ்வாறு நீண்டு ஒலிக்கும் எழுத்துக்கள் நெட்டெழுத்து எனப்படும். ஆகையால், உயிரெழுத்துக்கள் குற்றெழுத்து, நெட்டெழுத்து என்று இருவகைப்படும். குற்றெழுத்து குறில் என்றும், நெட்டெழுத்து நெடில் என்றும் வழங்கப்படும்.

# 4. சீனச் சிறுகதை—I

[திரு. பூ. ஆலாலசுந்தரம், எம். ஏ., அவர்கள்]

பல நூற்றுண்டுகளுக்கு முன்னர் மக்கள் விலங்குகளைக் கொன்று அவைகளின் பச்சை ஊனினைப் பதம் பண்ணத் தெரியாது புசித்து வந்தனர். தம் ஊன் பெருக்கற்குத் தாம் பிறிது ஊனுண்ணும் மக்கள், இறைச்சியினை அவித்தல், வறுத்தல் முதலிய இன்னோரன்ன முறைகளை உணர்ந்தாரில்லை. ஊனைச் சமைக்கும் வகையை மாந்தர் எவ்வாறு அறிந்து கொண்டனர் என்பதை அடியிற்காணும் கதையால் விளக்குவோம்.

சீன தேசத்தில் பெகின் என்ற சிற்றூரில் ஆதிரையன் என்பான் ஒரு சிறிய குடிசையில் வாழ்ந்து வந்தான். அவன் அநேக நாட்களாக வறுமை வாய்ப்பட்டு வருந்தினன். பன்றிக் குட்டிகளை மேய்த்து வருவதே அவனது தொழிலாகும். ஆதிரையனுக்குப் பத்து வயதுள்ள பகவன் என்ற ஒரு மைந்தன் உண்டு. பகவன் கூரிய அறிவும் சீரிய உணர்ச்சியும் வாய்ந்தவன். ஆனல், குறும்புத்தனத்தில் அவனுக்கு ஒப்பாரும் மிக்காருமில்லை என்று கூறுவது புனைந்துரையாகாது. பஞ்ச பூதங்களில் பகவனுக்கு நெருப்பைக் காண்பதில் விருப்பம் அதிகம். அவன் சில சமயங்களில் குச்சிகளையும் குப்பைகளையும் கொளுத்தி அதனாலுண்டாகும் தீயின் தன்மையினைக் கண்டு இன்புறுவான்.

ஒரு நாள் ஆதிரையன், தன் பன்றிக்குட்டிகளுக்கு உணவு கொண்டு வருவதற்காக வீட்டைத் தன் மகன் பகவன் வசம் ஒப்புவித்து, ஒன்பது பன்றிக்குட்டி

களையும் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லித் தான் காட்டிற்குச் சென்றனன். தந்தை காட்டிற்குச் சென்றதைக் கண்ட மைந்தன், மிகுந்த உவகை கொண்டு, சில குச்சிகளையும் வைக்கோலினை யும் ஒன்று சேர்த்து அவைகளைக் கொளுத்தி அதனுல் உண்டாகும் தீயின் ஒளியினைக் கண்டு களித்தான். அது போழ்து அத்தீயின் ஒரு சிறு பொறியானது குடிசையிற் புக, குடிசை முழுதும் பற்றி எரிந்தது. குடிசையில் தீப் புகுந்ததைக் கண்ட பகவன் வெளியே வந்துவிட்டான். சிறிது நேரத்திற்குள் குடிசை சாம்பலாய் விட்டது. இதைக்கண்ட பகவன் மிகவும் வருந்தினுன். அவன் குடிசையை இழந்ததற்காக வருந்தவில்லை. ஏனெனில், அவன் இதற்கு முன் தன் குறும்புத்தனத்தால் இரண்டு குடிசைகளைத் தீ வாய்ப்படுத்தியுள்ளான். ஆனுல், அவன் "அந்தோ! பன்றிக் குட்டிகளைப் பறிகொடுத்தேனே!" என்று கதறினுன். தன் தந்தையின் வெகுளியினைக் கண மேனும் காத்தலரிது என்றுணர்ந்த மைந்தன், "அந்தோ! பால்மணமாருத இளம் பன்றிக்குட்டிகளை நான் இழந்தேனே! எந்தையார் என்னை ஒறுப்பாரே! யான் யாது செய்வேன்!" என்று வருந்தினுன்.

அது போழ்து அவன் அக்குடிசையின் பக்கத்தில் ஒரு நறுமணம் வீசக் கண்டான். அந்த நறுமணம் எக் காரணத்தாலாயது என்றும் எப்பக்கத்தினின்று வீசு கின்றது என்றும் பகவன் உணர்ந்தானில்லை அவன் குடிசையின் நாற்புறமும் சுற்றிப் பார்த்தான். பார்த்தும் பயனில்லை. தான் பிறந்தது முதல் இது வரையில் பகவன் இவ்வித நறுமணத்தைக் கண்டதே

இல்லை. அச்சிற்றூருக்கு அஃது ஒரு புத்தம்புதிய நறுமணமாய்த் திகழ்ந்தது.

பிறகு பகவன், பன்றிக்குட்டிகளின் அருகே சென்று, அவைகளின் ஆவி அகத்ததோ புறத்ததோ என்பதை உணரவேண்டி அவைகளின் உடலைச் சிறிது தொட்டான். தொட்டவுடன் தீப்பற்றிய குடிசையிலிருந்த பன்றிகளின் உடல் நன்றாக வெந்திருந்தபடியால், அவைகளின் கொழுப்பும் தசையும் பகவன் கையில் ஒட்டிக்கொண்டன. சுட்ட ஊனின் வெப்பத்தைத் தாங்கமாட்டாத பகவன், தன் விரல்களை உடனே வாயில் வைத்துக் கொண்டான். உடனே அவன் சுட்ட ஊனின் சுவையினை உணர்ந்தான். இதுகாறும் அக்குடிசையில் வீசிய நறுமணம் சுட்ட பன்றி இறைச்சியின்பாற்பட்டது என்பதை அறிந்து கொண்டான். இதுவரையில் அச்சிற்றூரில் வெந்த ஊனினைக் கண்டவர் ஒருவருமில்லை. முதன் முதல் அச்சிற்றூரில் சுட்ட பன்றியின் சுவையை உணர்ந்த பகவன் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. அவன் குதித்தான்; ஆடினான்; "நாடினேன், நாடி நான் கண்டுகொண்டேன் சுடுபன்றி இறைச்சியின் மாட்சி!" என்று பாடினான். பிறகு அப்பன்றியின் ஊனை உண்டு களித்தான்.

காட்டிற்குச் சென்ற ஆதிரையன் வீட்டிற்குத் திரும்பி வந்து, குடிசை சாம்பலாகிய நிலையினையும், பன்றியின் ஊனுண்ணும் கழிபேர் இரையானாகிய மைந்தனையும் கண்டு வெகுண்டு, அவனைத் தடியால் நையப் புடைத்தான். அவன் அடித்த அடி சுட்ட பன்றி ஊனில் திளைத்திருக்கும் பகவனுக்கு ஈ

மொய்த்தது போன்றிருந்தது. அவன் தன் தந்தை வந்ததையும் கண்டானில்லை.

ஆதிரையன்: அடே விலங்கே! அங்கே என்ன செய்கின்றாய்? இதுகாறும் இரண்டு குடிசைகளை அழித்தது போதாதென்று கருதியோ இக்குடிசையினையும் தீவாய்ப்படுத்தினை ?

பகவன்: என் அருமைத் தந்தையீர், ஆ ஆ! என்ன அருமை! என்ன அருமை! இப்பன்றிகளின் அமிழ்தினுமினிய சுட்ட இறைச்சியினை யான் என்னவென்று கூறுவேன்! தயவு செய்து நீங்களும் இச் சுட்ட ஊனினைச் சாப்பிடுங்கள்.

ஆதிரையனுக்கு அடங்காக் கோபம் பொங்கி வந்தது. அவன் மறுபடியும் தன் மைந்தனின் அரக்கத் தன்மைக்கு வருந்தி அவனை மீண்டும் வைதான். தான் பெற்ற இன்பம் தன் தந்தையும் பெறுதல் வேண்டுமென்ற பேரவாக்கொண்ட பகவன் மிக்க சூடாக உள்ள அப்பன்றியின் ஊனினை விரைவுடன் தன் தந்தையின் கையில் வைத்தான். ஆதிரையன் உடனே திடுக்கிட்டு அவ்வூனைக் கொண்ட விரலின் சூட்டைத் தாங்கமாட்டாது யாது செய்வதென்று தெரியாது வருந்தினான். பிறகு அவனுக்கு ஒரு யுக்தி பிறந்தது. அவன் விரல்களைக் குளிர்ச்சி செய்யும் பொருட்டு வாயில் வைத்துக் கொண்டான். இதுவரையில் பன்றியின் வெந்த ஊனின் தன்மையைக் கனவிலும் கண்டும் கேட்டுமறியாத ஆதிரையன் கொண்ட உவகைக்கு அளவேயில்லை. அவன் தன்னை மறந்தான்; தன் உடலையும் மறந்தான்; சுருங்கக் கூறுமிடத்து இவ்வுலகத்தையும்

மறந்தான். பிறகு மிகுந்த மகிழ்ச்சியுடன் அவனும் அவன் மைந்தனும் பன்றியின் சுட்ட ஊனினைச் சுவைபட உண்டு களித்தனர்.

பயிற்சி

1. **அருஞ்சொல் விளக்கம் :**

வெகுளி — கோபம்; ஒறுப்பர் — தண்டிப்பர்; கழி—மிக்க; வெகுண்டு — கோபித்து; திளைத்து — அனுபவித்து.

2. **வினாக்கள் :**

1. பகவன் வெந்த பன்றியினை விரலால் தொட்டதும் அவன் அடைந்த நிலை யாது?

2. தான் அடைந்த இன்பம் தந்தையும் அடையவேண்டு மென்று மைந்தன் செய்ததென்ன?

3. **இலக்கணம் :**

இவற்றைப் படி :

| | |
|---|---|
| அவன் | அம் மனிதன் |
| இவன் | இம் மனிதன் |
| உவன் | உம் மனிதன் |

இவற்றுள் அ, இ, உ. என்ற உயிரெழுத்துக்கள் சொல்லுக்கு முதலில் நின்று சுட்டுப் பொருளைத் தந்தன. இவ்வாறு சுட்டுப் பொருளை உணர்த்தும் எழுத்துச் சுட்டெழுத்து எனப்படும். சுட்டெழுத்து அவன், இவன் என ஒரு சொல்லின் உள்ளிருந்தே சுட்டுப் பொருளைத் தருவது அகச்சுட்டு ஆகும்; அம் மனிதன், இம் மனிதன் என ஒரு சொல்லிற்குப் புறத்திலிருந்து சுட்டுப் பொருளைத் தருவது புறச்சுட்டு ஆகும். அகம்—உள்; புறம்—வெளி.

---

## 5. சீனச் சிறுகதை—II

அக்காலத்தில் அச்சிற்றூரிலுள்ள மக்கள் அனைவரும் பச்சை ஊனினைப் புசித்து வந்தனர். அந்நிலையிலுள்ள மாந்தர் வெந்த ஊனின் மணத்தையும் தன்மையையும் உணரார். ஆகவே, ஆதிரையனும் அவன் மகனும் பன்றியைச் சுடும் வகையை அச்சிற்றூரிலுள்ள மற்ற மக்களுக்கு உணர்த்தினரில்லை. தீப்பற்றிய வீட்டினுல்தான் பன்றி இறைச்சியைச் சுட்டுத் தின்னலாம் என்று கண்ட தந்தையும் மைந்தனும் அடிக்கடி தங்கள் குடிசையில் பன்றிக்குட்டிகளை உள்ளே அடைத்துக் குடிசையைக் கொளுத்திவிட்டு வெளியே வந்து, குடிசை முற்றும் எரிந்த பின் உள்ளே சென்று, பன்றிகளின் வெந்த ஊனினைத் தின்று மகிழ்ந்து வந்தனர். இவ்வாருக அவர்கள் தாங்கள் குடியிருந்த குடிசையில் பன்றியை உள்ளே விட்டு அககுடிசையினைச் சிலமுறை பகலிலும், பலமுறை இரவிலும் தீவாய்ப்படுத்தி, அதனுல் உண்டான பயனைப் பெற்றனர். வீடு பற்றி எரிந்தால்தான் பன்றியின் ஊன் பதமாகும் என்றதோர் புதிய முடிவை அவர்கள் கண்டு பிடித்தனர்.

அவர்கள் குடிசை இவ்வாறு பலமுறையும் தீவாய்ப்படுவதைக் கண்ட மற்ற மக்கள் ஆதிரையனும் அவன் மகனும் செய்து வந்த காரியத்தை ஒரு நாள் கண்டுபிடித்து விட்டனர். உடனே அவர்கள், ஆதிரையன் செய்யும் காரியம் அடாது என்று கூறி அவனையும் அவன் மகனையும் நீதி மன்றத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

அன்று ஊரிலுள்ள மக்கள் அனைவரும் வேடிக்கை பார்ப்பதற்காக நீதிமன்றத்தில் வந்து நிறைந்தனர். குறித்த நேரத்தில் நீதிபதியும் தம் இடத்தில் வந்து அமர்ந்தார். நீதிபதி தாம் தீர்ப்புச் சொல்லும் முன்னர் ஆதிரையன் குற்றவாளியோ அல்லனோ என்பதைப் பற்றி அங்குள்ள நடுவுநிலையாளரின் கருத்தினைக் கேட்டார். அங்குள்ள நடுவு நிலையாளருள் ஒருவர், அச்சுட்ட பன்றியின் ஊனினைப் பார்த்து அதிலுள்ள குற்றத்தைக் கண்ட பின்னரே தீர்ப்புச் சொல்லுவது சாலச் சிறந்தது என்றார். அவ்வாறே நடுவுநிலையாளருள் ஒருவர் அச்சுட்ட பன்றியின் சுட்ட ஊனினைத் தொட அச் சூட்டினைத் தாங்கமாட்டாத அவரும் தம் விரலினைக் குளிர்ச்சி செய்யும்வண்ணம் வாயில் வைத்துக் கொண்டனர். அவரும் சுட்ட இறைச்சியின் மாட்சியை உணர்ந்தனர். அதனால், உடனே அவர்கள் ஆதிரையன் குற்றமற்றவன் என்று நீதிபதியிடம் கூற, அவரும் அவ்வாறே தீர்ப்புக் கூறினர்.

நடுவுநிலையாளர் அனைவரும் ஆதிரையன் குற்றமற்றவன் என்று ஒருமனப்பட்டுச் சொல்வதற்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டுமென்று நீதிபதி யூகித்து அறிந்துகொண்டார். பிறகு அவர் ஒரு தனியிடத்திற் சென்று அந்தச் சுட்ட இறைச்சியினைத் தாமும் தொட, அச்சூட்டினைப் பொறுக்கமாட்டாது தாமும் தம் விரல்களைக் குளிர்ச்சி செய்யும் வண்ணம் வாயில் வைத்துக்கொண்டார். உடனே அவரும் சுட்ட ஊனின் உண்மையையும், தன்மையையும்

அறிந்து, வீட்டை எரித்தால்தான் பன்றியின் ஊனைச் சுட்டுத் தின்னலாம் என்ற முடிபை அறிந்து கொண்டார். மறுநாள் நீதிபதி வீட்டிலும் தீப்பற்றி எரிந்தது. அவரும் தம் வீட்டில் பன்றியை உள்ளே வைத்து, வீட்டைக் கொளுத்தி, அதனாலுண்டாகிய சுட்ட பன்றி இறைச்சியை உண்டு உவந்தார். வீட்டைச் சுட்டால்தான் பன்றியின் வெந்த ஊனினைத் தின்னலாம் என்பதை அச்சிற்றூரிலுள்ள மக்கள் அனைவரும் அறிந்து கொண்டனர். அன்று முதற் கொண்டு அவ்வூரில் ஒவ்வொரு வீடும் பற்றி எரிந்தது. விறகின் விலையும் பன்றிக்குட்டிகளின் விலையும் உயர்ந்து விட்டன. ஒவ்வொரு நாளும் சுமார் ஐம்பது வீடுகள் தீவாய்ப்பட்டன.

பிறகு சில நாட்கள் சென்றவுடன் வேற்றூரிலுள்ள ஒருவர் அச்சிற்றூருக்கு வந்து சேர்ந்தார். அம்மக்களின் அறியாமையைக் கண்ட அவர் அவ்வூரிலுள்ள மக்களுக்குப் பன்றியின் இறைச்சியையும் மற்ற விலங்குகளின் இறைச்சியையும் சுடும் விதத்தினை எடுத்து விளக்கினார். பன்றி இறைச்சியினைப் பதம் செய்வதற்கு ஒரு வீட்டை முழுவதும் எரிக்கவேண்டிய அவசியமில்லையென்றும் அடுப்பில் வைத்து ஊனைச் சுடலாமென்றும் கூறி அம்மக்களுக்கு அறிவுறுத்தினார். பின்னர் நாகரிகம் முற்றியவுடன் எல்லா மக்களும் பன்றியின் இறைச்சியினையும் மற்ற விலங்குகளின் இறைச்சியினையும் எம்முறையில் வேக வைத்தல், வறுத்தல், சமைத்தல் என்பன போன்ற முறைகளை உணர்ந்துகொண்டனர்.

## பயிற்சி

### 1. அருஞ்சொல் விளக்கம்:

சிற்றூர் – சிறுமை + ஊர்; தீவாய்ப்படுத்தி – எரித்து; பதம்– பக்குவம்; அடாது – பொருத்தமற்றது; நீதி மன்றம் – நியாய சபை; அமர்ந்தார் – உட்கார்ந்தார்; சால – மிக; வண்ணம் – வகை; மாட்சி – பெருமை; உவந்தார் – மகிழ்ச்சி அடைந்தார்; வேற்றூர் – வேறு + ஊர்

### 2. வினாக்கள்:

1. ஆதிரையனும் அவன் மகனும் கண்டுபிடித்த புதிய முடிவு என்ன ?

2, ஆதிரையனும் அவன் மகனும் நீதி மன்றத்தில் சேர்க்கப்பட்டது ஏன்?

3. நடுவு நிலையாளர் ஆதிரையனைப்பற்றி என்ன முடிவு கூறினர் ?

4. நீதிபதி வீடும் தீக்கிரையானது ஏன் ?

5. வேற்றூரான் அச்சிற்றூராருக்கு என்ன அறி வுறுத்தினன் ?

### 3. இலக்கணம்: மொழிப் பயிற்சி:

1. பின்வரும் வார்த்தைகளைப் பிரித்து எழுதுக.
நூற்றுண்டு, பேரவா, சிற்றூர், வேற்றூர்.

2. கீழ்க்கண்ட வற்றை வாக்கியத்தில் வைத்து எழுதுக:
குறும்புத்தனம், தீவாய்ப்படுத்தி, பால் மணம் மாறுத, நறுமணம், பேரவா, நீதிமன்றம், அறிவுறுத்தினர்.

---

## 6. யான் கண்ட இலங்கை

[டாக்டர் மு. வரதராசனுர், எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி. அவர்கள்]

விவேகாநந்த சபை,
34, மேட்டுத் தெரு,
3—1—50.

அன்புள்ள அரசு,

நலம். என் முந்திய கடிதம் சேர்ந்திருக்கும். செய்திகள் அறிந்திருப்பீர்கள்.

விமானப் பயணம் எவ்வளவு இன்பமாக இருந்ததோ இலங்கைக் காட்சியும் அவ்வளவு இன்ப மாகவே இருந்து வருகிறது. இலங்கைத் தமிழரின் அன்பான உறவோ எல்லாவற்றினும் சிறந்ததாக இருந்து வருகிறது.

இலங்கைத் தமிழர்கள் நம்மைப்போலவே இருக்கின்றுர்கள். தமிழ்ச் சொற்களிலும் ஒலியிலும் மட்டுமே சிறிது வேறுபாடு இருக்கின்றது. கொஞ்சம் பழகிய பிறகு அவர்களுடைய பேச்சு எளிதில் விளங்கிவிடுகிறது. நகரில் வாழும் செல்வக் குடும்பங் களில் ஏறக்குறைய எல்லோரும் நன்ருய்ப் படித்த வர்கள்; பல்கலைக்கழகப் பட்டம் பெற்றவர்கள் பலர்; ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சி பெற்றிருக்கின்ருர்கள். தமிழனின் நாக்கிற்கு ஒரு தனி ஆற்றல் உண்டல்லவா? அது எந்த மொழியையும் எளிதில் கற்றுக் கொள்ளும். இங்குள்ள தமிழர்கள் சிங்கள மொழியை நன்ருகப் பேசுகின்ருர்கள். ஆனுல், சிங்களவர்க்கு அவ்வளவு தமிழ் பேச வருவதில்லை. இலங்கை முகம்மதியர்களும் தமிழே தாய்மொழியாகக் கொண்ட

வர்கள். சீருப்புராணமும், மஸ்தான் சாயபுவின் பாடல்களுமே இவர்களுக்கு வேதம். இவர்களில் பலருக்கு உருதுமொழி தெரியாது. நெடுங்காலத்திற்கு முன்பே தமிழ்நாட்டைவிட்டு இங்குக் குடியேறியவர்கள். ஆகையால், இங்கேயே நிலைத்துவிட்டுத் தமிழை வீட்டுமொழியாகக் கொண்டு வியாபாரம் முதலியவை செய்து வாழ்கின்றார்கள். இவர்களே உணவுக் கடைகள் நிறைய வைத்திருக்கின்றார்கள். சிங்களவர் விரும்பி உண்ணும் இடங்கள் இந்த உணவுக் கடைகளே. இவர்களின் தொழுகைக்காகப் பள்ளிகள் கட்டப்பட்டுள்ளன.

கிறித்துவர்களும் பலர் இருக்கின்றார்கள். ஐரோப்பியர்களும் பலர் தங்கி வாழ்கின்றார்கள். தேயிலைத் தோட்டங்களும் ரப்பர்த் தோட்டங்களும் வைத்து முதலில் தமிழரின் வியர்வையையும், பிறகு சிங்களவரின் வியர்வையையும் பொன்னாக மாற்றிக் கொண்டு வாழ்வை வளமாக்கிக் கொண்டவர்களே இந்த ஐரோப்பியர்கள். இவர்கள் இன்னும் செல்வாக்குடன் தங்கிச் சீரும் சிறப்புமாக வாழ்கின்றார்கள். ஆனால், ஓயாமல் உழைத்து நாட்டைச் சீர்படுத்திய தமிழர்க்குத்தான் இடர்ப்பாடு பெருகுகின்றது.

இந்த வேற்றுமையும் தொல்லையும் இனிமேல் மாறிவிடும் என்று எதிர்பார்க்கலாம். இப்போதும் கிறித்தவத் தமிழர்களுக்கும் சைவத் தமிழர்களுக்கும் இலங்கையில் வேறுபாடில்லை. தமிழ்மொழி இவர்களை ஒன்றுபடுத்திக் காத்து வருகின்றது. பழக்கவழக்கங்களும் ஒரே வகையாக இருந்து வருகின்றன. பண்பாட்டிலும் ஒற்றுமை இருக்கின்றது. ஒரே குடும்பத்தில் ஒரு பக்கம் ஏசுநாதரின் பொன்மொழி

கேட்கும்; மற்றெருரு பக்கத்தில் மாணிக்கவாசகரின் மணிமொழி ஒலிக்கும். கணவனும் மனைவியுமே இவ்வாறு சமயத்தால் வேறுபட்டிருப்பது உண்டு. சமயம் உள்ளத்தின் கோட்பாடு என்பது இந்தக் குடும்பங்களைக் காணும்போது விளங்குகின்றது. சமயம் வாழ்க்கையைப் பிரிக்கவும் பிளவுபடுத்தவும் கருவியாகப் பயன்பட்டு வருவது எங்கும் உண்டு; என்றாலும், இத்தகைய குடும்பங்களில் இந்தக்குறை இல்லை. கிறித்தவர்களின் தொழுகைக்காக மிகப் பழைய கோவில்கள் கொழும்பு நகரில் உண்டு.

சிங்களவரிலும் கிறித்தவர்கள் உண்டு. ஆனால், பெரும்பாலோர் பௌத்தர்களே. மொட்டை அடித்து மஞ்சள் ஆடை சுற்றிக்கொண்டுள்ள பௌத்தத் துறவிகளை அங்குமிங்கும் காணமுடிகின்றது. அவர்கள் மக்களால் மதிக்கப்பட்டவர்களாகவே வாழ்கின்றார்கள். சிங்களவர் பேரன்போடு பௌத்தர்களின் கோவிலுக்குச் சென்று புத்தர் பெருமானை வழிபடுகின்றார்கள். வழிபாட்டுக்காக அவர்கள் எடுத்துச் செல்வது செந்தாமரைப் பூக்களே ஆகும். கொழும்புக்கு வடக்கே ஓடும் 'கழனி கங்கை' என்னும் ஆறு, சிங்களவருக்குப் புனிதமான ஆறாக விளங்கி வருகின்றது. அதன் கரையில் பழைய புத்தர் கோவில் ஒன்று இருக்கின்றது. அது பௌத்தர்களுக்குப் புண்ணியத்தலமாக இருந்து வருகின்றது; புத்தரே வந்து சென்ற இடம் என்று அதை நம்புகின்றார்கள்.

சிங்களவரில் ஆண்களின் உடைக்கும் பெண்களின் உடைக்கும் பெரிய வேறுபாடு தெரியவில்லை. இரு சாராரும் கோடுகள் இழைத்த வெவ்வேறு

நிறமுள்ள லுங்கிகளை உடுக்கின்றார்கள். மேலுக்குச் சொக்காய் அணிகிறார்கள். உடையில் உள்ள எளிமையே அணிகலன்களிலும் உள்ளது. காதில் அணியும் தோடு தவிர, பெரும்பாலும் வேறு அணிகலன்களைப் பெண்கள் அணிவதில்லை. மூக்குத்தி முதலிய பழங்கால நகை ஒன்றையும் அவர்களிடம் காணமுடியாது. அங்கு வாழும் தமிழ்ப் பெண்கள் அணிகலன்களைப் பொறுத்தவரையில் இந்த நாகரிகத்தை மேற்கொண்டிருப்பது போற்றத்தக்கதே.

ஆனால், நம் நாட்டில் படித்த குடும்பங்கள் தவிர, மற்றக் குடும்பங்களில் இவ்வாறு அணிகலன்களைக் குறைப்பது காணோம். எவ்வளவு ஏழையாக இருந்தாலும் மட்டப் பொன்னாலாவது வெள்ளியாலாவது பல நகைகள் தேடி அணிந்து கொள்கிறார்கள். அளவுக்கு மீறி அச்சம், நாணம் ஆகிய பண்புகளை வளர்த்துக்கொள்ள இந்த நகைகள் பயன்படும். முகத்தில் நுட்ப உணர்வு உடைய உறுப்புக்களில் இவ்வாறு பல சிறு அணிகலன்களை அணியாமல் விட்டுவிட்டால், பார்சி பெண்களைப் போலவும், ஐரோப்பியப் பெண்களைப் போலவும் தமிழ்ப் பெண்களுக்கும் அஞ்சாமை முதலிய முற்போக்குப் பண்புகள் வளரும். பெண்கள் முன்னேறாத நாடு என்றென்றும் பிற்போக்கு நிலையில்தான் இருக்கும். தமிழ்நாட்டுப் பெண்கள் வீட்டில் பதுங்கும் பூச்சிகளாக மட்டும் இருந்தால், எதிர்காலத்தில் தமிழுக்கும் தமிழர்க்கும் நல்வாழ்வு இருக்காது. அவர்கள் நாட்டில் விளங்கும் மணிகளாகவும் திகழவேண்டும். அதற்கு ஒரு வழியாக இந்த நகைக்கோலமும் குறைய வேண்டும்.

சமயத் துறையில் இலங்கைச் சைவர்கள் நம்பிக்கையும் ஒழுக்கமும் நிரம்பியவர்கள். நம் நாட்டில் நிகழாதவை அங்கே நிகழ்கின்றன. சமயக் கூட்டங்களுக்கு ஆண்களும் பெண்களும் நிறைய வருவார்களாம். இன்னும் சில நாட்களில் நாங்களும் பேசப்போகின்ருேம் அல்லவா? அப்போது கூட்டத்தைக் காணப்போகின்ருேம். இது மார்கழித் திங்கள். ஆகையால், காலையில் தேவார திருவாசக இன்னிசை கேட்கின்றது. வாெெலியில் திருவெம் பாவை நாள்தோறும் பாடப்படுகின்றது. ஆஸ்பத்திரி களில் உள்ள நோயாளிகளும் அந்த வானொலிப் பாட்டைக் கேட்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறதாம். இது கேட்கவும் வியப்பாக இல்லையா!

* * * *

இன்று காலை பத்து மணிக்கு ஒரு பெரிய கட்டடத்தின் நிழலில் நின்றுகொண்டு மக்கள் கூட்டத்தின் போக்குவரவைக் கவனித்தேன். சிறிது நேரம் நின்றபடியே என்னென்னவோ எண்ணி னேன். அந்த வழியாகச் செல்லும் மக்களுக்குள் உடையில் எவ்வளவு வேறுபாடு! கணக்கே காணேம். 'உள்ளத்தின் பலவகை வேறுபாட்டைத் தீர்க்க முடியாது. நல்ல காலமாக அதைப் பிறர்க்கும் புலனுகாமல் மறைக்க முடியும்! உடம்பின் நிறத் தாலும், மூக்கு, நெற்றி, மோவாய் முதலியவற்றின் அமைப்பாலும் இயற்கையாக உள்ள வேறுபாட்டைப் போக்கவும் முடியாது; மறைக்கவும் முடியாது. உடையில் காணப்படும் வேறுபாட்டை எளிதில் போக்கிக் கொள்ளலாம். எத்தனையோ வீண் சட்டங்

களால் மக்களைக் கட்டாயப்படுத்தி ஆளும் அரசாங்கம், பயனுள்ள கட்டாயச் சட்டம் ஒன்று இயற்றி, இந்த வேற்றுமையை ஒழிக்கக் கூடாதா? வீட்டினுள் எந்தக் கோலத்தில் எந்த உடையிலாவது இருக்க உரிமை தரலாம். வீட்டை விட்டு வெளியே வரும்போது, தெருவில் இயங்கும்போது, பொதுவாழ்வின் நன்மையை முன்னிட்டு ஒரு குறிப்பிட்ட உடையில் தான் இருக்கவேண்டும் என்று சட்டம் செய்வதனால் தீமை என்ன? எவ்வளவோ நன்மை விளையுமே! உலக மக்களுள் ஒற்றுமை வளர்த்தற்கு இது ஒரு நல்ல வழி அல்லவா? கொழும்பு போன்ற, மக்கள் கலப்பு மிகுந்த தலைநகரங்களில் முதலில் இதைக் கையாளலாமே. தெருவில் நடக்கும்போதே நான் ஐரோப்பியன், நான் இந்தியன், நான் சிங்களவன், நான் தமிழன் என்று தன்னை வேறுபடுத்திக் காட்டி வேற்றுமை உணர்ச்சியைப் பரப்புவதற்கு அரசாங்கம் உரிமை தருவது நீதியா? வடநாட்டில் இப்படிச் செய்திருந்தால், முன்பின் அறியாதவர்களைக் கொன்ற மதக் கொலைகள் எத்தனையோ நிகழ முடியாமல் செய்திருக்கலாமே; இவ்வாறு சிறிது நேரம் எண்ணிக் கொண்டே பெருமூச்சு விட்டேன். அந்த எண்ணம் இன்னும் என்னைவிட்டுப் போகவில்லை.

அன்புள்ள,

மு. வ.

பயிற்சி

1. **அருஞ்சொல் விளக்கம்:**

தொழுகை – வணக்கம்; இடர்ப்பாடு – துன்பம்; கோட்பாடு– கொள்கை; கோலம் – அழகு; இயங்குதல் – சஞ்சரித்தல்; துறை – வழி.

2. **வினாக்கள் :**

1. இலங்கைத் தமிழர்களைப் பற்றி நீ அறிவது யாது?
2. முகம்மதியர்கள் எத்திறத்தினர்?
3. கிறித்தவர்கள் எத்தகையினர்?
4. சிங்களவரின் தன்மைகளை விவரிக்க.
5. இலங்கைக்கு எத்தகைய சட்டம் வேண்டுமென்று ஆசிரியர் எண்ணுகின்றார்?
6. இலங்கைச் சைவர்கள் எத்தன்மையினர்?

3. **இலக்கணம் :**

| | |
|---|---|
| எவன் ? | அவனா பாடினான் ? |
| யாவன் ? | இவனோ கூறினான் ? |
| ஏவன் ? | அவனே எடுத்தான் ? |
| எம் மனிதன் ? | யாங்ஙனம் ? |

இவற்றுள் எ,யா, என்ற எழுத்துக்கள் சொல்லின் முன்னே நின்று வினாப் பொருளை உணர்த்துகின்றன. ஆ, ஓ, என்ற எழுத்துக்கள் சொல்லின் பின்னே நின்று வினாப் பொருளை உணர்த்துகின்றன. ஏ என்ற எழுத்து சொல்லின் முன்னும் பின்னும் நின்று வினாப்பொருளை உணர்த்துகின்றது. இவ்வாறு வினாப் பொருளை உணர்த்தும் எழுத்து வினாவெழுத்து எனப்படும். வினாவெழுத்துக்கள் ஏ, யா, ஆ, ஓ, ஏ என்ற ஐந்தும் ஆகும்.

எவன், யாவன், ஏவன் – இவற்றுள் வினாவெழுத்துக்கள் சொல்லின் உள்ளேயே நின்று வினாப்பொருளை உணர்த்தின. இவ்வாறு ஒரு சொல்லின் உள்ளே நின்று வினாப்பொருளை உணர்த்துவது அகவினா ஆகும். எம் மனிதன், யாங்ஙனம், அவனா, இவனோ, அவனே – இவற்றுள் வினாவெழுத்துக்கள் சொல்லின் முன்னும் பின்னும் புறத்திலே நின்று வினாப் பொருளை உணர்த்தின. இவ்வாறு ஒரு சொல்லின் புறத்தில் நின்று வினாப்பொருளை உணர்த்துவது புறவினா ஆகும்.

---

## 7. நாடு கண்ட நல்லார்

[புலவர் பா. மகாலிங்கம் அவர்கள்]

"தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்".

என்பதற்கிணங்க, விஞ்ஞானிகளின் இடையருப் பெருமுயற்சியாலும், உழைப்பாலும் கடல் சூழ்ந்த நிலவுலகத்தின் சேய்மை நாடுகள் பலவற்றை இன்றுள்ள நாம், அண்மையிலுள்ள நாடுகளாகக் கருதுகின்றோம். பதினுயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள அமெரிக்கா, ஆறுயிரம் மைல்களுக் கப்பாலுள்ள ஆங்கில-ஐரோப்பிய நாடுகள், ஆஸ்தி ரேலியா, ஆப்பிரிக்கா முதலியவற்றிற்கு ஆகாய விமானத்தில் விரைந்து செல்லுகின்றோம். ரேடியோ மூலம் அச்சேய்மை நாடுகளில் வாழ்பவர்களுடன் நேருக்கு நேர் தொடர்பு வைத்துக் கொள்ளுகின்றோம்.

இவை, விஞ்ஞான அறிவு தந்த பேறுகளாம். இவற்றில் ஒன்று நீராவிக் கப்பல். இக்கப்பலின் உதவியால் கடலின்கண் ஆங்காங்கே உள்ள பல தீவு களுக்கும், நாடுகட்கும் அச்சமற்றுப் பயணம் செய்ய வசதி கிடைத்தது. ஆனால், 15ஆம் நூற்றாண்டிற்கு முன் இப்பரந்த உலகிலே உள்ள பற்பல நாடுகளை எவரும் அறிந்திலர். அவற்றைக் கண்டறிய முயன்ற அறிஞர்களுக்கு இன்றுள்ள விஞ்ஞானப் பேறுகள் கிடைத்தில. இருப்பினும் பலவகையாக இடர்ப் பட்டுப் பலப்பல நாடுகளையும், அவ்வந்நாட்டுப் பண்பு, மொழி, வாழ்க்கை முறை இவைகளையும் ஆராய்ந்து கண்டனர். இவ்வாறு நாடு காணுதற்கென்று உழைத்த பேரறிஞர்களுள் இத்தாலிய நாட்டுப்

பேரறிஞராகிய கிறித்தபர் கொலம்பசு என்பவரும் ஒருவராவர்.

கொலம்பசு இத்தாலிய நாட்டிலுள்ள சினேவா நகரில் தோன்றினர். இவர் காலம் கி. பி. 15ஆம் நூற்றாண்டு. இவரை அந்நாட்டு மக்கள் பதினைந்தாம் நூற்றாண்டு வீரர் என்று அழைப்பார்கள். 'விளையும் பயிர் முளையிலேயே தெரியும்' என்னும் முதுமொழிக் கேற்ப, கொலம்பசு இளமையிலேயே மிகவும் சுறுசுறுப் புள்ளவராகக் காணப்பட்டார். இவர் கூரிய அறிவு படைத்தவர். புதிய புதிய பொருள்களைக் கண்டு மகிழ் வதில் இவருக்கு மிகவும் ஆர்வம் உண்டு. பெற்றோர் களால் கண்ணுங் கருத்துமாக வளர்க்கப்பட்ட இவர் தக்க பருவமடைந்ததும் பல நாடுகளைச் சுற்றிப்பார்க்க விரும்பினர். பல புதிய நாடுகளைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற எண்ணமும் இவர் மனத்தில் எழுந்தது. அதற்கேற்ப இவரும் இளமையிலேயே கப்பலோட்டும் பயிற்சி பெற்றுச் சிறந்த மாலுமியானர்.

இத்தாலிய நாட்டிலுள்ள பல செல்வந்தர்களிடம் சென்று, தம் மனத்தை உந்திக்கொண்டிருந்த எண்ண மாகிய, புதிய நாடுகளைக் கண்டுபிடிக்க வேண்டிய அவசியத்தை எடுத்துக் கூறி, அச்செல்வர்களின் உதவியையும் வேண்டினர். இவருடைய வேண்டு கோளுக்கு எவரும் செவி சாய்த்திலர். அன்றியும் இவரை ஒரு பித்தர் என்றே அச்செல்வர்கள் கருதினர். இச்செயலால் மனமுடைந்த கொலம்பசு இறுதியாக ஸ்பெயின் நாட்டு அரசி இசபெல்லா என்பவரை அடைந்து தம் கருத்தைத் தெரிவித்தார். இசபெல்லாவும் உதவி செய்வதாக வாக்களித்தார். கொலம்பசு புத்துயிர் பெற்றவர்போல் காணப்பட்டார்;

புதிய ஊக்கம் பிறந்தது. 'முயற்சி திருவினையாக்கும்' அல்லவா ?

அரசியின் உதவி கிடைக்கும் என்று தெரிந்த கொலம்பசு வாளா விருக்கவில்லை. தமக்கு உதவியாக நூற்றிருபது உதவியாளர்களைத் தேர்ந்தெடுத்தார். பாய்மரக் கப்பல்கள் மூன்று இவருடைய நீண்ட கடற் பயணத்திற்குச் சித்தஞ் செய்யப்பட்டன. ஆகஸ்டு மாதம் மூன்ரும் நாள் இசபெல்லா அரசியிடம் விடை பெற்றுக்கொண்டு கொலம்பசு புறப்பட்டார்.

அவர்கள் ஏறியிருந்த மூன்று கப்பல்களும் கடலில் சிறிது தூரம் சென்றன. சுமார் ஒரு மாத காலம் கப்பல்கள் சென்று கொண்டிருந்தன. கண்ணுக்கு எட்டிய தூரமெல்லாம் ஒரே கடல்; நாடு என்பதே காணப்படவில்லை. இனிக் கப்பல்கள் செல்ல வேண்டிய வழியோ இதுவரை யாரும் செல்லாத புதிய வழியாகும். அதனால் கப்பலில் சென்ரேர் பெரிதும் கலக்கமடைந்தனர். "நாம் இனித் திரும்புவோமா" என்ற எண்ணம் கப்பல்களில் செல்பவர்களுக்கு ஏற்பட்டது. அவ்வமயம் முறிந்த பாய்மரம் ஒன்று கடலில் மிதந்து வருவதை அவர்கள் கண்டனர். நம் கப்பல்களுக்கும் இக்கதிதான் நேரப் போகிறது என்று கூறி மனம் பதறினர். "கடவுள் நம்மைக் கைவிடார்; கவலை வேண்டா" என்று கூறிக் கொலம்பசு அவர்களைத் தேற்றினர்.

நெடு நாட்கள் கடலில் பயணம் செய்தும் நிலம் என்பதே காணப்படவில்லை. அச்சமும் கவலையும் கொண்ட பிரயாணிகள் பொறுமையிழந்தனர்: "இனி இவரோடு பேசிப் பயனில்லை. இவரைத் தூக்கித்

கடலில் எறிந்துவிட்டு நாம் நம் நாட்டுக்குத் திரும்பு வோம்" என்று அவர்கள் தமக்குள் பேசி ஒரு முடிவிற்கு வருவாராயினர். அதனையறிந்த கொலம்பசு, அவர்களைத் தனித்தனியே அழைத்து அமைதி கூறித் தேற்றினர். ஒருவாறு ஆறுதலடைந்த அவர்கள் மேல் பயணத்திற்கு ஆயத்தமாயினர்.

கப்பல்கள் விரைந்து மேலே சென்றன. சில நாட்களுக்குப் பிறகு அவர்கள் கடலில் சில காட்சி களைக் கண்டனர். பாறைகளில் மட்டும் வாழும் சில மீன்கள், ஆற்றங்கரைகளில் வளரும் சில புற்பூண்டுகள் ஆகிய இவற்றைக் கடலிற் கண்டனர். அப்பொழுது தான் நிலத்தை நெருங்குகிறோம் என்ற எண்ணம் அவர்களுக்குத் தோன்றிற்று. அவ்வெண்ணம் தோன்றி மறைவதற்குள் இரவு வந்தது. கொலம்பசு கப்பலின் மேல் தட்டில் அமர்ந்து எதிர்ப்புறத்தை உற்று நோக்கினர். இரவு சுமார் மணி பதினொன்று இருக்கும். எதிரே தூரத்தில் வெளிச்சம் ஒன்று தோன்றுவதைக் கண்டார். உடனே கொலம்பசு அளவிலா ஆனந்தங்கொண்டார்; ஆடினர், பாடினர்; அக்காட்சியை மற்றையோர்க்கும் காட்டினர். கப்பலில் இருந்தவர்கள் அதனை உற்றுப் பார்த்து உவகை கொண்டனர். ''நிலம் அண்மையில் உள்ளது'' என்று மகிழ்ச்சியுடன் கூறினர் கொலம்பசு.

கப்பல்கள் மேலும் சிறிது தூரம் கடலில் சென்றன. பின்னர் மாலுமிகள் கப்பல்களை நிறுத்தி நங்கூரம் பாய்ச்சினர். பொழுது இன்னும் புலரவில்லை. ஞாயிற்றின் தோற்றத்தைக் கண்டால் ஞாலத்தைக் கண்டவராவோம் என்று எல்லோரும் அதனையே

எதிர்நோக்கியிருந்தனர். ஆதவனும் உதித்தான். கரையையும், சில மரங்களையும் கண்டு கொலம்பசும் ஏனையோரும் பெருமகிழ்ச்சியுற்றனர். உடனே படகுகளில் ஏறிக் கரை சேர்ந்தனர். புதிய நாட்டில் முதலில் கொலம்பசே கால் வைத்து இறங்கினர். உடனே பேராவலோடு நிலமகளைக் குனிந்து முத்தமிட்டார்; இத்துணையும் கூட்டிவைத்த இறைவனுக்கும் ஏற்ற முறையில் வணக்கம் செலுத்தினர்.

இவ்வாறு கொலம்பசு முதன் முதலாகக் கண்ட இடம் அமெரிக்காவைச் சேர்ந்த மேற்கிந்தியத் தீவுகளில் ஒன்றாகும். இவருக்குப் பின்னர்தான் ஐரோப்பியர் பலர் அமெரிக்காவில் சென்று குடியேறினர்.

கொலம்பசு அமெரிக்காவைக் கண்டு உலகத்திற்கு அறிவித்திருக்காவிட்டால் அமெரிக்காவின் வரலாறே மாறியிருக்கும். உலகத்திலேயே செல்வம் கொழிக்கும் நாடாகவும் அஃது இன்று விளங்க முடியாது. மேலும் இன்று அமெரிக்கா உலக வல்லரசுகளில் ஒன்றாக விளங்குவதற்கும் அவரே காரணம். அந்நாட்டின் இத்தகைய சீருக்கும் சிறப்புக்கும் காரணமாக நின்ற வீரர் கொலம்பசின் திருப்பெயர் வாழ்க!

பயிற்சி

1. **அருஞ்சொல் விளக்கம்:**

சேய்மை – தூரம்; அண்மை – சமீபம்; அச்சமற்று – பயம் நீங்கி; சுறுசுறுப்பு – ஊக்கமிகுதி; ஆர்வம் – ஆசை; மாலுமி – கப்பலோட்டுபவன்; செவி சாய்த்திலர் – காது கொடுத்துக் கேட்டிலர்; வாளா – சும்மா; ஆயத்தம் – தயார் செய்து கொள்ளல்; புலரவில்லை - விடியவில்லை; ஞாயிறு – சூரியன்; ஆதவன்–சூரியன்; கொழிக்கும் – நிறைக்கும்.

2. **வினாக்கள்:**

1. விஞ்ஞான அறிவு தந்த பேறுகள் யாவை?

2. பதினைந்தாம் நூற்றுண்டு வீரர் யார்? அவரை அவ்வாறு அழைப்பதற்கேற்ற காரணங்கள் யாவை?

3. கொலம்பசு நாடு காணச் சென்ற முறையை விவரி?

4. உடன் வந்தவர்கள் என்ன நினைத்தனர்? கொலம்பசு எவ்வாறு அவர்களைத் தேற்றினர்?

5. நாட்டைக் கண்ட கொலம்பசு அடைந்த மகிழ்ச்சி யாது?

**3. இலக்கணம்: (பயிற்சி)**

கீழ்வரும் சொற்களில் உள்ள குறில், நெடில், சுட்டு, வினு, அகச்சுட்டு, புறச்சுட்டு, அகவினு, புறவினு எழுத்துக்களை வகைப்படுத்தி எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| அரசன் | அவன் | எம்மனிதன் | ஆலயம் |
| உலகம் | உம்மனிதன் | முருகனே | ஔவை |
| கண்ணனு | இல்லை | இம்மணி | இவன் |

# 8. செந்தமிழ் வளர்த்த செல்வர்

[வித்துவான் பொன். சுப்பிரமணியம் அவர்கள்]

செந்தமிழின் இன்பச் சுவையை உள்ளபடி அறிந்து போற்றிய பேரறிஞர்கள் பிற நாடுகளிலும் தோன்றியுள்ளனர். அன்னருள் வீரமா முனிவர் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவராவார். இப்பெரியார் தமிழ் மொழிக்குச் செய்த பெருந்தொண்டு தமிழ் மக்களால் என்றும் மறக்க ஒண்ணுததாகும். பல துறைகளிலும் தமிழ் மொழி வளர்ச்சியுறுதற்கு ஏற்ற வழி வகைகளை இப்பெரியார் வகுத்துள்ளார்.

வீரமாமுனிவரின் இயற்பெயர் 'காஸ்டன் ஷியஸ் பெஸ்கி' என்பதாகும். இத்தாலிய நாட்டு காண்டிகிலியேன் என்னும் ஊரில் இவர் கி. பி.

1680ஆம் ஆண்டு நவம்பர் மாதம் பிறந்தார். இவர் கிறித்துவ மதத்தில் கத்தோலிக்கப் பிரிவைச் சேர்ந்தவராவார். இளமையிலேயே சிறந்த கல்வி யறிவும் நல்லொழுக்கமும் உடையவராக விளங்கினர். தமது பதினெட்டாவது வயதிலேயே இவர் கிறித்துவ மத போதகரானர்.

ஐரோப்பிய நாடுகள் உலகின் பல பாகங்களுக்கும் மத போதகர்களை அனுப்பிக் கிறித்துவமதத்தை அக் காலத்தில் பரப்பி வந்தன. ரோமாபுரியிலுள்ள போப்பாண்டவர் நம் பெஸ்கியாரின் நுண்ணறிவை யும் மத போதகராக அவர் செய்யும் தொண்டையும் கண்டு மகிழ்ந்து, 'இந்தியாவிற்குப் போதகராகச் செல்லுதற்கு இவரே தக்கவர்' எனத் தேர்ந்து கி. பி. 1708இல் இவரை இந்தியாவிற்கு அனுப்பினர். பெஸ்கியார் போப்பாண்டவரின் ஆணைக்கு இணங்கி இந்தியாவின் மேற்குக் கடற்கரைத் துறைமுகமாகிய கோவாவில் வந்து இறங்கினர். திருநெல்வேலி மாவட்டமே தாம் கருதி வந்த தொண்டு புரிதற்கு ஏற்ற இடம் என்று எண்ணி அங்குச் சென்றார்.

பெஸ்கியார் இந்தியாவிற்கு வருவதற்கு முன் னரேயே தம் தாய்மொழியாகிய இத்தாலி மொழியோடு இலத்தீன், கிரேக்கம், எபிரேயம், போர்த்துகீசியம் முதலிய மொழிகளையுங் கற்றறிந்தார். 'எத்துணை மொழிகளைத் தாம் அறிந்திருந்தும் தமிழ் மொழியறிவு இல்லையேல் தாம் கருதி வந்த தொண்டினைச் செய்ய இயலாது' என்பதைப் பெஸ்கியார் உணர்ந்தார். எனவே, தமிழ் அறிஞர் ஒருவரது உதவி கொண்டு அவர் தமிழ் பயிலத் தொடங்கினர்.

பல மொழிப் பயிற்சியுடைய பெஸ்கியாருக்கு ஆறு மாத கால அளவிலேயே தமிழில் ஓரளவு பேசும் ஆற்றல் வந்துற்றது. இக்குறைந்த கால எல்லேயில் அவர் பயின்ற தமிழ் நூல்கள் அவரது அறிவுள்ளத்தை இழுத்தன. தமிழ் மொழியின் இனிமையையுணர்ந்த அவர் அம்மொழியின் பிற இலக்கண, இலக்கிய நூல்களேயும் பயிலத் தொடங்கினர். ஐந்து ஆண்டுகள் இங்ஙனம் தமிழ் நூல்களேக் கற்ருர் என்று சொல்லப் படுகிறது. அவ்வைந்து ஆண்டுகளில் அவர் மேற் கொண்ட இலக்கண இலக்கிய நூற்பயிற்சியே அவரைச் சிறந்ததோர் காவியத்தை இயற்றச் செய்தது. தமிழ் மொழியோடு தெலுங்கையும், வடமொழியையும் அவர் கற்ருர்.

பெஸ்கியார் திருநெல்வேலி நாட்டில் உள்ள காமநாயகன்பட்டி, வடக்கன்குளம் என்ற ஊர்களிலும் அவற்றின் சுற்றுப் புறங்களிலும் கிறித்துவ மதக் கருத்துக்களேப் பிரசாரம் செய்து வந்தார். அவர் நம் நாட்டு மத ஆச்சாரியார்கள் அணிவது போலவே காவி நிற உடைகளே அணிந்து கொள்வார். மேலாடையால் உடலேப் போர்த்தி முக்காடிட்டுக் கொள்வார். முத்திஞலான கடுக்கனும், மோதிரமும் அணிந்து கொள்வார். முனிவர்களேப்போல் காலில் குறடு அணிவதும், புலித்தோல் விரித்து அதன்மீது அமர்வதும் அவரது வழக்கங்களாகும். அவரது உடல் அமைப்பும், பேச்சு வன்மையும் மக்களுக்கு அவர்பால் பெருமதிப்பை விளேவித்தன. அவரிடம் அமைந்த தைரியத்தைக் கண்ட மக்கள் அவரைத் 'தைரியநாத சுவாமி' என அழைத்தனர். அப்பெயரே 'வீரமா முனிவர்' என்று மாறியது.

திருநெல்வேலியில் தொடங்கப்பட்ட அவரது மதத் தொண்டு பின்னர் தமிழ் நாட்டின் பல இடங்கட்கும் பரவியது. தமிழ் நாட்டின் பல்வேறிடங்களிலும் வாழ்ந்த மக்கள் அவரைப் புகழ்ந்தனர்.

அவர் சிறிது காலம் திருச்சிராப்பள்ளி நவாப் சந்தாசாகேபிடம் திவானக வேலை பார்த்து வந்தார். சந்தாசாகேப் நான்கு சிற்றூர்களை அவருக்கு மானிய மாக அளித்தனன்; மேலும் அரச சின்னங்களாகிய பல்லக்கு, யானை, குதிரை, ஒட்டகம் முதலியவற்றையும் மெய்க்காப்பாளர்களையும் வழங்கிச் சிறப்பித்தான். வீரமா முனிவர் கி. பி. 1740 வரை திவானக வேலை பார்த்து வந்தார். பின்னர், நாதர்சிங் திருச்சிராப் பள்ளியை முற்றுகையிட்ட காலத்து அவர் அவ் விடத்தைவிட்டுத் திருநெல்வேலி சென்று மதப்பிரசார கராய்த் தொண்டு புரியலானர். மணப்பாடு என்னும் ஊரில் அவர் கி. பி. 1742இல் இயற்கை எய்தினர்.

அவர் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டுகள் மிகப் பலவாம். மத போதகராகச் சொற்பொழிவு ஆற்றுவதற்கே அவர் தமிழ் மொழியைப் பயிலலானர். பேசுவதற்கு ஏற்ற ஓரளவு தமிழறிவைப் பெற்றதோடு அமையாமல் மேலும் அவர் தமிழ் நூல்களைப் பயிலத் தொடங்கியது அம்மொழியிடத்து அவர் கொண்ட பேரன்பேயாகும். தமிழ் மொழியின் இனிமையை யறிந்து மகிழ்வதோடு அமையாமல் வீரமா முனிவர் தமிழில் பல நூல்களை இயற்றத் தொடங்கினர்.

அன்பின் திருவுருவான இயேசுநாதரின் வாழ்க் கையை விளக்கும் "தேம்பாவணி"யையும் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்

கணங்களை விளக்கும் "தொன்னூல் விளக்கத்தை" யும் அவர் இயற்றியருளினார். "அன்னையழுங்கல் அந்தாதி" "அடைக்கல நாயகிக் கலம்பகம்" என்ற பிரபந்தங்களும் அவரால் இயற்றப்பட்டன. அருஞ்சொற்களின் பொருளையறிய நாம் இக்காலத்தில் அகராதிகளைப் புரட்டுகின்றோமல்லவா? அகராதி வடிவில் பழங்காலத்தில் நூல்கள் இயற்றப்படவில்லை. சொற்களின் பொருளைச் செய்யுள் வடிவில் விளக்கும் 'நிகண்டு' என்னும் நூலை மனப்பாடஞ் செய்வது பழங்கால வழக்கமாகும். நிகண்டின் அருமையை அறிந்த அவர் தமிழ் அகராதி ஒன்று தொகுத்தார். அது "சதுரகராதி" எனப்படும். அவ்வகராதியே தமிழில் இயற்றப்பட்ட முதல் அகராதியாகும். எல்லாவற்றிற்கும் மேலாக, திருக்குறளின் சிறப்பை யுணர்ந்த அவர் அந்நூலை 'இலத்தீன்' மொழியில் மொழிபெயர்த்து எழுதி, அதனை உலகறியச் செய்தார். இலத்தீன் மொழி பேசுவோர் வீரமா முனிவரின் திருக்குறளின் மொழிபெயர்ப்பு நூலைப் பயின்று தமிழ் மக்களின் பண்புகளை யறிந்தனர். 'அவிவேக பூரணகுரு கதை' முதலிய உரைநடை நூல்களையும் எளிய முறையில் அவர் இயற்றியுள்ளார்.

கிறித்துவ மத போதகராக நம் நாட்டிற்கு வந்து தமிழ் மொழிக்குச் சிறந்த தொண்டுகளைச் செய்த வீரமா முனிவரைத் தமிழுலகம் என்றும் மறவாது.

## பயிற்சி

1. **அருஞ்சொல் விளக்கம்:**

ஒண்ணாதது - முடியாதது; அன்னார் - அத்தகையோர்; நுண்மை + அறிவு - நுண்ணறிவு; குறடு - பாதக்குறடு, பாதரட்சை; இயற்கை எய்துதல் - இறத்தல்.

**2. வினாக்கள் :**

1. வீரமாமுனிவரின் இயற்பெயர் யாது? அவரது இளமைப் பருவத்தைப்பற்றி நீ அறிவன யாவை?

2. இந்தியாவிற்குப் பெஸ்கியார் வரக் காரணம் என்ன?

3. அவரது உடல் அமைப்பைக் குறித்து எழுதுக.

4. அவர் மதபோதகராகச் செய்த செயல்கள் யாவை?

5. பெஸ்கியார், 'வீரமாமுனிவர்' என்று வழங்கப்பட்டதேன்?

6, தமிழ் மொழியில் அவர் இயற்றிய நூல்கள் யாவை?

7. தமிழ் மொழியின் சிறப்பை உலகறியச் செய்த அவரது செயல் யாது?

8. நிகண்டு. தேம்பாவணி, தொன்னூல் விளக்கம்-இவற்றைக் குறித்துச் சிறு குறிப்பெழுதுக.

**3. இலக்கணம் :**

க், ச், ட், த், ப், ற்-இம்மெய் யெழுத்துக்கள் வலிய ஓசையுடன் ஒலிக்கின்றன; ஆதலின் இவ்வெழுத்துக்கள் வல்லெழுத்து எனப்படும். ங், ஞ், ண், ந், ம், ன்-இம்மெய்யெழுத்துக்கள் மெல்லிய ஓசையுடன் ஒலிக்கின்றன. ஆதலின் இவ்வெழுத்துக்கள் மெல்லெழுத்து எனப்படும். ய், ர், ல், வ், ழ், ள், இம்மெய்யெழுத்துக்கள் வலிய ஓசையும் இன்றி, மெல்லிய ஓசையும் இன்றி இவற்றிற்கு இடைப்பட்ட ஓசையுடன் ஒலிக்கின்றன. ஆதலின், இவ்வெழுத்துக்கள் இடையெழுத்து எனப்படும். ஆகையால், மெய்யெழுத்துக்கள் வல்லெழுத்து மெல்லெழுத்து, இடையெழுத்து என மூன்று வகையாகும். இவை வல்லினம், மெல்லினம், இடையினம் எனவும் வழங்கப்படும்.

---

# 9. சாரணர் படை

[வித்துவான் கோ. வில்வபதி அவர்கள்]

(உரையாடல்)

[பொன்னனும் அவன் தம்பி முத்துவும் தங்கள் வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருக்கின்றனர். அப்போது வேலனும் கண்ணனும் சாரணர் உடை தரித்து அங்கு வருகின்றனர்.]

பொன்னன் : வேலா! கண்ணா! எங்கு இவ்வுடையில் புறப்பட்டு விட்டீர்கள். இன்று பள்ளி விடுமுறை யன்றோ ?

வேலன் : ஆம் ! எங்களுக்கு இன்று சாரணர் வகுப்பு உண்டு. இன்று கொடி வணக்கம் செய்யும் முறையைக் கற்பிக்கப் போவதாக ஆசிரியர் அறிவித்துள்ளார். அதனாலேயே இவ்வளவு காலையில் பள்ளிக்குச் செல்லுகிறோம்.

முத்து : அண்ணா! இவர்கள் யாவருமே இப்படித் தான் உடை அணிவார்களா ?

பொன்னன் : ஆம் தம்பி! இவர்கள் சாரணர் படையில் சேர்ந்து பயிற்சி பெறுகின்றனர். அப்படையைச் சேர்ந்தவர்கள் காக்கி நிறக் கால் சட்டையும் மேல் சட்டையும் அணியவேண்டும். கழுத்தில் முக்கோண வடிவமான துணியைக் கட்டிக் கொள்ள வேண்டும். அத்துணி ஒவ்வொரு பள்ளிக்கும் வெவ்வேறு நிறமுடையதாய் இருக்கும். இன்ன பள்ளியைச் சார்ந்தவர்கள் என்பதை அறிந்து கொள்ள அஃது உதவியாய் அமையும்.

முத்து : இவ்வாறு ஒரே விதமான உடையை அணிந்து கொள்வதால் நன்மை என்ன?

கண்ணன் ; ஒரே விதமான உடையை அணிவதால் நாங்கள் யாவரும் சாரணர் இயக்கத்தைச் சார்ந்தவர்கள் என்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். மேலும் ஏழை பணக்காரன், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற வேற்றுமைகள் எல்லாம் மறைந்து எங்களுக்குள் ஒற்றுமை உண்டாகும்.

வேலன் : பொன்னு ! இவ்வுடையினுல் மற்ருெரு நன்மையும் உள்ளது. சாரணர் படை பொது மக்களுக்குத் தொண்டு செய்வதற்காகவே ஏற்பட்டது. அவர்கள் தங்களுக்கு ஏதாவது உதவி வேண்டுமானுல், இந்த உடையினுல் எங்களை எளிதில் அறிந்துகொண்டு உதவுமாறு கேட்கமுடியும் அல்லவா ?

பொன்னன் : வேலா ! சாரணர் படை என்ருல் ஏதோ வேடிக்கை விளையாட்டுக்களில் பொழுது போக்க ஏற்பட்டது என்றல்லவா எண்ணி இருந்தேன். பொதுமக்களுக்கு நீங்கள் எவ்வாறு தொண்டு புரிகின்றீர்கள் ?

வேலன் : ஓ ! அப்படியா நினைத்திருந்தாய் ! உன் எண்ணம் தவறு. சாரணர்கள் உண்மையான நாட்டுத் தொண்டர்கள். கடவுளுக்கும் நாட்டுக்கும் தொண்டு செய்வதாக வாக்குறுதி செய்து தருதல் ஒவ்வொரு சாரணனுடைய முதல் கடமையாகும். சாரணர்கள் அவ்வாக்குறுதி தவருமல் தாங்களால் முடிந்த தொண்டுகளை எல்லாம் செய்கிருர்கள்.

முத்து: ஆம் அண்ணு! நான் அம்மாவுடன் சென்ற வாரம் காஞ்சிபுரம் தேர்த் திருவிழாவுக்குச் சென்றிருந்தேன் அல்லவா? அப்போது இவர்களைப்போல உடை அணிந்திருந்த இளைஞர்கள் பலர் மக்களை வரிசையாகப் போகச் செய்தும், கூட்டம் கூடிக் குழப்பம் நேராமல் காத்தும் தொண்டு செய்ததைப் பார்த்தேன். ஓர் இளைஞன், காணுமல் போன குழந்தை ஒன்றைக் கண்டுபிடித்து, அதன் பெற்ருேர்களிடம் ஒப்படைத்தான்.

கண்: பொன்னு! அவைமட்டும் அல்ல. எங்கட்குக் கிணறு குளங்களில் விழுந்துவிட்டவர்களை எவ்வாறு காப்பாற்றுவது, நெருப்புக் காயம் பட்டவர்களுக்கும், அடிபட்டு இரத்தக் காயம் அடைந்தவர்களுக்கும் உடனே எத்தகைய சிகிச்சை செய்வது என்பவை பற்றியெல்லாம் கற்றுக் கொடுகின்றனர். அதற்கு முதல் உதவி என்பது பெயர். அதனல் நாங்கள் பொதுமக்களுக்குப் பலவகைகளில் தொண்டு செய்யமுடியும்.

பொன்: பொது மக்களுக்குத் தொண்டு செய்வது தான் இப்படையின் நோக்கமா? வேறு நோக்கமும் உண்டா!

வேலன்: ஏன் இல்லை? சாரணர் படை நம் போன்ற இளைஞர்களிடையே ஒழுக்கம், கட்டுப்பாடு, கடமையுணர்ச்சி, தன்னம்பிக்கை முதலியவற்றை வளர்க்கிறது; பெரியோர்களிடம் அடக்கமும் மரியாதையும் உடையவர்களாய்க்

கீழ்ப்படிந்து நடக்கக் கற்பிக்கிறது; முக்கியமாக எப்போதும் உண்மையே பேசும் குணத்தையும் தன் முயற்சியையும் ஏற்படுத்துகிறது. இன்று இளைஞர்களாக இருப்பவர்கள் எதிர்காலத்தில் இந்நாட்டின் நல்ல குடிமக்களாக விளங்க வேண்டும் என்ற நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டே சாரணர் இயக்கம் ஏற்படுத்தப் பட்டது.

பொன் : ஆ! ஆ! எவ்வளவு உன்னதமான இயக்கம்! வேலா! நானும் சாரணர் இயக்கத்தில் சேர விரும்புகிறேன். அதற்குரிய சட்ட திட்டங்கள் யாவை ?

வேலன் : சாரணர் இயக்கத்தில் சேரும் ஒவ்வொரு வனும் கடவுளுக்கும் நாட்டுக்கும் தன் கடமையைச் செய்வதாகவும், எல்லாச் சமயங் களிலும் மக்களுக்கு உதவி செய்யத் தயாராய் இருப்பதாகவும், சாரண இயக்கத்தின் சட்ட திட்டங்களுக்கு அடங்கி நடப்பதாகவும் சத்தியம் செய்யவேண்டும். இம்மூன்று வாக்குறுதிகளை நினைவூட்டுவதற்காகவே நாங்கள் மூன்று விரல்களை நீட்டி நெற்றியின் அருகில் வைத்து வணக்கம் செலுத்துகிறோம்.

பொன் : வேலா! நீ கூறிய இக்குணங்கள் எல்லாம் சாரணர்களுக்கு மட்டும் அல்ல; எல்லா இளைஞர் களுக்கும் அவசியமானவையே. இவையனைத் தையும் நீங்கள் எப்படிப் பயில்கிறீர்கள் என்பதை அறிவிப்பாயா ?

கண் : இவற்றைக் கற்பிப்பதற்காகவே வாரந்தோறும் பள்ளியில் சாரணர் வகுப்பு நடைபெறுகின்றது. சாரணப் பயிற்சி பெற்ற ஆசிரியர் பற்பல விளையாட்டுக்கள் வாயிலாகவும், உரையாடல்கள், நாடகங்கள் மூலமாகவும், செயல்முறைப் பயிற்சி களின் வாயிலாகவும் எங்கட்கு இத்துறைகளில் எல்லாம் நல்ல பயிற்சி அளிக்கிறார்; பல வகையான முடிச்சுக்கள், முதல் உதவி, உடற் பயிற்சி, பலவிதக் குறிப்புக்களால் செய்தி அறிவித்தல் முதலியவற்றைப் படிப்படியாகக் கற்பிக்கிறார்.

வேலன் : சில செய்திகளை அனுபவ வாயிலாகவே அறியவேண்டும். அதற்காகவே நாங்கள் அடிக்கடி பல இடங்கட்குச் சென்று இரண்டு மூன்று நாள் தங்குகிறோம். அதற்குச் சாரணர் முகாம் என்பது பெயர். அதன் மூலம் புதிய இடத்தில் வழியறிந்து செல்லல், கூடாரம் அமைத்தல், சமையல் செய்தல், 'தன் கையே தனக்குதவி' என்ற பழமொழிப்படி எங்கள் தேவைக்குரியனவற்றை நாங்களே தேடிக் கொள்ளுதல், துன்பங்களைப் பாராட்டாமல் மகிழ்ச்சியுடன் இருத்தல் முதலிய பலவற்றிலும் நாங்கள் பயிற்சி பெறுகிறோம்.

முத்து : அண்ணா! இத்தகைய சிறந்த இயக்கத்தை ஏற்படுத்தியவர் யார்?

வேலன் : ஆம், அதை நாம் முதலில் தெரிந்து கொள்ளவேண்டும். சர் ராபர்ட்பேடன் பவல் என்ற ஆங்கிலேயரால் சாரணர் இயக்கம் தோற்று

விக்கப்பட்டது. இன்று உலகம் முழுதும் இவ் வியக்கம் பரவியுள்ளது. நம் இந்திய நாட்டில் பாரத சாரணர் இயக்கம் என்ற பெயருடன் இவ்வியக்கம் இப்போது நடைபெற்று வருகிறது.

பொன் : வேலா! உங்களால் நான் பல அரிய செய்திகளை அறிந்து கொண்டேன். மிகவும் நன்றி. நாளையே நானும் உங்களுடன் சாரணர் படையில் சேர்ந்து கொள்கிறேன்.

வேலன், கண் : மிக்க மகிழ்ச்சி. நாங்கள் போய் வருகிறோம். வணக்கம்.

பயிற்சி

**1 அருஞ்சொல் விளக்கம் :**

தரித்து - உடுத்தி; வாக்குறுதி - சத்தியம்; முதல் உதவி - விபத்துக்கு உட்பட்டவர்க்கு வைத்தியர் வந்து சிகிச்சை செய்யும் வரையில் அளிக்கப்படும் உதவி, உன்னதமான - உயர்ந்த.

**2 வினாக்கள் :**

1. சாரணர்கள் ஒரே விதமான உடையுடுப்பதால் எத்தகைய நன்மைகள் உண்டாகின்றன ?

2. அவர்கள் பொது மக்களுக்கு எவ்வகையில் தொண்டு புரிகின்றனர் ?

3. முதல் உதவி என்றால் என்ன ?

4 சாரணர் இயக்கத்தின் நோக்கங்கள் என்ன ?

5. அவர்கள் மூன்று விரல்களை நீட்டி வணக்கம் செலுத்துவதன் கருத்து யாது ?

6. சாரணர்க்கு எத்தகைய பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன ?

7. அவர்கள் முகாம் செல்லுங்காலத்தில் எவற்றைக் கற்கின்றனர் ?

3. இலக்கணம்:

மெய்யெழுத்துக்களோடு உயிரெழுத்துக்கள் கூடுவதால் பிறக்கும் எழுத்துக்கள் உயிர்மெய்யெழுத்துக்கள் என அறிந்தோம். உயிர் மெய்யெழுத்துக்கள் தம் மீது ஏறிய உயிரைக்கொண்டு உயிர் மெய்க் குற்றெழுத்து உயிர்மெய் நெட்டெழுத்து என்றும், மெய்யைக் கொண்டு உயிர்மெய் வல்லெழுத்து, உயிர்மெய் மெல்லெழுத்து, உயிர்மெய் இடையெழுத்து என்றும் பகுத்துணரப்படும். அவற்றின் விவரம் வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| உயிர் மெய்க் குற்றெழுத்து | 18 × 5 = | 90 | 216 |
| உயிர் மெய் நெட்டெழுத்து | 18 × 7 = | 126 | |
| உயிர் மெய் வல்லெழுத்து | 6 × 12 = | 72 | 216 |
| உயிர் மெய் மெல்லெழுத்து | 6 × 12 = | 72 | |
| உயிர் மெய் இடையெழுத்து | 6 × 12 = | 72 | |

# 10. இலக்கியச் செல்வம்

[அருள்திரு யோகி சுத்தானந்த பாரதியார் அவர்கள்]

இன்று தலைநிமிர்ந்து ஒய்யாரமாக நடக்கும் ஆங்கில அரசி பிறக்குமுன்னேயே அவள் போன்ற பல அரசிகளுக்கு அரசியாய் விளங்கியவள் நமது தமிழ்த்தாய். பல ஷேக்ஸ்பியர்களை நமது தமிழ் அன்னை ஈன்றனள். சரித்திர ஆராய்ச்சிக்கு முன்னே தமிழாராய்ச்சி தழைத்தோங்கியது. தமிழ் இலக்கியங்கள் பல பிறந்த பிறகே பல நூற்றுண்டுகளுக்குப் பின்னர் அகத்தியர், இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் இயம்பினர். தமிழ் பரம்பொருளிடமிருந்து வந்து, பரம்பொருளை விளக்கி, நம்மைப் பரம்பொருளிடமே சேர்க்கும் அருள்வலியுடையது; இறைவன் போன்ற எல்லையற்றது; கடலால் விழுங்கப்பட்டும், நெருப்பால் எரிக்கப்பட்டும், ஆற்றில்

ஆழ்த்தப்பட்டும் அழியாது, என்றும் இளமையோடு விளங்குவது. தமிழ் எல்லாம் வல்லது. தன்னை அண்டிய அன்பருக்குப் பயிலப் பயில அமுதினும் இனியது!

இவ்வருமைத் தமிழ் முற்காலத்தில்—முதற் சங்க காலத்தில்—அரனும், அகத்தியரும், முருகவேளும், முடிநாகராயரும், நிதியின் கிழவருமாகிய இவர்களால் பல ஆண்டுகள் அருமையாக வளர்க்கப்பெற்று, காய்ச்சினவழுதி முதல் கடுங்கோன் ஈறுகப் பல மன்னர்களால் ஆதரிக்கப்பெற்று, பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை முதலிய அருமையான பாடல்களை யீன்று பொலியும்போது அந்தோ! கடலால் விழுங்கப்பட்டது.

பின்பு, இடைச்சங்கம் எழுந்தது; அகத்தியர், தொல்காப்பியர், இருந்தையூர்க் கருங்கோழி மோசி, வெள்ளூர்க்காப்பியன், சிறுபாண்டரங்கன், திரையன் மாறன், துவரைக் கோமான், கீரந்தையார் முதலிய பல அறிஞர் போற்ற, பல பாவலர் பாட, வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமாறன் ஈறுக ஐம்பத் தொன்பது மன்னரால் அகத்தியமும் தொல்காப்பியமும் ஓதி, கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலை யகவல், மாபுராணம், இசை நுணுக்கம், பூதபுராணம் முதலிய பல நூல்களையீன்று, கபாடபுரத்தில் வளர்ந்து, மீண்டும் கடலுள்ளே மறைந்தது! எல்லாத் துறைகளிலும் விளங்கிய எண்ணிறந்த நூல்களுடன், எண்ணிறந்த புலவர்களுடன் பரந்து விரிந்து கலைக்கடலென உலகம் புகழுந் தமிழைத் திரைக்கடல் விழுங்கியது.

கடைச்சங்க காலத்தில், சேந்தம்பூதனர், இளந் திருமாறன், சிறுமேதாவியார், அறிவுடையரனர், பெருங்குன்றூர்கிழார், மதுரையாசிரியர் நல்லந்துவனர், மருதனிளநாகனர், கணக்காயர் மகனர் நக்கீரனர், பரணர் முதலிய நாற்பத்தொன்பது புலவர் சிறந்து விளங்கினர்; நானூற்று நாற்பத்தொன்பது பேர் பாடினர். முடத்திருமாறன் முதல் உக்கிரப் பெருவழுதி ஈருக நாற்பத்தொன்பது மன்னர் பல ஆண்டுகள் ஆதரித்தனர். நெடுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை, பரிபாடல், கூத்து, வரி, பேரிசை, சிற்றிசை முதலிய பன்னூற்களைக் குவித்து வட மதுரையிலே கடைச்சங்கம் பொலிந்தது.

நமது தமிழ், சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே எண் எழுத்துக்களுடன் பொலிந்தது. ஆ! எத்தனை நூல்கள் தமிழணங்கை அணியுறுத்திக் காலத்தால் விழுங்கப்பட்டன! எத்தனை மன்னர் கவியரங்கேறினர்! நாடகத் தமிழ்தான் எத்தனை நூல்களாய்ப் பாடப்பெற்றது! குணநூல், கூத்துநூல், சயந்தம், பரதம், முறுவல் முதலிய நாடக நூல்கள் எங்கே? ஓவிய நூல், கனுநூல், பஞ்சபாரதீயம் என்னும் இசைநூல், தருக்கக்கோவை, தாளநூல் முதலியவை எங்கே? எல்லாவற்றையும் தமிழ்ச் சோலையினின்று காலச் சூருவளி அடித்துச் சென்றது. அவை நின்றதற்கு அடையாளமாக உரையாசிரியரின் சிற்சில மேற்கோள்களே இப்போது உள்ளன. தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு முதலியவையே இப்போது தமிழருக்கு நிழலளிக்கும் பழஞ்சோலை மரங்கள்.

கடைச் சங்கத்தின் இறுதியில் கி. பி. 100 முதல் 600-க்குள்ளே தான் ஐம்பெருங் காப்பியங்களும் பாடப் பெற்றன. சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை இம்மூன்றும் பைந்தமிழ்ச் சோலையின் பழ மரங்களாய் விளங்குகின்றன. வளையாபதி, குண்டலகேசி எனும் இரண்டும் மறைந்து உரையாசிரியரின் சில மேற் கோள்களிலேதான் உயிர் கொண்டுள்ளன. நீலகேசி, சூளாமணி, உதயணன் கதை. நாககுமார காவியம், யசோதர காவியம் ஆகிய ஐஞ்சிறு காப்பியங்களும் பாடப்பெற்றமை இக்காலமே. வாதவூரடிகளின் மன மலரில் திருவாசகமென்னும் தேன் ஊறியதும் இக்காலத்தேதான். இக்காலத்தில் சமணரும் புத்தரும் தமிழை அன்பூட்டி வளர்த்தனர். பிங்கலம், திவாகரம் என்னும் நிகண்டுகளும், அணியியல் என்ற அணி நூலும், முத்தொள்ளாயிரமும், சில ஆழ்வார் களின் பாசுரங்களும் இக்காலத்திலேயே பாடப் பெற்றன.

இதன் பிறகு சைவ, வைணவப் பாவலர் தமிழணங்கிற்கு ஆயிரக் கணக்கான பாமாலைகள் சூட்டினர். தேவாரத் திருமுறைகளும், நாலாயிரப் பிரபந்தமும் தமிழ் யாழில் அருளமுது வழித்தன. கற்றோர்க்கினிய கல்லாடம் பிறகு பாடப்பெற்றது. நன்னூல், நேமிநாதம், அகப்பொருள் விளக்கம், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக் காரிகை முதலிய நூல்கள் இப்போது பாடப்பெற்றன.

பதினோராம் நூற்றாண்டில் குலோத்துங்க சோழனது அரண்மனையை அலங்கரித்த கம்பர், புகழேந்தி, ஔவை முதலிய புலவர் இன்றும் இளமை

யுடன் இருக்கின்றனர். பத்தாயிரம் கற்பக மலர்கள் பொலியும் கம்பராமாயணம், ஔவையின் நீதிநூல்கள், கலிங்கத்துப் பரணி, கந்தபுராணம், பெரிய புராணம், தண்டியலங்காரம், புகழேந்தியின் நளவெண்பா முதலியவை ஒப்பற்ற தமிழ்மணிகள். கலி 4502 (கி பி. 14ஆம் நூற்றுண்டு-க்குப் பின்னே தமிழ்ச்சோலையை வளர்த்தவர் அதிவீரராம பாண்டியர், வில்லிபுத்தூரார், அருணகிரிநாதர், பரஞ்சோதி முனிவர், சிவஞான முனிவர் ஆவார். இப்போது சென்றனபோக எஞ்சியன இலகும் தமிழ்ச் சோலையுட் சென்று ஒவ்வொரு மரத்தின் கனியையும் சிறிது சுவைத்தல் ஒவ்வொரு தமிழ்மகனுக்கும் கடமையாகும்

பயிற்சி

**1 அருஞ்சொல் விளக்கம் :**

ஷேக்ஸ்பியர் - ஆங்கிலப் புலவர்; இயம்பினர் - கூறினர்; பல + நூல் = பன்னூல்; அணியுறுத்தி - அழகுபடுத்தி; சூருவளி- சூறைக்காற்று; இலகும் - விளங்கும்.

**2. வினக்கள் :**

1. தமிழின் தனிப் பெறும் ஆற்றல் யாது ?

2. முதற் சங்கப் புலவர்கள் யார் யார் ? அக்காலத்தில் எழுந்த நூல்கள் யாவை ?

3. இடைச்சங்க, கடைச் சங்க காலத்துப் புலவர்களையும் நூல்களையும் எழுதுக.

4. ஐம்பெருங் காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள் யாவை ?

5. பிற்காலத்தெழுந்த சிறந்த நூல்களையும் புலவர்களையும் குறிப்பிடுக.

6. தமிழ் மகனுக்குரிய கடமையாகக் கூறப்படுவதென்ன ?

3. **இலக்கணம் :**

எழுத்துக்கள் பிறப்பாலும் ஒலியாலும், வடிவத்தாலும் ஒன்றுக்கொன்று உள்ள பொருத்தத்தைக் கொண்டு இனம் இனமாகப் பிரித்துள்ளார்கள். அவை இனவெழுத்துக்கள் எனப்படும்.

**இனவெழுத்துக்கள் :**

| | | |
|---|---|---|
| அ — ஆ | ஐ — இ | க் — ங் |
| இ — ஈ | ஔ — உ | ச் — ஞ் |
| உ — ஊ | | ட் — ண் |
| எ — ஏ | | த் — ந் |
| ஒ — ஓ | | ப் — ம் |
| | | ற் — ன் |

இவை ஒன்றற்கொன்று இனமாகும்.

ய், ர், ல், வ், ழ், ள், ள் இவையாறும் ஓரினமாகும்.

---

## 11. காவிரி நங்கை

[வித்துவான் வீர. இராமலிங்கம் அவர்கள்]

"பூவார் சோலை மயிலாடப்
புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை அருகசைய
நடந்தாய் வாழி காவேரி"

என இளங்கோவடிகளால் வாழ்த்தப்படும் காவிரியின் புதுப்புனலும், பொன் கொழிக்கும் பெருவளமும், தென்னிந்தியாவின் நெற்களஞ்சிய மெனத் திகழும் தஞ்சை மாவட்டத்தை வளமுறச் செய்கின்றன. இதனால் காவிரியாறு தமிழ் நாட்டின் செல்வங்களுள் ஒன்றாகத் திகழ்கின்றது. வற்றாத நீர்ப்பெருக்கும் குறையாத விளைச்சலும் வளையாத செங்கோலும் கொண்டு வளங்குன்றா நாடாக விளங்கு

வதனாலல்லவா கவியரசராகிய கம்பர் ''தண்ணீரும் காவிரியே, தார் வேந்தன் சோழனே, மண்ணாவதும் சோழமண்டலமே'' எனப்போற்றிப் புகழ்ந்தார். இந்நாட்டில் பாய்கின்ற பேராறு பலவற்றுள்ளும் காவிரியே சிறப்புடையதாகும். இதனைக் ''கங்கையில் புனிதமாய காவிரி'' என்ற பாடலின் அடி நன்கு எடுத்துக் காட்டுகின்றது. காவிரியாறு தன் மருங்கே வாழும் மக்களைத் தன் கருணை நீர்ப் பெருக்கால் வளமாக்கிச் செல்வம் கொழிக்கச் செய்வதால் இது பொன்னியாறு எனப் பெயர் பெறலாயிற்று. இத்தகைய சிறப்புடைய காவிரியாற்றின் தொடக்கமும் முடிவும் நமக்குப் பெருவியப்பைத் தருவதாகும்.

மேற்கு மலைத் தொடரின் ஒரு பகுதியாகக் குடகு நாட்டில் பரந்துள்ள சைய மலையில் காவிரியாறு தொடங்குகின்றது. சைய மலையின் மீது 2½ அடி ஆழமும் 30 அடி அகலமும் உடைய சுனை ஒன்றில் காவிரியின் நீர்ப் பெருக்கு உற்பத்தியாகி ஓடத் தொடங்குகிறது. அச்சுனையின் அருகே காவிரி அம்மன் கோவில் ஒன்று உள்ளது. நீர் ஊற்று வற்றாது பன்னெடுங்காலமாக வெள்ளப் பெருக்கினை வழங்கிவரும் காவிரி அம்மனின் தாய்மை அன்பிற்கு இச்சுனை சான்றாக விளங்குகின்றது. அங்கிருந்து காவிரி பாகமண்டலம் என்ற இடத்தை அடைகின்றது.

அவ்விடத்தில் பல சிற்றாறுகள் இதனுடன் வந்து கலக்கின்றன. மலை முகட்டைத் தாண்டிப் பாய்ந்தோடுவதற்கு முன்னே காவிரியின் நீர்வளத்தைப் பயன்படுத்தக் கருதினர் மக்கள். எனவே, அவ்விடத்தில் 1937ஆம் ஆண்டில் ஏறக்குறைய

2½ கோடி ரூபாய் செலவில் 137 அடி உயரமுள்ள அணை ஒன்று கட்டப்பட்டது. "கிருட்டினராச சாகரம்" என்னும் அந் நீர்த்தேக்கம் அங்கே அமைந்ததால் மைசூர் மாநிலத்தின் மேற்பகுதி எங்கும் வேளாண்மை பெருகிற்று.

காவிரி மைசூர் மாநிலத்தில் புகுந்தவுடன் அதனோடு ஏமாவதி என்னும் துணையாறு வந்து சேருகின்றது. இவ்விடத்தில் 8,600 அடி நீளமுள்ள கண்ணம்பாடி அணைக்கட்டு இரண்டாவதாகக் கட்டப் பட்டுள்ளது. இவ்வணைக்கட்டின் பயனால் மைசூரில் 1,25,000 ஏக்கர் நன்செய் நிலம் வேளாண்மைக்கு ஏற்றதாயிற்று. இதன் அருகில்தான் உலகப் பூங்கா என்று அழைக்கப்படும் அழகிய "பிருந்தாவனம்" அமைந்திருக்கின்றன. பிருந்தாவனத்தின் காட்சி நம் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் இன்பக் காட்சியாகும்

இவ்விடத்திற்கு அருகில் நீர் நிறைந்து செல்லும் காவிரியாறு இரண்டாகப் பிரிகின்றது இரு ஆறு கட்கும் இடையே உள்ள இடம் அரங்கம் என்று அழைக்கப்படும். காவிரியாற்றின் போக்கில் மூன்று அரங்கங்கள் அமைந்துள்ளன. அவற்றுள் இவ்விடம் ஆதி அரங்கம் என்று அழைக்கப்படும். இவ்விடமே சீரங்கப்பட்டணம் என்ற சிறப்புப் பெயருடன், திப்பு சுல்தானின் தலைநகராக விளங்கியது. கோட்டை கொத்தளங்கள், மாட மாளிகைகள், மதில் அரங்கங்கள் ஆகிய இவற்றுடன் திகழும் இம்மா நகரத்தின் எழிலை நாம் ஒரே நாளில் கண்டு இன்புற இயலாது. நகரை வளைத்துள்ள கோட்டை மதிலைக்

கடந்து உள்ளே வந்தவுடன் "ஜும்மா மசூதி"யைக் காணலாம். இதன்மீது கட்டப்பட்டுள்ள கோரியின் மீது ஏறி நின்று பார்த்தால் சீரங்கப்பட்டணத்தின் முழுக்காட்சியையும் நன்கு காணலாம். நகரத்தின் நாற்புறமும் தழுவியோடும் காவிரியின் அழகிய காட்சி நம் கருத்தினைக் கவரவல்லது. மசூதிக்குக் கிழக்கே உள்ள பெரிய தோட்டத்தின் நடுவில் இருக்கும் "தரியா தவுலத்" என்னும் வசந்த மாளிகை பார்வையாளரின் கவனத்தை இழுக்க வல்லதாகும். இம் மாளிகையின் உட்புறச் சுவர்களில், பல வரலாற்று ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன: இதனை அடுத்துத் திப்பு சுல்தானின் கல்லறையும் அதனைச் சூழ்ந்து "இலால் பாக்" என்னும் நந்தவனமும் அமைந்துள்ளன. இவை தென்னகத்துத் தாஜ்மகால் எனச் சிறப்புடன் விளங்குகின்றன. மேலும், பழங்காலக் கட்டடக் கலையை நினைவூட்டும் வகையில் இங்குள்ள அரங்கநாதர் ஆலயம் பொலிவுறத் திகழ்கின்றது.

சீரங்கப்பட்டணத்தைக் கடந்து வரும் காவிரி தழைக்காடு என்னுமிடத்தில் மலையிலிருந்து கீழ் நோக்கிப் பாய்கிறது. காவிரியில் ஏமாவதியோடு இலட்சுமண நதியும் வந்து கலப்பதால் காவிரியாறு நீர்ப் பெருக்கு நிறைந்ததாக விளங்குகின்றது. அத்துடன் வரும் வழியில் சுவர்ணுவதி என்னும் ஆறும் காவிரியுடன் இணைகின்றது. பின்னர் காவிரி இரண்டாகப் பிரிந்து மலையினின்றும் அருவியாக விழுகின்றது. இதுவே சிவ சமுத்திர அருவியாகும். 320 அடி உயரத்திலிருந்து விழும் இச்சிவசமுத்திர அருவியின் விரைவும் ஓசையும் வெகு தூரத்திலேயே நம் செவியில் படும். சிவசமுத்திர அருவி மேலருவி,

TB 031 (67) N63

கீழருவி என இரு வகைப்படும். மேலருவியாகிய ககனசுகி மிகவும் வேகமுடையது; வெள்ளப்பெருக்கு மிகுந்து விழுவதால் கீழுள்ள பாறையில் தெறித்துக் குதித்து எழும்பும் நீர்த்திவலைகள் வானத்தில் புகை என எழும்பும். குறைந்த அகலமும் நிறைசீந் நீரோட்டமும் உடைய இவ்வருவியின் பேரொலி இடி முழக்கம் போலச் செவியில் முழங்கும். இவ்வருவியைப் புகழ்ந்து மேனாட்டவரும் தம் நூலில் வரைந்துள்ளார்கள்.

கிழக்கில் விழும் பார்சுகி அகன்றதும் அமைதியானதுமான ஒரு நீர்வீழ்ச்சி ஆகும். இவ்வருவியின் தோற்றம் சொக்க வெள்ளியை உருக்கி ஊற்றிய வெண்குழம்பைப் போன்று காட்சி தரும். இவ்விடத்தை விட்டு நீங்கியதும் காவிரி ஒன்றுகிப் பாய்கின்றது. வளர்ந்து விட்ட மங்கை வருங்காலக் குடும்பச் சுமை தாங்கும் பொறுமையும், கடமையும் உடையவளாக—குடும்பப் பெண்ணாக விளங்குவது போலக் காவிரி நங்கையும் திகழ்கின்றாள். மக்களை வளர்க்கும் தாய் தன் உடலை உருக்கித் தன் குழந்தைகளின் உடல் நலத்தைப் பேணுவது போலப் பரந்து சென்ற காவிரி பன்னிரண்டு அடி அகலமுள்ள பெரிய பாறையின் இடுக்கில் நெருக்குண்டு அமைதியுடன் செல்லுகின்றாள். ஆடுகள் தாண்டும் அளவு இடைவெளியுள்ள அவ்விடத்தை மேகதாடு (ஆடு தாண்டும் பாறை) என்று கன்னட மொழியில் அழைப்பது மிகவும் பொருத்தமாகும்.

கன்னட நாட்டில் காவிரியாற்றில் ஏற்பட்டுள்ள கிருட்டினராச சாகரம், ஹென்னமரூடு திட்டம்,




146693

மேகதாடு திட்டம் ஆகியவற்ருல் நிலங்கள் வேளாண்மைக்கு உரியனவாய் மாற்றப்பட்டுள்ளன. கோலார் தங்கவயல், பத்திராவதி இரும்புத் தொழிற்சாலே, மைசூர் பட்டுத் தொழிலகம் முதலியவைகள் வளர்ச்சியுற இத்திட்டங்களே பெரும் துணேபுரிகின்றன. குடகு நாட்டில் பிறந்து கன்னட நாட்டில் வளர்ந்து, கொங்கு நாட்டில் புக இருக்கும் காவிரி நங்கை மணப் பெண்ணுக மாறிவிடுகின்ருள். அணே என்னும் திருமண மேடை யில் அமர்ந்து, மருதம் என்ற மணுளனே மணந்து கழனிபடு விளேயுளாம் மழலேச் செல்வங்களேப் பெற விருக்கும் காவிரி நங்கையை நாம் உளமார வாழ்த்துவோமாக.

பயிற்சி

**1. அருஞ்சொல் விளக்கம் :**

பூவார்சோலே...காவேரி - பூக்கள் நிறைந்த சோலேயில் மயில்கள் ஆடவும், குயில்கள் விரும்பி இசை பாடவும், விருப்பம் பொருந்திய மாலேகள் அருகில் அசையவும் நடந்தாயாதலின் காவிரி நங்கையே நீ வாழ்வாயாக; இளங்கோவடிகள்-சிலப்பதி காரத்தை எழுதிய ஆசிரியர்; தார் - வெற்றிமாலே; புனிதம் - தூய்மை; கொழித்தல்-செழிப்பாதல், ஒதுக்குதல்; சான்று-சாட்சி; சிற்ருறு-சிறுமை + ஆறு; முகடு-உச்சி; சாகரம்-கடல்; அரங்கம்-தீவு; கொத்தளம் - கோட்டை மதிலின் ஓர் உறுப்பு; அரண் - காவல்; திவலே-துளி; சொக்கவெள்ளி-சுத்தவெள்ளி; பேணுதல்-காப்பாற்றுதல்; மருதம் - வயலும் வயல் சார்ந்த இடமும்; மணுளன்-கணவன்; கழனி - வயல்; விளேயுள் - விளேச்சல்.

**2. விஞக்கள் :**

1. காவிரியைத் தமிழ் நாட்டின் செல்வம் எனக் கூறப் படுவது ஏன் ?

2. காவிரியம்மனின் அன்பிற்கு எடுத்துக்காட்டாக விளங்குவது யாது ?

3 கன்னட நாட்டில் கட்டப்பட்டுள்ள அணைகள் யாவை? அவற்றால் ஏற்பட்ட நன்மைகளை எழுதுக.

4. 'பிருந்தாவனம்' இஃது எங்குள்ளது? இதன் சிறப்பியல்பினை எடுத்து எழுதுக.

5. தென்னகத்துத் தாஜ்மகால் எனச் சிறப்பிக்கப்படுவது யாது?

6. ககனசுகி, பார்சுகி, மேகதாடு—இவற்றைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.

3. **இலக்கணம் :**

அ, இ, உ, எ, ஒ இவ்வெழுத்துக்கள் குறுகி ஒலிக்கின்றன. ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ—இவ்வெழுத்துக்கள் நீண்டு ஒலிக்கின்றன. இவ்வெழுத்துக்கள் எவ்வளவு குறுகி ஒலிப்பது, எவ்வளவு நீண்டு ஒலிப்பது என்பதை அறிவிப்பது மாத்திரை எனப்படும்.

இயல்பாக மக்களிடம் எழும் கண்ணிமைக்கும் நேரம் அல்லது கை நொடிக்கும் நேரம ஒரு மாத்திரை எனப்படும்.

**அறிந்துகொள் :**

| | |
|---|---|
| குற்றெழுத்திற்கு | ஒரு மாத்திரை |
| நெட்டெழுத்திற்கு | இரண்டு மாத்திரை |
| மெய்யெழுத்திற்கு | அரைமாத்திரை |
| ஆய்தவெழுத்திற்கு | அரைமாத்திரை |

உயிர்மெய்யெழுத்திற்கு அவ்வெழுத்தின் மேல் ஏறியுள்ள உயிரெழுத்திற்குரிய மாத்திரையே மாத்திரையாகும்.

---

## 12. சோழன் கரிகால்வளவன்

[வித்துவான் நா. திருநாவுக்கரசு அவர்கள்]

தமிழ்நாடு பண்டுதொட்டு முடியுடை வேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியர்களால் ஆளப்பட்டு வந்தது. காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகரமாகக் கொண்டு சோழ மன்னர்கள் சோழ நாட்டை ஆண்டு வந்தனர். சோழ அரசர்களில் கரிகால் வளவன் சிறந்தவன் ஆவான்.

கரிகால் வளவன் சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னிக்கு அழுந்தூர்வேளின் மகளிடத்துத் தோன்றியவன். இவன் மனைவி நாங்கூர்வேள் மகள் ஆவாள். இவனது இளமைக் காலத்திலேயே இவன் தந்தை காலமாகி விட்டதால் சோழர் அரசுரிமை பற்றித் தாயத்தாருக்குள் குழப்பம் ஏற்பட்டது. இவனது தாயத்தார் சிலர் இவனைக் கொன்று சோழர் ஆட்சியைக் கைப்பற்றப் பல சூழ்ச்சிகள் செய்தனர். அப்பொழுது இவனது தாய் மாமனாகிய இரும்பிடர்த்தலையார் என்பவரால் இவன் கருவூரில் ஒளித்து வைக்கப்பட்டிருந்தான்.

அரசன் இன்மையால் நாட்டில் குழப்பம் ஏற்பட்டது. நாட்டுமக்கள் ஒருங்குகூடிப் பழங்கால வழக்கப்படி கழுமலம் என்னும் நகரில் பட்டத்து யானையைக் கட்டவிழ்த்து விட்டனர். அது கருவூரில் ஒளிந்திருந்த கரிகாலனை அடைந்து, அவனை எடுத்து வந்து அரசுக்குரியவனாக்கிற்று.

கரிகாலன் அரசுரிமையேற்ற சில நாட்களில் அவன் ஆண்டில் இளையவன் எனக்கருதி அவனைக் கொன்று நாட்டினைக் கைப்பற்றக் கருதிய தாயத்தார், அவனைப் பிடித்துச் சிறையிலிட்டனர்; அத்துடன் அச்சிறைச்சாலைக்குத் தீயும் வைத்தனர். கரிகாலன் சிறிதும் அஞ்சாமல், சிறைக் கதவைச் சிதைத்து வெளியேறினான். அப்பொழுது அவன் கால் சிறிது கரிந்து விட்டதனால் அவன் வீரத்தைப் பாராட்டி அவனைக் 'கரிகாலன்' என்று யாவரும் சிறப்பித்து வழங்கினர். யானையின் வழியாக அரசுரிமை

பெற்றுனுதலின் கரிகால்வளவன் என வழங்கப் பட்டான் என்றும் கூறுவர்.

இவன் அரசுரிமை ஏற்று ஆட்சி செலுத்தி வருங் காலத்தில், தம்முள் மாறுபட்ட வழக்கினையுடைய வயது முதிர்ந்த இருவர் தங்களுக்கு நீதி வழங்க வேண்டி வந்தனர். அரசன் ஆண்டில் மிக எளியவன் என்பதுணர்ந்த அம் முதுமக்கள் "இவ்வரசன் தங்கள் வழக்கின் முடிவை ஆராய்ந்து கூற அறிவு நிரம்பப் பெருதவன்" என்று நினைத்தனர். அவர்களது உள்ளக் கருத்தைக் குறிப்பால் உணர்ந்த கரிகாலன் முதியவர்போல் நரைமுடி தரித்து, அம்முது வழக்காளர்களது சொற்களைக் கொண்டே அவர்கள் மனமகிழும்படி நியாயம் வழங்கினுன். அவ்விரு முதியவரும் சோழர் ஆட்சித் திறமையை வியந்து சென்றனர்.

இவனது வீரத்தைச் சிறப்பித்துப் பொருநராற் றுப்படை என்ற நூலினை முடத்தாமக் கண்ணியார் என்ற புலவர் பாடியுள்ளார். இவன் முருகன் போன்ற சீற்றமும் வலிமையும் உடையவன் என்றும்,கூற்றுவனைக் காட்டிலும் வலிமையுடையவன் என்றும், பகைவர்கள் நாட்டையழித்து அவர்களை ஏவல் கேட்கும்படி செய்தான் என்றும் கூறியுள்ளார். கரிகாலன் வெண்ணிப் பறந்தலை என்ற இடத்தில் தன்னை எதிர்த்த சேரமான் பெருஞ்சேரலாதனை யும், பாண்டியனையும் எதிர்த்துப் போரிட்டு அவர்களைத் தோல்வியுறச் செய்தான். அவ்விரு பெரு வேந்தர்கட்கும் துணையாக வந்த சிற்றரசர்களான பதினெரு வேளிர்களையும் தோற்கடித்தான்.

சிலகாலம் சென்றபின் வாகைப் பறந்தலை யென்னுமிடத்தில் இவனுடன் போர் செய்ய வந்த பாண்டியன், ஒளியர், அருவாளர், வடவர்· குடவர், பொதுவர், இருங்கோவேள், கொங்கர், மழவர் ஆகிய ஒன்பது அரசர்களும் இவனால் வெல்லப்பட்டு இவன் எதிரே செல்லவும் பயந்து, ஒரே நாளில் தங்கள் குடைகளையும் போட்டுவிட்டு ஓடிவிட்டனர். இவ்வாறு தமிழ் நாட்டு முடிவேந்தர் களையும், குறுநில மன்னர்களையும் வென்றதோடு அமையாமல் போரில் பெருவிருப்புடையவனாய் வடநாட்டு அரசர்களையும் வென்று வடதிசை நோக்கிச் சென்றான். ஆங்கு, இமயமலை குறுக்கிட்டுத் தடுத்த மையால் "என் விருப்பத்தை இது தடுத்தது" என்று கோபித்து, அம்மலையின் உச்சியில் தனது புலிக்கொடி யைப் பொறித்து மீண்டான்.

வடநாட்டிலிருந்து மீண்டு வரும்போது வச்சிர நாட்டரசன் ஒரு முத்துப்பந்தரையும், மகத நாட்டரசன் ஒரு பட்டிமண்டபத்தையும், அவந்தி நாட்டரசன் ஒரு வாயிற்றோரணத்தையும் திறை யாக அளித்தனர். அப்பொருள்கள் யாவும் கரிகால் வளவனால் புகாரில் கொண்டு வந்து வைக்கப்பட்டன. மேலும், இவன் இலங்கை மீது படையெடுத்துச் சென்று அந்நாட்டு மன்னனை வென்று சிங்களக் குடிகள் பலரைச் சீர்படுத்தி மீண்டான். இவன் புலவர், கூத்தர், அறிஞர், பொருநர், வீரர் முதலியோ ருக்கு வரையாது வழங்கிய வள்ளல் ஆவான்.

கரிகாலன் தன் நாட்டை வளப்படுத்தக் கருதி வேளாண்மை, வணிகம், கைத்தொழில் இவற்றால் தன்

நாட்டின் செல்வத்தைப் பெருக்கினன். முதலில் வேளாண்மைத் தொழிலைச் சிறப்புறச் செய்வதற்குக் காவிரிக்கு இருபுறமும் கரைகட்டினன். இதனால் இவன் காவிரிக்குக் கரைகண்ட சோழன் என்று பாராட்டப்பட்டான். வெட்டாறு, அரிசிலாறு என்னும் ஆறுகளையும் புதிதாக வெட்டினன். காடுகளைத் திருத்தி விளைநிலமாக்கினன். குளங்கள், ஏரிகள் பலவும் அமைத்து உழவுத் தொழிலை வளர்த்து வந்தனன்.

கரிகால் வளவன் காலத்தில் தமிழ்நாடு வாணிகத்தில் தலைசிறந்திருந்தது. சீனு முதலிய நாடுகளிலிருந்து கர்ப்பூரம், பனிநீர், குங்குமம், முதலியனவும், பல அணிகலன்களும் காவிரிப்பூம்பட்டினத்தில் இறக்குமதி செய்யப்பட்டன. எகிப்து, ரோமாபுரி முதலிய நாடுகளிலிருந்து பொன்னுபரணங்களும், பொன்னுலாகிய கலன்களும் வந்து இறங்கின. இங்கிருந்து மிளகு, ஏலம், இலவங்கம், அரிசி, மயிற்றோகை முதலியன அந்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

காவிரிப்பூம்பட்டினத்தில், பருத்தி பட்டு நூற் சாலைகள் அமைந்திருந்தன. கன்னுர், சித்திரக்காரர், சிற்பிகள், இரத்தினவேலை செய்வோர், தையற்காரர், நெட்டிவேலை செய்வோர், தச்சர், கொல்லர், தட்டார் முதலியோருக்குத் தொழிற்சாலைகள் அமைத்துக் கொடுக்கப்பட்டு அவற்றின் மூலம் கைத்தொழில்கள் ஆதரிக்கப்பட்டன. இவ்வரசன் காவிரிப்பூம்பட்டினம், உறையூர், காஞ்சிபுரம் ஆகிய நகரங்களையும் வேறு பல ஊர்களையும் திருத்தியும் புதுக்கியுமுள்ளான்.

அவைகளேயன்றிப் பல கோவில்களைப் புதிதாகக் கட்டியும், திருவிழாக்கள் செய்வித்தும், பல கல்விச் சாலைகள் நீதிமன்றங்கள் கிராம சபைகள் முதலியன அமைத்தும், பல வகைகளில் நாட்டிற்கு நன்மைகள் செய்துள்ளான்.

கரிகாலன் சிறந்த தமிழ்ப் புலமை உடையவன். தமிழ் மொழியைப் பொன்னேபோல் போற்றி வளர்த்து வந்தவன். இவனைப் பாடிய புலவர்கள் பரணர், நக்கீரர், உருத்திரங்கண்ணனார், கருங்குழலாதனார், வெண்ணிக் குயத்தியார், முடத்தாமக் கண்ணியார் முதலியோர் ஆவர்.

இவன் தன் மாமனாகிய இரும்பிடர்த்தலையாரை அரசவைப் புலவராகவும், ஆலோசனை கூறும் அமைச்சராகவும் அமைத்துக் கொண்டுள்ளான்.

இம்மன்னவனுக்குக் கிள்ளிவளவன், நலங்கிள்ளி மாவளத்தான் என்ற புதல்வர்களும், ஆதிமந்தி என்ற புதல்வியும் இருந்தனர். இவர்கள் யாவரும் நிரம்பிய அறிவு உடையவர்கள். இவன் கி. பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்தவன் ஆவான். வீரம், வண்மை, நீதி, ஆட்சித்திறம் முதலியவற்றிற்கு ஓர் எடுத்துக் காட்டாக இருந்த இம்மன்னவன் முடியுடை மூவேந்தர் களுள் தலைசிறந்து விளங்கினான்.

பயிற்சி

**1. அருஞ்சொல் விளக்கம்:**

தாயத்தார்–பங்காளிகள்; கழுமலம்–சோழ நாட்டில் ஓரூர்; சீற்றம்–கோபம்.

**2. வினாக்கள் :**

1. கரிகாலன் அரசுரிமை பெற்ற முறையை விவரிக்க.
2. கரிகாலன் என்ற பெயர்வரக் காரணம் என்ன ?
3 கரிகாலன் நியாயம் வழங்கியது எவ்வாறு ?
4. கரிகாலன் பெற்ற வெற்றிகளைக் குறிப்பிடுக.
5. கரிகாலனைப் பாடிய புலவர்கள் யார் யார் ?
6. வாகைப்பறந்தலைப் போரில் கரிகாலனால் வெல்லப்பட்ட அரசர்கள் யார் யார் ?
7, கரிகாலன் வடநாட்டில் யார் யாரிடம் என்னென்ன பொருள்களைத் திறையாகப் பெற்றான் ?
8, நாட்டு வளப்பத்திற்காகக் கரிகாலன் செய்த நற்செயல்களை விவரி.

**3. இலக்கணம் :**

| | |
|---|---|
| ஆ—பசு | தா—தருக |
| பூ—மலர் | வா—வருக |
| கை—ஓர் உறுப்பு | போ—செல்க. |

இவற்றுள் ஆ, பூ, கை, தா, வா, போ என்பன தனித் தனியே ஒவ்வோரெழுத்துக்களாகும். இவ்வெழுத்துக்கள் தம்மை உணர்த்துவதோடு வேறு பொருளையும் உணர்த்துகின்றன.

மணி, பழம், மஞ்சள், சக்கரம் இவை இரண்டு முதலான எழுத்துக்கள் தொடர்ந்து வந்து ஒரு பொருளைத் தந்து இவ்வாறு நிற்கின்றன. எழுத்துக்கள் தனித்து நின்றோ தொடர்ந்து நின்றோ ஒரு பொருளைத் தருமானால் அது சொல் ஆகும்.

சொல்லானது பதம், கிளவி, மொழி என்றும் வழங்கப்படும். பொருளைத் தராத தனி எழுத்துக்களும் தொடர்ந்து வரும் எழுத்துக்களும் சொல் ஆகா.

---

## 13. முதலுதவி

[வித்துவான் சோ. மாணிக்கம் அவர்கள்]

மக்கள் பற்பல சமயங்களில் தாம் மனத்திலுைம் எண்ண முடியாதவாறு, திடீரென்று பல விபத்துக்களுக்கு ஆளாகின்றனர். அவ்வாறு ஏற்படும் விபத்துக்களுக்கு அவர்கள் இன்ன பரிகாரஞ் செய்வது என்று தெரியாது மயங்கி நின்று விடுகின்றனர். பக்கத்தி லிருப்போரும் திகைப்படைந்து வாளா இருந்து விடுதலும் உண்டு. அதனுல் பெருந் தீங்கு நேரக் காண்கிறோம். ஆகவே, மக்கட்குப் பெரும்பாலும் ஏற்படக்கூடிய சில விபத்துக்களையும், அவைகளுக்கு உடனே செய்ய வேண்டிய பரிகாரங்களையும் நாம் தெரிந்திருக்க வேண்டுவது இன்றியமையாததாகும்.

மக்கள் விபத்திற்காளாவது கவனக் குறைவி ஞலும், அறியாமையினுலுமேயாம். அவ்வாறு நமக்கு ஏற்படும் விபத்துக்கள் பல. அவற்றுள் அரிவாள் முதலிய கருவிகளைக் கையாளும்போது உண்டாகும் வெட்டுக் காயங்களும், தீப்பிடித்த காயங்களும், ஆறு முதலிய நீர்நிலைகளில் முழுகும்போது உண்டாகும் அபாயங்களும் சிலவாம். இவைகளைத் தடுத்துக் கொள்ளும் முறைகளைச் சாதாரண நிலையிலுள்ளோரும் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும்.

சாலைகளில் நடக்கும்போது வண்டி முதலிய வாகனங்களினுல் மோதுண்டு சிலர் அடிபடக்கூடும். அவ்வாறு அடிபட்டவர்களை முதலில் ஒரு தனி இடத்தில் தூக்கி உட்கார வைக்க வேண்டும். அவர் களுக்கு முதலில் நல்ல காற்று வேண்டும். அதன்

பின்னர் அவருக்கு எங்கு அடிபட்டுள்ளது என்று கவனிக்கவேண்டும். எந்த உறுப்பில் அடிபட்டு இரத்தம் வந்தபோதிலும் இரத்தம் வரும் இடத்திற்கு மேலே துணியைக்கொண்டோ, கயிற்றைக்கொண்டோ அந்த இடத்தை இறுக்கவேண்டும். இவ்வாறு செய்தால் இரத்தம் வெளிவராமல் நின்றுவிடும்.

காலில் அடிபட்டு இரத்தம் வரின் நின்றுகொண்டிருக்கலாகாது. கீழே சாய்ந்துகொண்டு ஒரு மணையின் மேலோ அல்லது வேறு ஏதாவதொன்றன் மேலோ காலை உயர்த்தி வைத்துக் கொண்டிருத்தல் நல்லது. அவ்வாறு செய்தால், இரத்தம் மேல் நோக்கிச் செல்லாது குறைவு படும். அதன்மேல் நாம் செய்யும் முதலுதவியால் சிறிதளவு இரத்தம் தடைப்பட்டு நிற்பினும், அது மிகவும் நன்மையாகவே ஆகும் அல்லவா?

ஆறு, குளம் முதலிய நீர் நிலைகளில் வீழ்ந்து அமிழ்ந்து போனவர்களை வெளியே தூக்கிப் பார்க்குமிடத்து, அன்னார் உயிர் நீங்கியவர் போல் காணப்படுவர். ஆனாலும், பெரும்பாலோர் அவ்வாறு உண்மையில் உயிர் நீங்கினவர் ஆகார். அன்னார் உயிர் பிழைத்தெழ நாம் சில செயல்களைச் செய்யவேண்டும். மூச்சு வாங்கிவிடுவதற்கு ஏற்ற மூலகாரணமாயுள்ளது நுரையீரல். அது தன் தொழிலைச் சில சமயம் செய்யாது நின்றுவிடும். அதனால், அன்னார் உயிர் இழந்தவரைப் போன்று காணப்படுவர். ஆகவே, அவர் உயிர் பெற்று எழப் பிறரொருவர் துணை செய்து மூச்சு வாங்கி வெளிவிடும்படி செய்யவேண்டும். அவ்வாறு செய்தால், வாயு உட்செல்லும்; அவர்கள்

உயிர் பிழைத்து எழவும் கூடும். ஆனால், இறந்து போனவர் திறத்தில் எவ்வுதவியும் பயன் தராது.

நீருள் விழுந்து முழுகிக் கிடந்தவர்களின் வாய்க்குள் சேறு, மண் முதலானவை புகுந்திருக்கும். அவர்களைத் தண்ணீரிலிருந்து தூக்கியவுடன், அவர்கள் வாய்க்குள் கையைவிட்டு அவற்றைத் தோண்டிவிட வேண்டும். மேலும் அவர்களைத் தரையில் குப்புறப் படுக்க வைத்து, கைகளைப் பின்பக்கமாக உடம்போடு சேர்த்து வைக்க வேண்டும்; மார்புக்கு அடியில் தலையணையையோ, துணிகளையோ சேர்த்து மேடாக வைக்க வேண்டும். அதன் பின்னர் அவர்கள் உடம்பினுள் இருக்கும் நீர் வெளியாகும்படி, முதுகில் நன்றாக அழுத்தவேண்டும். அவ்வாறு அழுத்துவதால் உட்கொண்ட நீர் முழுவதும் உடனே வெளியாகும்.

நீரெல்லாம் வெளியான பிறகு மூச்சு வாங்குவதற்கான முறைகளைச் செய்யவேண்டும். மூச்சு வாங்குவதற்குரிய முறைகளைச் செய்வதால் அவர்கள் உடல் தளர்ச்சியடையும். அப்பொழுது அவர்கட்கு வெப்பம் அவசியமாகும். அதனால் நாம் மூச்சு வாங்குவதற்காகச் செய்த முறைகளை நிறுத்திவிட்டு, நம் கைகளால் அவருடம்பைத் தேய்த்தோ, வெம்மை தரத்தக்க உடைகளை உடுத்தியோ, வெந்நீர் ஊற்றிய பாத்திரத்தையோ, அல்லது மிதமாகச் சுடுகின்ற கல்லையோ, அவர்களின் கால், வயிறு, தொடை இவ்விடங்களில் வைத்து ஒத்தடங் கொடுத்தோ சூடு உண்டாகுமாறு செய்ய வேண்டும். உடலில் சூடு உண்டானபின்னர் இரத்த ஓட்டம் தொடங்கும். இரத்த ஓட்டம் ஆரம்பித்தபின் சூடான காபி கொடுக்கலாம். அவ்வாறு

கொடுப்பதால், உடலில் சூடு ஏற்படும். அதனுல் இரத்த ஓட்டம் நன்கு பரவும். உணர்ச்சி ஏற்படாத நிலையில் எந்தவித உணவும் கொடுத்தல் ஆகாது.

நம் நாட்டில் பல தடவைகளில் உடைகளில் நெருப்பு பிடித்து இறந்தமை பற்றிக் கேள்விப்படுகிரேம். அவ்வாறு உடைகளில் நெருப்புப் பற்றுவது நம்முடைய கவனக்குறைவினுலேயேயாகும். அவ்வாறு ஏற்பட்டால் நாம் அவற்றைப் போக்குவது எவ்வாறு என்று அறிந்திருக்கவேண்டியது அவசியம். ஆதலின் உடைகளில் நெருப்புப் பிடித்த காலங்களில் நாம் செய்யவேண்டிய முதல் உதவியைக் குறித்து இங்கே சில கூறுவோம்.

தீ பிடித்தவுடனே மேல் நோக்கி எரியும் இயல்புள்ளது என்பதை நெருப்புக் குச்சியிலிருந்து அறியலாம். நெருப்புக் குச்சியில் விரைவாகத் தீப்பற்ருவிடின், அதனை நாம் தலைகீழாகப் பிடிக்கிரேம். அப்பொழுது நெருப்பு மேல்நோக்கி நன்ருக எரிகின்றது. அது போன்று ஒருவர் உடையில் தீப்பிடித்துவிட்டால், தீப்பிடித்தவர் நின்று கொண்டிருத்தல் கூடாது; ஓடுதலும் கூடாது. நின்று கொண்டிருந்தால் நெருப்பு விரைவில் மூண்டு எரியும் என்பது மேலே காட்டியுள்ள உதாரணத்தால் தெளிவாகும். ஆதலால், உடையின் பின்பக்கத்தில் தீப்பிடித்துக் கொண்டால், அன்னுர் தரையில் மல்லார்ந்து படுக்கவேண்டும். முன்பக்கத்தில் தீப்பிடித்துக்கொண்டால், தரையில் கவிழ்ந்து படுக்கவேண்டும். அவ்வாறு உடனே படுத்துவிடுவதால் அனற்கொழுந்து மேல் நோக்கி எரிய இடமில்லாமையால் விரைவில் அணைந்துவிடும்.

உடையை எளிதில் அவிழ்க்க முடியுமாயின், தீப் பிடித்ததும் அவ்வுடையை அவிழ்த்து எறிந்துவிடுதல் சிறந்தது. அவ்வாறு செய்ய இயலாதாயின், தரையில் படுத்துப் புரளுதலும் செய்யலாம்.

முதல் உதவி செய்பவர்கள், ஒருவர் உடையில் தீப்பற்றிக் கொண்டால், முதலில் என்ன செய்ய வேண்டும்? கனமான துணிகளையோ, அன்றிக் கம்பளி, சாக்கு இவைகளையோ சுருட்டி, எரியும் இடத்தின்மேல் போடவேண்டும். அவ்வாறு செய்வதால் நெருப்பு அணைய ஏதுவாகும். அதன் பின்னர் நெருப்புப் பற்றிய ஆடையை மெதுவாக அவிழ்க்க முயல வேண்டும். அவிழ்க்க முடியவில்லையாயின், கத்தரி யினுல் மெதுவாகக் கத்தரித்து எடுக்கவேண்டும். நெருப்பினுல், புண் பட்டவிடத்தில் தேன், விளக் கெண்ணெய் இவைகளுள் ஏதாவதொன்றைத் தடவ வேண்டும். இவ்வாறு செய்வதால் எரிச்சல் குறையலாம்.

இவையேயன்றி, அனல் பிடித்தவுடன் தண்ணீ ரைத் தெளிப்பது கூடாது. அவ்வாறு செய்வதால் அனல்பட்ட இடங்கள் கொப்புளங்கொள்ள ஏது வாகும். ஆபத்தான இடங்களில் எரியுற்றிருக்கு மாயின், மருத்துவருடைய உதவியை உடனே நாடவேண்டும்.

ஆகவே, மேலே கூறியவாறு எல்லாவிதவிபத்துக் களுக்கும் முதலுதவி செய்வது பெரிதும் நன்மை தருவதாகும். சாதாரண காலங்களில் இம்முதலுதவி களைச் செய்து பழகினுல்தான், போர் நிகழும் அபாய காலங்களில் துணிந்து நின்று உதவி புரிதல்

கூடும். ஆதலின் மாணவர்களாகிய நீங்கள் மேலே கூறியுள்ள சிறு முதலுதவிகளையாவது செய்யத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

பயிற்சி

1. **அருஞ்சொல் விளக்கம் :**

வாளா - சும்மா; பரிகாரம் - சிகிச்சை; தீங்கு - தீமை; இறுக்கல் - நன்ருகக் கட்டல்; மணை - பலகை; மேடாக - உயரமாக; வெப்பம் - சூடு; மிதமாக - குறைவாக.

2. **வினக்கள் :**

1. மக்கள் விபத்திற்குள்ளாவது எதனுல் ?
2. அடிபட்டோருக்குச் செய்யும் முதலுதவி யாது ?
3. நீரில் வீழ்ந்து அமிழ்ந்தவர்களைத் தூக்கியபின் செய்ய வேண்டியவை யாவை ?
4. மூச்சு உண்டாகும் முறைகளைக் குறிப்பிடுக.
5. உடையில் நெருப்புப் பிடித்தால் உடன் செய்யவேண்டியதென்ன ?
6. நெருப்புப் பற்றியவருக்குச் செய்யத் தகாதது யாது ?
7. முதலுதவியின் இன்றியமையாமையைக் குறிப்பிடுக.

3. **இலக்கணம்:**

(1) மனிதன், மரம், கல் - இச்சொற்கள் ஒன்றன் பெயரைக் குறிக்கின்றன. இவை பெயர்ச்சொல் ஆகும்.

(2) வந்தான், பாடுகிருன் - இச்சொற்கள் ஒன்றன் தொழிலை (வினையை) க் குறிக்கின்றன - இவை வினைச்சொல் ஆகும்.

(3) புலி போல, கண்ணனிடம், வந்தானு இவற்றுள் போல, இடம், ஆ என்பன தனியாக நின்ருல் பொருள் விளங்காது. பெயர், வினைகளைச் சார்ந்து நின்ருல்தான் பொருள் விளங்கும். இவ்வாறு பெயர் வினைகளைச் சார்ந்து அவற்றின் இடையே வரும் சொல், இடைச்சொல் ஆகும்.

(4) உறு புகழ் — சால நன்று
தவப் பிஞ்சு — நனி பேசினுன்

இவற்றுள் புகழ், பிஞ்சு, நன்று, பேசினுன் என்ற சொற்களின் தன்மையை உறு, தவ, சால, நனி என்ற சொற்கள் மிகுதிப்

படுத்திக் காட்டுகின்றன. இவ்வாறு, பெயர்ச்சொல், வினைச் சொல் ஆகியவற்றின் தன்மைகளை மிகுதிப்படுத்திக் காட்டி அவற்றோடு உரிமை பூண்டு வரும் சொல் உரிச்சொல் ஆகும். ஆகையால், சொற்கள் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச் சொல், உரிச் சொல் என நான்கு வகைப்படும்.

---

## 14 புலவரும் புரவலரும்

[புலவர் ப. அரங்கசாமி அவர்கள்]

நம் பழந்தமிழ் நாட்டில் பொறுப்பும் திறமையும் வாய்ந்த அரசர்கள், புலவர்கள் பலரைத் தமது அமைச்சர்களாகக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள்; அவசியமான சமயங்களில் அவர்கள் கூறும் அறிவுரைகளைக் கேட்டு அதன்படி நடந்தும் வந்தனர்; தம் வாழ்க்கையில் உறுதுணையாகிய நண்பர்கள் உண்டென்றால் அவர்கள் புலவர்களேயாவர் என்றும் எண்ணி வந்தார்கள்.

செந்தமிழ் நாடு என்னும் சிறப்புப் பெயரையுடையது பாண்டிய நாடு. முதல், இடை, கடையென்னும் முச்சங்கங்களை நிறுவி, நல்லிசைப் புலவர் பலரைக் கூட்டித் தித்திக்கும் தீந்தமிழ்க் காவியங்கள் பல இயற்றச் செய்து பாண்டிய மன்னர்கள் தமிழை வளர்த்த காரணத்தால் அந்நாடு அப்பெயர் பெறுவதாயிற்று. அத்தகு பாண்டிய நாட்டில் வளம்பல பெற்ற பழம்பதி 'பிசிர்' என்னும் ஊர். அவ்வூரில் ஆந்தையார் என்ற புலவரொருவர் இருந்தார். எனவே, அவர் பிசிராந்தையார் என ஊர்ப் பெயரைச் சேர்த்து அழைக்கப்பட்டார். அக் காலத்தில் சோழ நாட்டைக் கோப்பெருஞ்சோழன் என்ற சோழ மன்ன

ஞெருவன் ஆண்டு வந்தான். பிசிராந்தையாரைக் கோப்பெருஞ் சோழன் நேரிற் கண்டவனல்லன்; கண்டிராஞயினும் அப்புலவர்பால் அவன் கொண்டிருந்த அன்பும் நட்பும் அளவிடற்கரியன.

அதைப்போலவே அவனது பெருங்குணங்களைக் கேட்டறிந்த பிசிராந்தையாரும் அவனிடத்து எல்லையற்ற அன்புடையவராய் வாழ்ந்து வந்ததோடு அவன் இறந்துபட்ட காலத்தில் தாமும் உடனுயிர் நீத்தாரெனின் அவர்தம் நட்பின் உயர்விற்கு எல்லையுண்டோ? இன்னும், ஔவையும் அதியமானும் கொண்டிருந்த அன்பும் நட்பும் அறியப் புகின் அதற்கு வரம்புண்டோ? விரைவில் பரிசில் தந்து விட்டால் வேருரிடத்திற்குச் சென்று விடுவாரோ என்றஞ்சிய வள்ளல் அதியமான் பரிசில் தராது காலம் நீட்டித்து வந்தான். ஔவையார், அதியமான் காலம் நீட்டித்தலைக் கண்டு அவன், தம் சிறப்பை உணர்ந்திலன் போலுமென்று எண்ணிக் கோபித்துப் புறப்பட்டார். பின்னர் அதியமான் புலவரை நோக்கி, "புலவீர்! யான் உங்களோடு பழகி, நும் புலமையைச் சுவைத்து மகிழும் இந்த நல்வாய்ப்பை இழந்துவிட விரும்பாத காரணத்தால்தான் காலம் தாழ்த்தினேனேயன்றி, நும்புலமைச் சிறப்பை அறியாததாலன்று; மன்னித்தருள்க" என வேண்டிப் பொன்னும் மணியும் எல்லையில்லாது வாரி வழங்கிஞன். புலவர் அரசனின் அன்பிற்கு மகிழ்ந்து, பின்னும் பன்னெடு நாட்கள் அவனுடன் தங்கி, அதியமானைத் தம் செந்தமிழ்ப் பாக்களினின்று ஒழுகும் தீந்தமிழ்ச் சுவையைப் பருகி இன்புறச் செய்தார்.

இன்னும் பாரியும் கபிலரும் கொண்டிருந்த அன்பிற்கும் நட்பிற்கும் அளவில்லை. பாரி கபிலரைத் தன் அவைக்களத் தலைமைப் புலவராகவும், வேண்டும் பொழுது அரசியல் மதியமைந்த அமைச்சராகவும், உற்றுழியுதவும் நண்பராகவும், தன் மக்களிருவர்க்கும் தலைசிறந்த ஆசானுகவும் கொண்டிருந்தானென்று அறிகின்ருேம். என்னே ! அவர் தம் இடையீடில்லா அன்பு கலந்த நட்புணர்ச்சி !

வெளிமான் என்ற அரசனைக் கண்டு, பாடிப், பொருள் பெறச் சென்ற புலவர் பெருஞ்சித்திரனுர் அவனது அரண்மனை வாயிலிற் சென்று "நீடு வாழ்க" என்று வாழ்த்தி நின்ருர். அப்பொழுது வாயிற் காப்போர் "புலவீர் ! வெளிமான் இறந்து பன்னுட்களாயினவே" என்று தெரிவித்தனர். புலவர் செய்தியைக் கேட்டார்; எல்லையற்ற துன்ப மடைந்தார். இயற்கையின் செயலை எண்ணி அவர் உள்ளம் குமுறிற்று. குமுறிய அவரது உள்ளத்தி லிருந்து சில சொற்கள் வந்தன. ஆம் ! அவை சோகத்தின் வடிவம்; புழுங்கிய மனத்தின் படப் பிடிப்பு. "அரசே ! இல்லை யென்னுது அள்ளி வழங்கும் நும்மைக் கண்டால் ஆதவனைக் கண்ட பனிபோல எனது வறுமைத் துன்பம் அகலும் என்று நம்பி வந்தேன். ஆனுல், நம்பி வந்த என்னுசை ஒழிந்தது. பசித் துன்பம் வாட்ட அதனைப் பொறுக்க இயலாமல், உணவுப் பொருளைச் சமைத்த பானையைத் திறந்து பார்க்க, அதனின்றும் சோற்றுக்குப் பதிலாக நெருப்பைக் கண்டதுபோல நான் திடுக்கிட்டேன். ஏ யமனே ! என் ஆருயிர் நண்பனுய வெளிமானுடைய உயிரைக் கொண்

டனேயே. இது தகுமா?'' என்று பாடுகிறுர். எத்துணை அன்பு கலந்த நட்புணர்ச்சியைக் காட்டுகிறது பாருங்கள்.

வெற்றித் திருமகளின் இருப்பிடம் என மன்னர்களால் வணங்கப்படும் சிறப்பு வாய்ந்தது முரசு. அதனை நீராட்டி, நெய்யும் பிறவும் பூசி, பூவும் பிறவும் புனைந்து வணங்குதல் மரபு. அதற்காக முரசம் வெளியே எடுத்துச் செல்லப்பட்டுள்ளது. அம்முரசத்திற்குரிய மெல்லிய மலர் மெத்தையில் பரிசில் பெற வந்த புலவர் மோசிகீரனுர் வழி நடந்த களைப்பால் அயர்ந்து, உறங்கி விடுகிறுர். நீராட்டப் பட்ட முரசம் வீர வழிபாட்டுடன் அரண்மனை வந்து சேர்கிறது. ஆனுல், அதற்குரிய இடத்தில் கந்தையுடையும், களைப்பும் சேர்ந்த புலவர் உறங்குகிறுர். இதனையறிந்த அரசன் சேரன் பெருஞ்சேரலிரும்பொறை புலவரின் களைப்பை யுணர்ந்து, அவரை ஒன்றும் செய்யாது கவரியைக் கொண்டுவரச் செய்து வீசுகிருன்.

மெல்லென வீசிய அந்த இளங்காற்றில் அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்த புலவர் பின்னர் தூக்கத்தினின்றெழுந்து, நிகழ்ந்தவற்றை யுணர்ந்து, மென்மையான பூக்கள் நிறைந்த கட்டிலில், அதன் சிறப்பையுணராது ஏறித் துயின்ற என்னைப் புலவனென்ற காரணத்தால் இரு துண்டாகத் துண்டிக்காமல் விட்டதே நீ தமிழினிடத்துக் கொண்டுள்ள அன்பைக் காட்டும். ஆனுல், நீயோ அதனெடு அமையாமல் கட்டிலை நெருங்கி வந்து, வலிமை சான்ற உனது தோள்களை உயர்த்தித் தண் என வீசினுய். காவலர் பலர் நின்று ஏவல் செய்ய

வாழும் நீ, உன் கையால் இந்த ஏழைப் புலவனுக்கு கவரியைக்கொண்டு வீசுவதென்றால் உன் அன்பை என்னவென்று சொல்வது? என்று வியந்து பாடுகின்றார். சித்தித்துப் பாருங்கள். இந்த நட்புணர்ச்சி எத்தகையதென்பதை இது மட்டுமா? இன்னும் எத்தனையோ பல.

"காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து மேலாடு மீனிற் பலராவர்"—என்பது நாலடியார். ஆம்! செல்வமுடைய காலத்துப், பழுத்த மரத்தைச் சுற்றிவரும் புள்ளினங்களைப்போல உறவினர் பலராவர்; ஆனால் அவரே துன்பம் ஒன்று அடைவாராயின், "நான் அவரது நண்பன்" என்று கூறி அத்துன்பத்திற் பங்கு கொள்வார் சிலரேயாவர். "நீர் நிறைந்த காலத்தில் குளத்தைத் தமது வாழ்விடமாகக் கொண்டிருந்த புள்ளினங்கள், அக்குளத்தில் நீர் வற்றியவுடன் பறந்து சென்றுவிடுவதைப்போலத் தாம் நட்புக்கொண்டிருந்தவர் வறுமையுற்ற காலத்தில் அவரை விட்டு நீங்குபவர்கள் உறவினரல்லர். நீர் வற்றிய காலத்தில் தாமும் காய்ந்து உலர்ந்து போகும் கொடிகளைப் போன்றாரே உறவினர்" என்று அழகுபட மொழிந்தார் நம் அருந்தமிழ்க் கிழவி ஔவையார். அத்தகைய கூற்றுக்குச் சான்றாக வாழ்ந்து விளங்கினர் புலவர் பெருமக்கள்.

பிசிராந்தையாரைக் கண்ணால் கண்டிலனாயினும் அவரிடத்துப் பேரன்பு கொண்டு நட்புப் பூண்டிருந்த கோப்பெருஞ்சோழன், தான் வடக்கிருக்குங் காலத்து "என் உயிரனைய நண்பராய பிசிராந்தையார் நான் நலம்பெற வாழ்ந்த காலத்து வந்திலராயினும், துன்பப்படும் இக்காலத்து வராது நில்லார். ஆதலின்

அவர்க்கும் என்னையொட்டி இடமொழித்து வைக்க" என்று கூறுகிறான். உடனிருந்த புலவர்கள் வியக்கின்றனர். ஆனால், அவன் கூறியதைப்போலவே பிசிராந்தையார் சோழன் வடக்கிருக்கும் செய்திகேட்டு அவ்விடம் வந்து, தாமும் உண்ணாநோன்பு இருந்தார். இதனைக் கண்டோர் அனைவரும் வியப்புற்றுப் பலவாறு புகழ்ந்து பாராட்டினர்.

இவ்வாறு புலவர்களும் புரவலர்களும் நீங்காத அன்புடையராய் வாழ்ந்து வந்தனர் என்பதை நம் பழங்கால இலக்கியங்கள் மூலமாகக் கண்டு இன்புறுகின்றோம்.

### பயிற்சி

**1. அருஞ்சொல் விளக்கம்:**

உறுதுணை – உற்ற துணை; வரம்பு – எல்லை; காலம் நீட்டித்தல் – தாமதித்தல்; மதி – அறிவு; ஆசான் – ஆசிரியர்; புழுங்கிய – வருந்திய; புனைந்து – அலங்கரித்து; காலாடு போழ்து – செல்வத்தில் திளைத்திருந்த காலம்; கழிகிளைஞர் – மிகுந்த உறவினர்; மீன் – நட்சத்திரம்; புள்ளினம் – பறவைக் கூட்டம்; வடக்கிருத்தல் – வடக்குத்திசை நோக்கி அமர்ந்து உண்ணாவிரதமிருந்து உயிர் துறத்தல்.

**2. வினாக்கள் :**

1. ஔவையாருக்கு அதியமான் பரிசில் அளிக்காது காலம் நீட்டித்ததன் காரணம் என்ன?

2. வெளிமான் பிரிவுகேட்டுப் பெருஞ்சித்திரனார் வருந்திக் கூறியதென்ன?

3. மோசிகீரனார் பெருஞ்சேரல் இரும்பொறையின் தமிழ்ப் பற்றை எவ்வாறு வியந்து கூறியுள்ளார்?

4. உண்மையான உறவினர்கள் பற்றி ஔவையார் கூறுவதென்ன?

5. பிசிராந்தையார் கோப்பெருஞ் சோழன் நட்புக் குறித்து நீ அறிந்தவற்றை எழுதுக.

3. இலக்கணம்:

(1) மரம், கல், நிலம், நீர்—இப்பெயர்கள் பொருள்களுக்கு இயல்பாகப் பெரியோர்களால் இட்டழைக்கப்பட்ட பெயர்கள். இவை இடுகுறிப்பெயர் எனப்படும்

(2) நாற்காலி, பறவை, முக்கண்ணன்—இப்பெயர்கள் ஒரு காரணம் பற்றிப் பெரியோர்களால் வழங்கப்படும் பெயர்கள். இவை காரணப்பெயர் எனப்படும்.

எனவே, பெயர்கள் இடுகுறிப்பெயர், காரணப்பெயர் என இருவகைப்படும்.

---

## 15. ஐக்கியநாடுகள் சபை

[திரு. D. பழனிவேல், எம். ஏ. அவர்கள்]

[உரையாடல்]

தமிழ்மணி: அப்பா! உங்களிடம் ஒன்று கேட்க வேண்டும்.

தந்தை: தமிழ்மணி! என்ன கேட்க வேண்டும்? தாராளமாகக் கேள்.

தமிழ்மணி: இன்று செய்தித் தாளில் முதற் பக்கத்தில் ஐ. நா. சபை என்று இருந்தது. ஐ. நா. என்றால் பொருள் என்ன அப்பா?

தந்தை: ஐக்கிய நாடுகள் சபை என்பதன் சுருக்கமே ஐ. நா. சபை என்பதாகும்.

தமிழ்மணி: அச்சபை யாரால் நடத்தப்பட்டு வருகிறது?

தந்தை: ஐ. நா. சபை என்பது உலகின் பல நாடுகள் ஒன்று சேர்ந்து உலக அமைதிக்காக ஏற்படுத்திக் கொண்ட சபை.

தமிழ்மணி: அப்பா! இச்சபை எப்பொழுது துவக்கப் பட்டது? எங்குத் துவக்கப்பட்டது? ஏன் துவக்கப்பட்டது?

தந்தை: நல்ல கேள்வி கேட்டாய்! சொல்லுகிறேன் கவனமாகக் கேள்! 1914ஆம் ஆண்டிலிருந்து 1946ஆம் ஆண்டிற்குள் உலகில் இருபெரும் போர்கள் நடைபெற்றுள்ளன. இப்போர்கள் உலகப் பெரும் போர்கள் என்றழைக்கப் படுகின்றன. ஏனெனில், உலகில் உள்ள பெரும் பாலான நாடுகளும் இருபிரிவாகப் பிரிந்து போரிட்டுக் கொண்டன. இப்போரினுல் மிகுதி யான மக்கள் இறந்தனர்; பொருட் சேதமும் ஏற்பட்டன. இதனைக் கண்ட உலகப் பெருந் தலைவர்கள் கலங்கினுர்கள். மீண்டும் உலகப் போர் ஏற்படுமானுல், உலகிலுள்ள மக்கள் இறந்து அழிந்து விடுவர் என்றஞ்சினர். இனி உலகில் இம்மாதியான போர்கள் நிகழாதவாறு தடை செய்ய சுமார் ஐம்பது நாடுகளின் தலைவர்கள், 1945ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம் அமெரிக்காவிலுள்ள 'சான் பிரான்சிஸ்கோ' என்னும் நகரில் ஒன்றுகூடி 'ஐக்கிய நாடுகள் சபை'யை நிறுவினர். அச்சபைக்கான நோக்கங் களையும் திட்டங்களையும் ஐக்கிய நாடுகளின் சாசனம் என்னும் பெயரில் தீட்டினர். அவை யாவும் பெரும்பாலான நாடுகளால் 1945-ஆம் ஆண்டு, அக்டோபர் 24ஆம் நாள் ஒப்புக் கொள்ளப்பட்டன. அன்று முதல் ஐ. நா. சபை செயலாற்றத் தொடங்கியது. இன்று தொண் ணூற்று ஒன்பது நாடுகள் அச்சபையில் அங்கம் வகிக்கின்றன.

தமிழ்மணி: அச்சபையில் யார் வேண்டுமானாலும் அங்கத்தினராகச் சேர முடியுமா ?

தந்தை: சுதந்திர நாடுகள் யாவும் அச்சபையின் உறுப்பினராகும் தகுதியுடையவை. பொதுவாக உலக அமைதியை விரும்பும் நாடுகள் அனைத்தும் ஐ. நா. சபையில் உறுப்பினராகச் சேரலாம்.

தமிழ்மணி: அச்சபையின் நோக்கங்கள் என்ன அப்பா?

தந்தை: அச்சபையின் முதன்மையான நோக்கம் உலகில் நிரந்தரமான அமைதியைப் பாது காப்பதேயாகும். மற்றும் உலக நாடுகளிடையே நட்புணர்ச்சியை வளர்த்தல்; நல்லெண்ணத்தையும் ஒத்துழைப்பையும் பெருக்குதல்; மக்களிடையே சரிசம நிலையை ஏற்படுத்துதல்; கூட்டுறவு மனப்பான்மையை வளர்த்தல்; அடிப்படை மனித உரிமையைக் காத்தல் போன்றவையே ஆகும்.

தமிழ்மணி: இத்தகைய சிறந்த நோக்கங்களை ஐ. நா. சபை எப்படிச் செயல்படுத்துகிறது ?

தந்தை: இந்நோக்கங்களை நிறைவேற்றவும் திறம் படச் செயலாற்றவும் ஐ. நா. சபை ஆறு பிரிவுகளாகப் பிரிந்துள்ளது. அவை பொதுப் பேரவை, பாதுகாப்பு மன்றம், சமுதாயப் பொருளியல் மன்றம், பொறுப்பாட்சி மன்றம், உலக நீதிமன்றம், பணித்துறை நிலையம் ஆகியனவாகும்.

தமிழ்மணி: இப்பிரிவுகளில் முக்கியமானது எது அப்பா ?

தந்தை: முக்கியமான பிரிவு என்று எதனையும் தனிப் படுத்திக் கூறமுடியாது. ஏனெனில் ஆறு சபைகளும் ஐ. நா. வின் பொது நோக்கங்களைப் பாதுகாக்கவே பாடுபடுகின்றன. இருப்பினும் ஐ. நா. சபையின் முழுப் பொறுப்பையும் மேற்கொள்ளும் மிகப்பெரிய சபை, பொதுப் பேரவையே. ஐ. நா சபையின் வரவு செலவுத் திட்டங்களை இச்சபைதான் கவனித்துக் கொள்ளுகின்றது.

தமிழ்மணி: மற்ற சபையின் அலுவல்களைப்பற்றிச் சொல்லுங்கள் அப்பா!

தந்தை: ஒரு நாடு மற்றொரு நாட்டை நியாயமற்ற முறையில் கைப்பற்றுமானல் அதில் தலையிட்டு ஆக்கிரமிக்கப்பட்ட நாட்டிற்கு நியாயத்தை வழங்குவது போன்ற காரியங்களைப் பாதுகாப்பு மன்றம் கவனித்துக் கொள்ளுகின்றது. சாதி, மதம், நிறம் ஆகிய வேற்றுமைகளின்றிப் பொருளாதார, சமூக நிலைகளில் பின் தங்கியுள்ள நாடுகளை முன்னுக்குக் கொண்டுவருவது சமுதாய பொருளியல் மன்றத்தின் வேலையாகும். சுய ஆட்சி பெருதனவும், முன்னேற்றம் அடையாதனவுமான நாடுகளின் நலனைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு, பொறுப்பாட்சி மன்றம் என்ற சபையினுடையது ஆகும். இரண்டு நாடுகளுக்குள் ஏற்படும் கருத்து வேற்றுமைகளைத் தீர்த்து வைத்தல், சர்வதேச சட்டங்களை விளக்குதல் போன்றவைகளை உலகநீதி மன்றம் கவனித்துக் கொள்ளு

கின்றது. சபைகளைக் கூட்டுவது, அங்கத்தினர்கட்கும் ஏனையோர்கட்கும் தகவல்கள் கொடுப்பது போன்ற வேலைகளைப் பணித்துறை நிலையம் கவனித்துக் கொள்ளுகின்றது.

தமிழ்மணி: பணித்துறை நிலையத்தினின்றும் செய்திகளைக் கொடுப்பது யார் ?

தந்தை: பொதுப் பேரவையால் தேர்ந்தெடுக்கப்பட்ட செயலாளரே பணித்துறை நிலையத்தின் தலைவராக இருப்பார். இவர் 'செக்ரடரி ஜெனரல்' என்றழைக்கப்படுவார்.

தமிழ்மணி: உண்மையாகவே ஐ. நா. சபை உலக அமைதிக்கு நன்முறையில் பாடுபடுகிறது அப்பா!

தந்தை: மேற்கூறியதோடு ஐ. நா. சபை நின்றுவிடவில்லை தமிழ்மணி! முக்கியமான ஆறு சபைகளைச் சொன்னேனல்லவா? அவைகளைத் தவிர சர்வதேசத் தொழிலாளர் சங்கம், சர்வதேச நலச் சங்கம், ஐக்கிய நாடுகளின் கல்வி விஞ்ஞானக் கலைக்கழகம், உலகப் பாங்கு போன்ற வேறு பல பிரிவுகளும் இருக்கின்றன. அவை உலக மக்களின் நலத்திற்காகவும், முன்னேற்றத்திற்காகவும், நல்வாழ்விற்காகவும் பாடுபட்டு வருகின்றன.

தமிழ்மணி: அப்பா! இவ்வளவு நாட்களாக ஐ. நா. சபை என்றால் ஏதோ நமக்கெல்லாம் தொடர்பில்லாத, எங்கோ உள்ள சபை என்றிருந்தேன். இன்றுதான் ஐ. நா. சபை உலகில் மனிதராக வாழ விரும்பும் ஒவ்வொருவருக்கும் தொடர்

புடைய சபை என்று அறிந்தேன். இனி, செய்தித் தாள்களில் ஐ. நா. சபைகளைப் பற்றிய செய்திகள் வந்தால் தவறாது படிப்பேன்.

தந்தை : தமிழ்மணி ! இதைப் போன்று எந்த ஐயமேற்பட்டாலும் தயங்காது கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும்.

பயிற்சி

1. **அருஞ்சொல் விளக்கம் :**

ஐக்கியம்-ஒற்றுமை; நிரந்தரமான-நிலையான; தீட்டினர்-எழுதி அமைத்தனர்; மனப்பான்மை - எண்ணம்; திறம்பட - ஒழுங்காக.

2. **வினாக்கள் :**

1. ஐ. நா. சபை என்றால் என்ன? அஃது எப்பொழுது ஏன் எதற்காக நிறுவப்பட்டது?

2. ஐ. நா. சபைக்கு உறுப்பினராகத் தக்கவர் யாவர்?

3. ஐ. நா. சபையின் நோக்கங்களை விவரி.

4. ஐ. நா. சபையின் ஆறு உட் பிரிவுகள் யாவை?

5. ஐ. நா. சபையின் உட்பிரிவுகள் ஒவ்வொன்றும் ஆற்றி வரும் பணிகளை எழுதுக.

6. ஐ. நா. சபையில் உள்ள வேறு பல பிரிவுகளையும் குறிப்பிடுக.

3. **இலக்கணம் :**

மரம் —இது இடுகுறிப் பொதுப் பெயர்.
தென்னை—இது இடுகுறிச் சிறப்புப் பெயர்.
பறவை—இது காரணப் பொதுப்பெயர்.
நாற்காலி—இது காரணச் சிறப்புப் பெயர்.

எனவே, இடுகுறிப் பெயரும். காரணப் பெயரும் பொதுப்பெயர் என்றும், சிறப்புப் பெயர் என்றும் இரண்டிரண்டு வகையாகும்.

---

# 16. என் இளமைக் குறும்புகள்

(பிரதாப முதலியார் சரித்திரம்)

[திரு மாயூரம் ச. வேதநாயகம் பிள்ளை அவர்கள்]

நான் படிப்பில் மந்தமாயிருந்தாலும், விளையாடுகிறதில் அதிக முயற்சி உள்ளவனாக இருந்தேன். என்னுடைய இளமைக் குறும்புகள் யாவருக்கும் வியப்பாக இருக்குமாதலின், அவைகளை அடியில் விவரிக்கிறேன்.

என் வீட்டில் என்னைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் சுரத்தினாலும் அம்மையினாலும் துன்பப் பட்டார்கள். அவர்களைப் பலபேர் வந்து விசாரிக்கிறதும், உபசாரஞ் செய்வதுமாயிருந்தார்கள். என்னை ஒருவரும் விசாரிக்காதபடியால், நான் ஒரு மூலையில் அழுதுகொண்டிருந்தேன். எல்லோரும் ஓடிவந்து "ஏன் அப்பா! அழுகிறாய்?" என்று கேட்டார்கள். நான் தேம்பித் தேம்பி அழுதேன்.

நானும் சில பிள்ளைகளும் தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது, அவர்களில் ஒரு பையன் என்னைப் பார்த்து 'நான் இரண்டு கண்களையும் மூடிக் கொண்டு ஒரு வித்தை செய்கிறேன்; நீ அந்த வித்தையை இரண்டு கண்களையும் திறந்துகொண்டு செய்வாயா?" என்று கேட்டான். அதற்கு நான், "நீ இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு செய்கிற வித்தையை, நான் கண்களைத் திறந்துகொண்டு செய்யக்கூடாதா? அப்படி நான் செய்யாவிட்டால் உனக்கு இவ்வளவு பந்தயம் கொடுப்பேன்" என்று ஒப்புக்கொண்டேன். உடனே அந்தப் பையன் நடுத்தெருவில் உட்கார்ந்து, இரண்டு கண்களையும்

மூடிக்கொண்டு, மண்ணை அள்ளி அள்ளித் தன் கண்மேல் போட்டுக்கொண்டான். பிறபாடு, அவன் என்னைப் பார்த்து "நீ இரண்டு கண்களையுந் திறந்து கொண்டு இந்த வித்தையைச் செய்" என்று மண்ணை அள்ளி என் கையில் கொடுத்தான். நான் கண்ணை இழந்து போவதைப் பார்க்கிலும், காசை இழப்பது நலமென்று நினைத்துப் பந்தயக் காசை அவனுக்குக் கொடுத்து விட்டேன்

எங்கள் வீட்டு மேல் மாடியில் அதிக விலைபெற்ற பெரிய நிலைக்கண்ணாடிகள் மாட்டியிருந்தன. ஒரு கண்ணாடியில் நானும் சில பிள்ளைகளும் எங்களுடைய முக அழகைப் பார்த்தபோது, எல்லோருடைய முகமும் அழகாயிருக்க, என் முகம் மட்டும் எனக்கே பார்க்கச் சகிக்காமல் விகாரமாயிருந்தது அது கண்ணாடியினுடைய பிசகென்றெண்ணிக் கையை ஓங்கிகொண்டு அந்தக் கண்ணாடியில் பலமாக ஒரு குத்துக் குத்தினேன். அந்தக் கண்ணாடி ஆயிரம் துண்டாக உடைந்து போயிற்று.

எந்த வேலையிலும் சோம்பலாயிருக்கக் கூடா தென்றும் தொட்ட காரியத்தை உடனே முடித்துவிட வேண்டுமே தவிர நாளைக்கென்று நிறுத்திவைக்கக் கூடாதென்றும், என் தாயார் எனக்கு அடிக்கடி புத்தி சொல்லி வருவார்கள். நான் அந்தப் புத்தியைத் தின்பண்டங்கள் தின்பதில் பயன்படுத்தி, எத்தனை அகப்பட்டாலும், நாளைக்கென்று வைக்காமல் உடனே சாப்பிட்டு, மந்தப்பட்டு வைத்தியர்களுக்கு ஓயாத வேலை கொடுத்து வந்தேன்.

தினமும் பொழுது விடிந்தவுடனே உபாத்தியாயர் வந்து படிக்கச் சொல்லித் தொந்தரவு செய்தபடியால்,

பொழுது விடியாமலிருப்பதற்கு என்ன உபாயமென்று யோசித்துப் பார்த்தேன். கோழி கூவிப் பொழுது விடிகிறபடியால், கோழி கூவாவிட்டால் பொழுது விடியாதென்று நினைத்து, கோழி வளர்க்க வேண்டாமென்று அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்களுக்கு உத்தரவு செய்தேன்.

ஒரு நாள் நான் வீதியில் விளையாடிக்கொண்டிருந்தபோது ஒருவன் அவனுடைய மாட்டை ஓங்கி ஓங்கி அடித்து, ஓட்டிக்கொண்டு போனான். நான் "ஏன் அடிக்கிறாய்?" என்று கேட்டதற்கு அவன், "என் மாட்டை எப்படியாவது நான் உபயோகிக்கிறேன், உனக்கென்ன?" என்றான். நான் உடனே என் கையில் இருந்த கழியால் அவனை அடித்து, "என் கழியை நான் எப்படியாவது உபயோகிக்கிறேன் உனக்கென்ன?" என்று சொல்லிப்போய் விட்டேன்.

நான் ஒரு நாள் கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்த பிறகு, முதுகின் அழகைப் பார்க்கும் பொருட்டுக் கண்ணாடியை எனக்குப் பின்புறத்தில் வைத்து முதுகாலே பார்த்தேன். ஒன்றும் தெரியாமல் மயங்கினேன்.

என்னுடைய நேசன் ஒருவன் ஒரு புத்தகம் அனுப்பவேண்டுமென்று எனக்குத் தபால் வழியாகக் கடிதம் அனுப்பினான். நான் அந்தப் புத்தகத்தை அனுப்பவில்லை. சில நாளைக்குப் பிறகு நான் அவனைக் கண்டபோது "புத்தகம் அனுப்பும்படி நீ எழுதிய கடிதம் என்னிடத்தில் வந்து சேரவில்லை" என்றேன். "கடிதம் வந்து சேராவிட்டால், நான்

புத்தகம் வேண்டுமென்று எழுதியது உனக்கு எப்படித் தெரிந்தது?'' என்று அவன் கேட்க, நான் கூறமுடியாமல் விழித்தேன்.

ஒரு முக்கியமான சங்கதியைப்பற்றி ஒரு சிநேகிதனுக்கு நான் கடிதம் எழுதி அதன் கடைசியில், "இந்தக் கடிதம் வந்து சேராவிட்டால். உடனே எனக்குத் தெரிவி'' என்று எழுதினேன். 'கடிதம் போய்ச் சேராவிட்டால்', என்ற அந்தக் கடைசி வாக்கியத்தால் என்ன பயன் என்பதை நான் கவனிக்கவில்லை.

ஒரு புகழ்பெற்ற பொய்யன் என்னிடத்தில் வந்து, தன்னுடைய ஆயுள் முழுமையும் தான் ஒரு நிசம் சொன்னதில்லை என்றான். "நீ ஒரு நிசம் சொல்லியிருக்கிறாய்!" என்று நான் சொல்ல, அவன் "இல்லை! இல்லை!!" என்றான். ''ஆயுசு முழுவதும் நிசம் சொன்னதில்லை யென்று நீ சொல்வது நிசம் அல்லவா!" என்றேன், அவன் சரியென்று ஒப்புக் கொண்டு என்னைப் பார்த்து, ''நீ ஒரு பொய் சொல்ல வேண்டும்" என்றான். நான் உடனே "நீ யோக்கியன்'' என்றேன்.

என் பாட்டியாருக்கு மூன்றும் முறைச் சுரம் வந்துகொண்டிருந்தது. எங்கள் வீட்டிலிருந்த கடிகாரம் மத்தியானம் இரண்டு மணி அடித்தவுடனே சுரம் வருவது வழக்கமாயிருந்தபடியால், கடிகாரம் ஓடாமல் நின்றுவிட்டால் சுரமும் வராமல் நின்று போகுமென்று நினைத்துக் கடிகாரத்தை நிறுத்தி விட்டேன். அப்படிச் செய்தும் அந்தத் திருட்டுச் சுரம் வராமலிருக்கவில்லை.

ஒரு நாள் எங்கள் குடும்ப வைத்தியர் வீதியில் வருகிறதைக் கண்டு அவர் கண்ணிலே படாமல் நான் ஓடி ஒளிந்து கொண்டேன். கனகசபை, "என் ஒளிகிறீர்கள் ?" என்று கேட்டார். "நமக்குச் சில நாளாய் வியாதி வரவில்லையே! வைத்தியருக்குக் கோபமாயிருக்குமென்று பயந்து ஒளிந்து கொண்டேன்" என்றேன்.

ஒரு புலவர் நான் பாடிய ஒரு கவியைப் பார்த்து, அதை நான் கம்ப ராமாயணத்திலிருந்து திருடிக் கொண்டதாகக் குறை கூறினர். "நான் திருடவே இல்லை" என்றேன். அவர் அந்தக் கவி கம்ப ராமாயணத்திலிருப்பதாகக் காட்டினர். நான் உடனே அவரைப் பார்த்து, "நான் அந்தக் கவியைக் கம்ப ராமாயணத்திலிருந்து திருடி எடுத்துக் கொண்டிருப்பேனுல் பிறகு அந்தக் கவி கம்ப ராமாயணத்தில் எப்படி இருக்கக்கூடும்? ஆகையால் நான் திருடவில்லை யென்பதற்கு அந்தக் கவி கம்ப ராமாயணத்திலிருப்பதுவே சான்ருகும்" என்று மெய்ப்பித்தேன்,

பயிற்சி

1. **அருஞ்சொல் விளக்கம் :**

கவி – செய்யுள்; சான்று – சாட்சி; மெய்ப்பித்தேன் – உண்மையை நிருபித்துக் காட்டினேன்.

2. **விஞக்கள் :**

1. பாலியத்தில் தான் ஒரு மூலையில் உட்கார்ந்து அழுததற்கு என்ன காரணம் காட்டுகின்ருர் ?

2. தாயார் கூறிய புத்திமதிகளில் எது தவருமல் அனுசரிக்கப்பட்டு வந்தது ?

3. கையில் வைத்திருந்த கழியால் மாட்டைத் துரத்திச் சென்றவனை அடித்த காரணம் யாது ?

4. பாட்டியாருக்குச் சுரம் வராமலிருக்க, நினைத்துச் செய்த காரியம் என்ன ?

3. இலக்கணம் :

1. முருகன், மனிதன், யானை, கல் — இவைகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளின் பெயரைக் குறிககின்றது ஆதலின் இவை பொருட்பெயர் எனப்படும்.

2. தஞ்சை, உறையூர், வானம்—இவைகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் இடத்தின் பெயரைக் குறிக்கின்றது. ஆதலின் இவை இடப்பெயர் எனப்படும்.

3. சித்திரை, ஆவணி, காலை, பகல்—இவைகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காலத்தின் பெயரைக் குறிக்கின்றது. ஆதலின் இவை காலப்பெயர் எனப்படும்.

4. தலை, கை, கால், கிளை, வால்—இவைகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் உறுப்பின் பெயரைக் குறிக்கின்றது. உறுப்பு சினை எனவும் கூறப்படும். ஆதலின், இவை சினைப்பெயர் எனப்படும்.

5. வெண்மை, கருமை, நன்மை, தீமை — இவைகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குணத்தின் பெயரைக் குறிக்கின்றது. ஆதலின், இவை குணப்பெயர் அல்லது பண்புப்பெயர் எனப்படும்.

6. நடத்தல், உண்ணல், ஓட்டம், வரவு—இவைகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தொழிலின் பெயரைக் குறிக்கின்றது. ஆதலின், இவை தொழிற்பெயர் எனப்படும்.

எனவே, பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர் சினைப்பெயர், குணப்பெயர், தொழிற்பெயர் எனப் பெயர்கள் ஆறு வகைப்படும்.

---

## 17. கடல் மல்லை

[வித்துவான் வி. ப. நடராசன் அவர்கள்]

மாமல்லபுரம் என்னும் ஊர் சென்னைப் பட்டினத்திற்குத் தெற்கே 30 கல் தொலைவிலும், செங்கற்பட்டுப் புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்கே 18 கல் தொலைவிலும் இருக்கிறது. கடற்கரையில் அமைந்

திருக்கும் சிறு கிராமம் இது. பல நூற்றாண்டுகளுக்கு முன்பு, பல்லவ மன்னர் காலத்தில் பெரிய துறைமுகப் பட்டினமாகச் சிறப்புடன் இருந்த இப்பட்டினம் இது போது சிற்றூராகக் காட்சி அளிக்கின்றது. சிற்றூராக இருப்பினும், பேரும் புகழும் பெற்று விளங்குகிறது. அயல் நாட்டார் பலர் அடிக்கடி இங்கே வருகிறார்கள். இங்குள்ள குகைக் கோயில்களையும், கற்றேர்களையும், பாறைகளில் செதுக்கப்பட்ட சிற்ப வேலைப்பாடுகளையும் கண்ணாரக் கண்டு மனமாரப் போற்றி மகிழ்ந்து செல்கிறார்கள். இந்திய நாட்டில் சிற்பக்கலை சிறப்படைந்து விளங்கும் பல இடங்களில் மகாபலிபுரமும் ஒன்று. இது தொண்டை நாட்டைச் சேர்ந்தது.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் ஆண்ட மகேந்திரப் பல்லவனுக்குப் பின், அவர் மகன் நரசிம்மவர்மன் பட்டத்திற்கு வந்தார். தம் தந்தையைத் தோற்கடித்த புலிகேசியுடன் போர் புரிந்து அவனை வென்றார். நரசிம்மவர்மர் மற்போர் புரிவதில் பேராற்றல் வாய்ந்தவர். போரிலும் வெற்றியே காணும் இயல்பினர். ஆதலால், இவருக்கு ''மாமல்லர்'' என்ற பெயர் ஏற்பட்டது.

இவர் கடற்கரையருகே ஒரு சிறந்த துறைமுகத்தை ஏற்படுத்தினார். அதற்கு 'மாமல்லபுரம்' என்ற பெயரே இடப்பட்டது. நாளடைவில் மாமல்லபுரம் என்ற பெயர் மகாபலிபுரம் என்றும், மாவலிபுரம் என்றும் வழக்கில் வந்தது. பல்லவர் காலத்தில் மாமல்லபுரம் சிறந்த துறைமுகமாய் விளங்கியது. பண்டங்களை ஏற்றிச் செல்லும் கப்பல்களும், இறக்க வரும் கப்பல்களும் எப்பொழுதும் கடற்கரை ஓரத்தில்

காணப்படுமாம். அதற்கறிகுறியாக இன்றும் கலங்கரை விளக்கம் அங்கே இருக்கிறது.

மகாபலிபுரம் என்றவுடனே மகாபலிச் சக்கர வர்த்தி கதை நினைவுக்கு வரலாம். மகாபலிச் சக்கர வர்த்திக்கும், மகாபலிபுரத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. மேற்கு நாடுகளிலிருந்து குதிரைகள் இத் துறைமுகத்தில் வந்து இறங்கியதுண்டு.

மாமல்லபுரத்தில் அழிந்து கிடக்கும் மண்டபங் களையும், பாறைகளில் செதுக்கப்பட்டிருக்கும் சிற்பங் களையும் நோக்கினால், அது எத்துணைச் சீரும் சிறப்பும் பெற்ற கடற்றுறைப்பட்டினமாக முன்னர் விளங்கி யிருந்த தென்பது புலனாகும். கற்பாறைகளைக் குடைந்து அழகாகச் செதுக்கப்பட்டிருக்கும் இரதங்கள், கோயில்கள் முதலியவற்றின் சிற்ப வேலைப்பாடுகளும் அக்காலத் தச்சர்களின் கைத்திறமை களும் பிறநாட்டாரும் போற்றி வியப்புறும் நிலையில் உள்ளன.

அங்குள்ள சிற்பங்களை மூவகையாகப் பிரிக்கலாம். அவை, பஞ்சபாண்டவர் இரதங்கள் என வழங்கும் கற்கோயில்கள், கோயில்கள், குகைக்கோயில்கள் என்பவையாம். கற்கோயில்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பெரிய கல்லில் குடைந்து செதுக்கப் பட்டவை. இதிலுள்ள தருமரதம், நான்கு மாடங்கள் அமையப்பெற்றுப் பெரிதாய் உள்ளது. மற்றவை அனைத்தும் சிறியவைகளே. ஆங்குள்ள துர்க்கைக் கோயிலைத் திரௌபதி இரதம் என்கின்றனர். இக்கோயிலில் சிற்பவேலை மிக்க நுணுக்கமாய் அமைந்து விளங்குகிறது. இதைக் குடைந்து

அமைத்த சிற்பி சிற்பக் கலையில் தலைமை பெற்றவனாக இருந்திருக்க வேண்டும். மற்றும் வராகசாமி குகைக் கோயில், மகிஷ மண்டபம், கிருஷ்ண மண்டபம், திருமூர்த்தி மண்டபம் முதலியனவும் அருமையான வேலைப்பாடுகள் உடையவைகளே.

இங்குள்ள சிற்பங்களில் பகீரதன் தவநிலை எனக் கூறப்படும் சிற்பம் பாராட்டும் முறையில் அமைந்துள்ளது. பகீரதன் ஒற்றைக்காலில் நின்று தலைக்கு மேல் கைகளைக் குவித்துக்கொண்டு தவஞ்செய்கிறான். முகத்தில் தாடி அடர்ந்துள்ளது. கண்களில் தவநிலை ஒளிவிடுகிறது. இச்சிற்பத்தைச் சிலர், அர்ச்சுனன் தவநிலை என்றும், சிவபெருமானிடம் பாசுபதாத்திரம் பெறுவதற்குச் செய்யும் தவம் என்றும் கூறுகின்றனர். கடற்கரை ஓரமாக உள்ள கோயில், குகைக் கோயில் எனச் சொல்லப்படுகிறது. ஆனால் அது கற்களால் கட்டப்பட்ட கோயிலே.

கி. பி. ஏழாம் நூற்றாண்டிலே அமைக்கப்பட்ட இச்சிற்பங்கள் கடற்காற்று, மழை, வெயில் முதலிய இயற்கை ஊறுகளால் தாக்குண்டு சிறிது மழுங்கி விட்டபோதிலும், இன்றும் அதன் அழகும், உயர்ந்த தோற்றமும் மக்களின் உள்ளங்களைக் கொள்ளை கொள்கின்றன. நாகர்கள், தெய்வ கணங்கள், யானை முதலியவற்றின் உருவங்கள் இங்கே காணப்படுகின்றன.

ஒப்பற்ற கடற்றுறைப்பட்டினமாக 1300 ஆண்டுகளுக்கு முன் விளங்கிய மாமல்லபுரம் இன்று அழிவுற்ற நிலையில் உள்ளது. வாணிகச் சிறப்புற்ற இவ்வூர் பல்லவர் காலத்திற்குப் பிறகு கப்பல் போக்கு

வரவு நின்று, துறைமுகமும் பயனற்றுப் போயிருக்கக் கூடும் என அறிய இடமுண்டு. இன்றோ துறைமுகம் இருந்த அடையாளம் மட்டும் காணப்படுகிறது. நம் நாடு உரிமை பெற்ற பின் சென்னை அரசியலார் இவ்விடத்தைப் பொதுமக்கள் சென்று பார்த்து வருவதற்கேற்ற வசதிகளைச் செய்துள்ளனர். மாமல்ல புரம் சென்று பழைய கடற்கரைத் துறைமுகத்தையும் கலைச் செல்வங்களையும் கண்டு மகிழ்வது நம் கடமைகளுள் ஒன்றாகும்.

### பயிற்சி

**1. அருஞ்சொல் விளக்கம் :**

பட்டினம் - கடற்கரை நகரத்தினைப் பட்டினம் என்பர் பழந்தமிழர் (சென்னைப்பட்டினம், நாகைப்பட்டினம், அதிராம் பட்டினம், விசாகப்பட்டினம்); நூறு + ஆண்டு = நூற்றாண்டு; கலங்கரை விளக்கம் - கடல் வழியாக வரும் மாக்கலங்களைத் துறைமுகத்திற்கு அழைக்கும் விளக்கு (Light House); கரைதல் - அழைத்தல்; அடர்ந்து - நெருங்கி.

**2. வினாக்கள் :**

1. மாமல்லபுரம் எங்கு உள்ளது? அஃது எந்த நாட்டைச் சேர்ந்தது?

2. மாமல்லபுரத்தில் காணக்கூடியன யாவை?

3. மாமல்லன் என்பவன் யார்? அவனுக்கு அப்பெயர் வரக் காரணம் என்ன?

4. மாமல்லபுரத்தின் வேறு பெயர்கள் யாவை?

5. மாமல்லபுரத்தில் அமைந்துள்ள சிற்பக் கலையின் சிறப்புக்களைக் கூறுக.

6. பகீரதன் தவநிலை பற்றி நீவிர் அறிந்தனவற்றை நவில்க.

7. மாமல்லபுரத்தின் இன்றைய நிலை எத்தகையது?

3. **இலக்கணம் :**

அவன் அவள் அவர் அது அவை
இவன் இவள் இவர் இது இவை
உவன் உவள் உவர் உது உவை

இப்பெயர்கள் அ, இ, உ என்ற சுட்டெழுத்தின் அடியாகப் பிறந்துள்ளன. ஆதலின், இவை சுட்டுப்பெயர்கள் ஆகும். இவ் விதமாகவே வினவெழுத்தின் அடியாகப் பிறக்கும் பெயர்கள் வினப்பெயர்கள் ஆகும். உ-ம்: எவன்? யாவன்? ஏது?

---

# 18. பெண்கள் பந்தாட்டம்

[டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் எம். ஏ. பிஎச். டி., அவர்கள்]

உலண்டு என்று ஒருவகைப் புழு உண்டு. அந்தப் புழுவிலிருந்து ஒரு வகையான அழகிய பட்டு எடுக்கப் படும். அந்தப் பட்டு பொன்னிறம் உடையது. அஃது எழுப்பினல் எழும்பும் தன்மை வாய்ந்தது. இப்படி எழும்பும் தன்மையுடைய நெட்டி, பஞ்சு, பட்டு இவற்றினலே பண்டைக் காலத்தில் பந்துகள் செய்தார்கள் என்று பெருங்கதை என்ற புத்தகத்தால் அறிகிறேம். இவற்றைச் சேர்க்க வேண்டிய அளவு சேர்த்து நன்ருகத் திரட்டி, நூலாலும் கயிற்ருலும் நுண்மையாகச் சுற்றித் தைத்து மகளிர் விளையாடினர் களென அறிகிறேம். அப் பந்துகள் வெண்ணிறம், செந்நிறம், கருநிறம் உடையன. காற்று வீசினலும் அவை தாமாக எழுந்து ஆடுகின்ற அளவு நொய்மை வாய்ந்தவை. இந்தக் காலத்திலே உள்ள பிங்-பாங் (Ping-Pong) ஆட்டத்திற்குரிய செல்லுலாயிட் பந்தை விட அவை மெல்லியனவாய் இருந்தன என்று வைத்துக்கொள்ளலாம். அவை கண்ணைப் பறிக்கும் அழகையுடையன. அந்த அழகு மனத்தை விட்டு

அகலுவது அருமை. இவ்வளவு சிறப்புடைய பந்துகள் பலவற்றைப் பல்வேறு வகையாக அந்தக் காலத்தில் செய்தார்கள் என்பதைக் கொங்குவேள் என்னும் புலவர் பெருங்கதையிற் சொல்லியிருக்கிருர்.

வத்தவநாட்டு அரசஞன உதயணனுடைய மனேவியார் இரண்டு பேருங் காணும்படி, அவ்விருவருடைய தோழிமார் போட்டியிட்டுக் கொண்டு ஒருவரை ஒருவர் விஞ்சுவாராய்ப் பந்தடித்தார்கள் என்ற செய்தியைப் பெருங்கதை தெரிவிக்கிறது. அதனேக் காண்போம்.

ஒருத்தி ஏழு பந்துகளே எடுத்துக்கொண்டு ஒன்றென்ருக உயர எழுப்பிக் 'கண் இமையாமல் எண்ணுங்கள்' என்று சொல்லி ஆயிரந்தரம் கையினல் அடித்தாள். இன்னெருத்தி அந்த ஏழு பந்துகளேயும் ஆயிரத்தைந்நூறு முறை ஒரே மூச்சில் அடித்தாள்; அப்படி அடிக்கும்போது, கூந்தலின் மேலே போய் வந்த பந்தைக் குவித்த விரலாலேயே எழுப்பினள்; சில பந்துகளே மேகலேக்கு எதிரே அடித்தாள்; இன்னுஞ் சிலவற்றைத் தனது தலேமாலேயாலே சார்த்தி எழுப்பினள்.

கூனி ஒருத்தி அந்த ஏழு பந்துகளேயும் கொண்டு இரண்டாயிரம் முறை அடித்தாள்; அப்பொழுது நான்கு திசைகளிலும் நான்கு மூலேகளிலும் காற்றினும் வேகமாக ஓடியாடி அடித்தாள்; பந்துகளேத் தட்டி விட்டு விட்டு, இடை நேரத்தில் இரண்டு கையையும் தட்டினள்; தோள்மேலே சில பந்துகளேப் பாய்ச்சினள்; கூன்மேலே சிலவற்றைப் புரட்டினள்; பாடிக்கொண்டும், அவிழ்ந்த கூந்தலே முடித்துக்

கொண்டும், நெற்றியிலுள்ள பொட்டிடையேற்றும், பொட்டிலே பட்ட பந்தைப் புறங்கையாலே தட்டி எற்றியும் இரண்டாயிரம் முறை அடித்து நிறுத்தினுள்.

கூனி இப்படிச் செய்ததைக் கண்ட குள்ளி யொருத்தி, 'நான் இங்கு இருக்கும்போது கூனி புகழும்படி அடிப்பதா!' என்று சொல்லி, சீலையை இறுக்கிக் கட்டிக்கொண்டு, கையிலே பந்தடிக்குங் கோலே எடுத்துக்கொண்டு இரண்டாயிரத்து ஐந்நூறு முறை அடித்து விட்டாள்.

இன்னுெருத்தி தான் விட்டெறிந்த பந்தை மூவாயிரந்தரம் அடித்தாள். அடிக்கும்போது அவள் போட்ட நடை நாடகப் பெண்கள் போடுகிற நடையைப்போல இருந்தது. இரண்டு கைகளாலும் அவள் பந்தை அடித்துக்கொண்டு விண்ணிற்கும் மண்ணிற்குமாகப் பறவையைப் போலப் பறந்ததைப் பார்த்துச் சிலர் மூக்குமேற் கை வைத்தனர். அவள் கைகள் மாத்திரம் வேலே செய்தன என்பது அன்று. அவளுடைய கண்ணும், புருவமும், மனமும் அவள் கையோடும் காலோடும் ஓடின என்றே சொல்ல வேண்டும். மேகலே ஆர்த்தது; கூந்தல் அவிழ்ந்தது; பூமாலேயும் பொன்கலமுஞ் சிதறின. அவள் நில்லாது இன்னும் பந்தடித்துக் கொண்டே இருந்தாள். அவள் நிற்கிருளா பறக்கிருளா என்று சொல்ல முடியாதவாறு, மேலுங் கீழும் போய்ப்போய் வந்தாள்; அவளுக்குத் தோள் இரண்டல்ல, பல என்று சொல்லும்படி அடித்துக் கொண்டிருந்தாள். அப்படிச் சொல்வதைவிட, எங்குப் பார்த்தாலும் அவள் தோளே காணப்படுவதால், அவள் பலதோள் வடிவினள்

ஆயினள் என்று கூடச் சொல்லிவிடுதல் நல்லது. அப்படித்தான் சொன்னர் கொங்குவேளும்.

வேருெருத்தி இவர்களையெல்லாம் எள்ளி முன் வந்து நின்ருள்; பந்தாட்ட இலக்கணத்தைப்பற்றி ஒரு சொற்பொழிவுஞ் செய்தாள்; உட்கார்ந்துகொண்டு நல்ல பந்தாக இருபத்தொரு பந்துகளைத் தேர்ந் தெடுத்தாள்; அவற்றை எழுப்பிப் பைய எழுகின்ற அவள் செய்தொழிலுக்கேற்ப, அவளுடைய கையும் காலும் மெய்யும் இயைந்தன. பரத நாட்டியங் கற்றவர் அவள் அபிநயத்தை வியக்கிருர்கள். அவள் பந்தடிப்பதால் உண்டாகும் ஒலி தாளத்தோடு ஒத்த தாக இருக்கிறது. அதனல், பாடல் வல்ல பெண்டிர் அவள் பாணியைப் பாராட்டுகின்றனர். அவள் இரண்டு காலையும் 'தம்' 'தம்' என்று பெயர்த்து வைக்கிற திறத்தைப் பார்த்து மத்தளங் கொட்டுவோர் கொண்டாடுகின்றனர். அவளால் எழுப்பப்படும் பந்துகள் நிலத்திற்கும் விசும்பிற்குமாகப் போன வண்ணம் இருக்கின்றன; சூறைக் காற்றில் அகப் பட்டுச் சுழலும் இலைகளைப்போல உள. பந்துகள் வந்து வந்து திரும்பிப் போவதையும், ஏறுவதையும், இறங்குவதையும். ஆகாயத்தில் நிற்பனபோல இருப் பதையும் கொங்குவேள் அழகுபெறத் தீட்டியுள்ளார்.

இவளுக்கும் இரண்டு கைகளே. ஆயினும், வளைத்து வளைத்துப் பந்துகளை அடிப்பதை நோக்கினல், பல கைகள் உள்ளவள்போல இவள் காணப்படுகிருள். தேர்ச் சக்கரத்தைப்போலச் சுழன்று சுழன்று அன்றே அடிக்கிருள்; நடக்கிருள்; ஓடுகிருள்; ஒடிகிருள்; துவளுகிருள்! பந்து எழ எழ, அதனுடன் எழுகிருள்! 'இவள் கையெங்கே, கால் எங்கே, மெய்

எங்கே தெரியவில்லையே'! என்கிறார் சிலர். 'இவள் மண்ணில் இருக்கிறாளா? விண்ணில் இருக்கிறாளா? என்கிறார் சிலர். இது 'மாயமா? மந்திரமா'? என்கிறார் சிலர்.

இவர்கள் கண்பட்டது போலக் கூந்தல் குலைந்தது; மாலை சுழன்றது; மேகலை கழன்றது; வியர்வை எழுந்தது; சாந்தம் இழிந்தது. அப்பொழுதும் பந்தடித்தலை நிறுத்தவில்லை; ஆடையைத் திருத்திக் கொண்டு அடிக்கிறாள்; வியர்வையைத் துடைத்துக் கொண்டு அடிக்கிறாள்; கண்ணை மூடிக்கொண்டு அடிக்கிறாள்; சக்கரத்தைப்போலச் சுழற்றிவிட்டு அடிக்கிறாள்; தோழியோடு பேசிக்கொண்டும் பாடிக் கொண்டும் அடிக்கிறாள்; வாழ்த்திக்கொண்டு அடிக்கிறாள்.

இவள் இப்படியெல்லாம் எண்ணுயிரம் முறை தன்னுடைய கைகளால் அடித்தாள். எடுத்துக் கொண்ட பந்துகள் இருபத்தொன்று. மொத்தத்தில் இவள் அடித்த முறை எண்ணுயிரம். அடிக்கும் போது, கூத்தும் பாட்டும் தாளமுஞ் சேர்ந்தன. இது வியக்கத்தக்க செய்தி அன்றோ! இப்படிப் பந்தடிக்கின்ற வழக்கம் அக்காலத்துத் தமிழ் நாட்டில் உண்டு. ஆதலினாலே கொங்குவேள் ஆகிய தமிழ்ப் புலவர் 'பந்தடி கண்டது' என்று ஒரு தனிப்பகுதியைத் தாம் இயற்றிய பெருங்கதையிற் புகுத்தினார்.

பெருங்கதை, சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம் போன்ற தமிழ்க் காவியங்கள் துணையாகத் தமிழ் நாட்டு மக்களிர் பண்டைக் காலத்திற் பந்தாட்டம் போன்ற ஆடல்களை இயற்றி மகிழ்ந்ததையும், மகிழ்வித்ததையும் அறிந்து இன்புறலாம்.

## பயிற்சி

**1. அருஞ்சொல் விளக்கம்:**

பெருங்கதை - வத்தவ நாட்டு அரசனுன உதயணன் வரலாற்றைக் கூறும் காவியம். இதனைச் செய்தவர் கொங்கு வேளிர். இவரை கி. பி. 5ஆம் நூற்றாண்டினர் என்னலாம். நொய்மை-மென்மை; எற்றி-எறிந்து; மேகலை-மாதர் இடையில் அணியும் ஏழு அல்லது எட்டுக் கோவையுள்ள அணிவகை; ஆர்த்தது - ஒலித்தது; கலம் - நகை; எள்ளி - பரிகசித்து; பைய - மெல்ல; இயைந்தன - பொருந்தின; பரத நாட்டியம் - பரதர் என்ற முனிவர் எழுதிய நடனக்கலை நூல்; அபிநயம் - மனக்கருத்தைக் குறிப்பாய் விளக்கும் அங்கச் செய்கை; பாணி - தாளம், கூத்து; விசும்பு-ஆகாயம்; காவியம்-ஒப்பற்ற தலைவனது வரலாற்றைக் கூறும் பெரு நூல்.

**2. வினாக்கள் :**

1. பண்டைக்காலப் பந்துகளைப் பற்றிக் கொங்குவேள் யாது கூறியுள்ளார் ?

2. கூனி எவ்வாறு பந்தாடினள் ?

3. குள்ளி பந்தாடிய விவரத்தைக் கூறுக.

4. தனக்கு முன் பந்தடித்தவர்களை எள்ளி முன் வந்த வேற்றுருத்தி எவ்வாறு பந்தடித்தாள் ?

5. "இது வியக்கத்தக்க செய்தியன்றோ!" —இடம் சுட்டி விளக்குக.

6. பெண்கள் பந்தாட்டம் பற்றிக்கூறும் தமிழ்க் காவியங்கள் எவை ?

**3. இலக்கணம் :**

பெயர்ச் சொற்களில் திணை, பால், எண், இடம் முதலியன காணுதல் வேண்டும். அவற்றுள் திணை என்பது குலம் அல்லது சாதி எனப் பொருள்படும். திணை உயர்திணை, அஃறிணை என இருவகைப்படும்.

1. மனிதன், தேவர் இவர்கள் பெயரைச் குறிப்பது உயர்திணை. (உ. ம் : மனிதன், கண்ணகி, தேவர்கள்.)

2. உயர்திணை அல்லாத பெயர்களைக் குறிப்பது அஃறிணை ஆகும். (உ. ம் : மரம், விலங்கு, பறவை, கல், மண்.)

## 19. ஒற்றுமைக்கு வழிகாட்டிய உத்தமர்

[வித்துவான் கோ. இரத்தினம் பிள்ளை அவர்கள்]

உலகம் தோன்றியது முதல் இதுவரை பற்பல காலங்களில் பற்பல சான்றோர்கள் தோன்றி மக்கட் சமுதாயத்திற்கும் உலக நலத்திற்கும் தொண்டுகள் பலவும் புரிந்து சிறந்துள்ளார்கள். அவ்வாறு மக்கட் சமுதாயத்திற்கு இவ்விருபதாம் நூற்றாண்டில் சேவை செய்தவர்களில் தலைசிறந்தவர் காந்தியடிகள் ஆவார்.

காந்தியடிகள் காட்டிய வழி—ஒழுகிய நெறி ஒப்பற்றதாகும்; பயன் தருவதும் ஆகும். அகிம்சை வழியினால் எத்தகைய சிக்கலான இடர்பாடுகளையும் தீர்த்துவிடக்கூடும் என்பதே அவர் கண்ட உண்மையாகும். அகிம்சைமுறை என்பது யாது? எவ்வுயிருக்கும் தீங்கு நினையாமல் நன்மையே செய்வதுதான் அகிம்சை முறையாகும். எண்ணம், சொல், செயல் இம்மூன்றிலும் அகிம்சையைக் கடைப்பிடித்தொழுக வேண்டும் என்பது அவரது கொள்கை. இது மட்டுமன்று; தீமை செய்தவர்க்கும் நன்மையே செய்ய வேண்டும் என்ற பற்றுமுடையவராவார். 'துன்பஞ் செய்தவர்க்கு நன்மை செய்வது, துன்பஞ் செய்தாரை நாணும்படி செய்வதாகும்' என்ற வள்ளுவர் வாக்கை நன்குணர்ந்த நம் அடிகளார், அதன்படி நடந்துவரலானார்.

'அன்பின் வழியது உயிர் நிலை' என்றார் வள்ளுவர். அதற்கிணங்க அவ்வன்பு நெறிக்காகத் தம் உயிரையே தியாகம் செய்தார் காந்தியடிகள். தம் வாழ்நாளில் அன்பின் வழியாகச் சத்தியமாகிய ஆண்டவனைக் காண முயன்றதுதான் அவரது வாழ்க்கை

வரலாறு ஆகும். அவரது வாழ்நாளில் சமூக பொருளாதார, அரசியல் விடுதலைக்காகப் பல போராட்டங்களை நடத்தினர். அப் போராட்டங்களில் அவர் சத்தியாக்கிரகம் என்ற படையைத் தாங்கிப் பல வெற்றிகளையும் கண்டார். தம் நலன்களை இழந்தார்; பல துன்பங்களை அனுபவித்தார்; ஆனல், பிறர்க்கு நன்மையானவற்றைச் செய்து வந்தார். இதைத் தான் தமிழ்மறை தந்த வள்ளல் திருவள்ளுவர் தவத்திற்குரிய அடையாளமாகக் கூறுகின்றார்.

"உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்(கு) உரு"

என்பது அவர் வாக்காகும். எனவே காந்தியடிகள் இல்லறத்தை மேற்கொண்டொழுகி வந்தாராயினும் உயரிய தவவொழுக்கத்தில் தலைசிறந்து விளங்கினர் என்பதை அவர் வரலாற்றைக் கொண்டு நன்கறியலாம்.

அரசியல் துறையில் அகிம்சை முறையாகிய சத்தியாக்கிரகப் போரின் மூலம் வெற்றி பெற்றதைப் போன்றே சமூகத்துறையிலும் காந்தியடிகள் வெற்றி பெற்றுள்ளார். பல்வேறு இனங்களிடையே இருந்த உயர்வு தாழ்வுகளை அகற்றி இனவொற்றுமையை உண்டாக்கியது தனிப்பெரும் சிறப்பு வாய்ந்ததாகும். தென்னப்பிரிக்காவில் வெள்ளையர் ஆட்சியிலே இந்தியர்கள் அடைந்த பல கொடுமைகளைக் கண்டு அவர் மனம் புழுங்கினர். சமுதாயத்திலே மக்களைப்போல வாழ்க்கை நடத்தக்கூட உரிமையற்ற இந்தியர்களின் அந்த அவல நிலையை மாற்ற வேண்டுமென்று மனத்தில் உறுதிபூண்டார் அடிகள். அதன் காரணமாக அன்புப் போர் நிகழ்ந்தது. அகிம்சை முறையில்

தொடங்கிய அப்போராட்டத்தில் இந்துக்கள், முகம் மதியர்கள், கிறித்தவர்கள் என்ற வேற்றுமையின்றி எல்லோரும் ஒற்றுமையுடன் கலந்து போர் புரிந் தனர். இறுதியில் அடிகளார் வெற்றியே கண்டார். இப்போராட்டத்தில் வெள்ளையர்களும் பங்கு கொண் டார்களென்றால் அடிகளின் அகிம்சைப் போர் முறையின் ஆற்றலை என் சொல்வது? காந்தியடி களார் தனிப்பட்ட முறையில் வெள்ளையரிடம் வெறுப்போ வேறுபாடோ கொண்டதில்லை; அவர்கள் கொள்கைகளில்தான் அடிகளார் வேறுபாடு கொண்டார்.

இந்து சமூகத்தின் உயர்வுக்காகப் பாடுபட எண்ணிய அடிகளார் அச்சமூகத்திலேயுள்ள உயர்வு தாழ்வுகள் அகன்று தாழ்த்தப்பட்ட மக்கள் முன் னேற்றம் அடைந்தால்தான் இந்து சமுதாயம் சீர் படும் எனக் கருதினர். அதற்காக ஆமதாபாத்தில் ஓர் ஆச்சிரமம் அமைத்தார். அதில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒரு குடும்பத்தையும் சேர்த்துக் கொண்டார். அதன் காரணமாக ஆச்சிரமத்திற்கு இந்து சமூகத்தினர் அளித்துவரும் உதவியும் நின்று, அவர்கள் எதிர்ப்பும் ஏற்பட்டது. ஆச்சிரமத்தைக் கலைத்துவிட நேரிடுமோ என ஏங்கிய அடிகளார் மனங்குளிர அன்பர் ஒருவரின் ஆதரவு கிடைத்தது. அடிகளார் அதனைப் பெற்று ஆச்சிரமத்தினைத் திறம் பெற மேலும் நடத்திவருவாரானர்.

காந்தியடிகளார் பல திட்டங்களை வகுத்துள்ளார். அவற்றுள் தாழ்த்தப்பட்டோருக்குச் செய்யும் அரிசன சேவைத் திட்டமும் ஒன்ருகும். அதற்காக

அரிசன சேவா சங்கம் என்ற சங்கம் நிறுவப் பட்டது. அச்சங்கம் இன்றும் செய்துவரும் அரிய சேவையினை நாம் காண்கின்றோம். இத்தகைய காரியங்களால் தான் இந்து சமூகம் சீர்குலையாமல் தலைதூக்கி நிற்கின்றது. சங்கரர், இராமாநுசர் போன்ற பெரிய பெரிய மதத் தலைவர்களாலும் சாதிக்க முடியாத காரியத்தை நம் காந்தியடிகளார் தம் அகிம்சை முறையால் செய்து காட்டினரெனின் அது மிகையாகாது.

இன ஒற்றுமைக்காக—வகுப்பு வாதம் அகல—அடிகளார் செய்த தொண்டு மிகப் பெரியதாகும். வெள்ளையர் ஆட்சி நம்மை விட்டு அகன்று, நம்நாடு இரண்டாகத் துண்டாக்கப்பட்டது.

அப்பொழுது நாட்டிடை இந்து — முஸ்லிம் சண்டை உண்டாயிற்று; பலர் பலியுண்டனர். பல இந்துக் குடும்பங்கள் பாகிஸ்தானிலிருந்து இந்தியா வில் குடியேறின. இதனை அடிகளார் அறிந்தார்; நெஞ்சமுருகினர். பலர் முறையிட்டுத் தடுத்தும், அதனைப் புறக்கணித்து அடிகளார் தன்னந்தனியே வங்காளத்தில் கலகம் நடந்த இடத்தில் கால்நடை யாகப் பயணஞ் செய்தார்; அப்பகுதி மக்களிடையே நம்பிக்கையையும் மன உற்சாகத்தையும் ஊட்டினர்.

இந்து — முஸ்லிம்களிடையே ஒற்றுமையுண் டாக்கும் வழிகளை நாடியலைந்த அடிகளார் நாட்டில் மக்களிடையே மனக்கசப்பும், நம்பிக்கையின்மையும் தாண்டவமாடியதைக் கண்டு மனம் புழுங்கினர். அவற்றை அகற்றுவதற்காகத் தம் தளர்ந்த வயதிலும் உண்ணாவிரதத்தை மேற்கொண்டார்; நம் வாழ்நாள்

இறுதிவரை இந்நிலையை மாற்றுவதற்குப் பாடுபடத் துணிந்தார். கல்கத்தாவிலிருந்து டில்லி வந்தார்; நாளும் மக்கள் மனத்திலே இன ஒற்றுமையின் அவசியம் நன்கு பதியுமாறு போதனை புரிந்தார். அக்காலத்திலேதான் அவர் இனவெறிக்கு இரை யானார். பழங்காலத்திலே இயேசு பெருமானைச் சிலுவையில் அறைந்தார்கள்; முகம்மது நபி கல்லால் அடியுண்டார். ஆனால், அவர்களுடைய கொள்கைகள் இன்றும் நின்று நிலவுகின்றன. அஃதே போன்று எந்த ஓர் இலட்சியத்திற்காகக் காந்தியடிகள் தம் உயிரை விட்டாரோ அந்த இலட்சியம் இன்று மக்களால் போற்றப்பட்டுப் பயன்பட்டு வருவதை நாம் அறிகின்றோம்.

காந்தியடிகளை மனிதகுல ஒற்றுமைக்கும் வழி காட்டிய உத்தமர் என்றே கூறுதல் வேண்டும். காந்தியடிகள் எல்லா உயிர்களையும் தம்முயிர்போல் நேசித்தார்; பிறருக்குத் துன்பம் நேர்ந்தபொழுது தம்மையே தியாகம் செய்யத் துணிந்தார்; "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்று கொண்டொழுகி வந்தார். இத்தகைய எண்ணம் உலக மக்களிடையே வலுப்பெறுமானால் நாட்டிலே நலிவென்பது ஏற் படவும் இடமுண்டோ?

ஆகையால், அடிகள் செய்த தொண்டினை யுணர்ந்து, நிறம், மதம், சாதி என்ற அடிப்படையில் உயர்வுதாழ்வு கருதாமல், மனித சமுதாயம் அனைத்தும் ஒரு குலமாகும் என்ற உண்மையை அறிந்து, காந்தீய வழியைப் பின்பற்றி அன்பு வழியில்—அறவழியில்—உண்மை நெறியில்—உலக மக்கள் அனைவரையும் நேசித்து உயர்வடைவோமாக.

## பயிற்சி

1 **அருஞ்சொல் விளக்கம் :**

சேவை-தொண்டு; அகிம்சை-எந்த உயிர்களுக்கும் தீங்கு செய்யாமை; தியாகம் செய்தல்—அர்ப்பணம் செய்தல்; சத்தியாக்கிரகம்-ஒத்துழையாமை; 'உற்றநோய்... உரு'—தனக்கு வந்த துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுதல், பிற உயிர்க்குத் தீங்கு செய்யாமை, அவ்வளவே தவத்திற்கு அடையாளமாகும்; புழுங்குதல்—வருந்துதல்; ஆச்சிரமம்-தவசிகள் இருக்கும் குடிசை; உண்ணு விரதம்-பட்டினி கிடத்தல்; நலிவு—துன்பம்.

2. **விளுக்கள்:**

1. காந்தியடிகள் காட்டிய வழி யாது?
2. காந்தியடிகள் இல்லறத்தை மேற்கொண்டு ஒழுகினும் அவர் ஓர் உண்மைத் துறவியாவார் என்பது எதனுல் விளங்குகின்றது.
3. தென்னுப்பிரிக்காவில் அடிகள் செய்த தொண்டு என்ன?
4. தாழ்த்தப்பட்டவர்க்காக அடிகளார் செய்த அருந் தொண்டுகள் யாவை?
5. இன் ஒற்றுமைக்கு அடிகளார் என்ன செய்தார்?
6. காந்தியடிகளின் குண நலன்களைக் குறிப்பிடுக.

3. **இலக்கணம் :**

1. முருகன், கண்ணன், தேவன் – இப்பெயர்களுள் ஒவ்வொன்றும் உயர்திணையில் ஓர் ஆண்மகனைக் குறித்தது. இவை ஆண்பால் ஆகும்.

2. வள்ளி, கண்ணகி, தேவி – இப்பெயர்களுள் ஒவ்வொன்றும் உயர்திணையில் ஒரு பெண் மகளைக் குறித்தது. இவை பெண்பால் ஆகும்

3. மக்கள், பெண்கள், தேவர்கள் – இப்பெயர்களுள் ஒவ்வொன்றும் உயர்திணையில் பலரைக் குறித்தது. இவை பலர் பால் ஆகும்.

4. மரம், குதிரை, மயில் – இப்பெயர்களுள் ஒவ்வொன்றும் அஃறிணையில் ஒன்றைக் குறித்தது. இவை ஒன்றன்பால் ஆகும்.

5. மரங்கள், குதிரைகள், மயில்கள் இப்பெயர்களுள் ஒவ்வொன்றும் அஃறிணையில் பலவற்றைக் குறித்தது. இவை பலவின் பால் ஆகும்.

எனவே, ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் எனப் பால்கள் ஐந்து வகைப்படும். பால்-பகுப்பு

---

## 20 நீராவி யந்திர வரலாறு

[ சனவிநோதினி ]

ஐரோப்பாக் கண்டத்தில் ஸ்காட்லாந்து தேசத்தின் மேற்றிசையிலுள்ள க்ரீனக் என்னும் பட்டணத்தில் சாதாரணமான ஒரு வீட்டில் இன்றைக்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் மாலை நேரத்தில், அவ்வீட்டிலுள்ளவர் குளிருக்குச் சுகமாகத் தேத்தண்ணீர் காய்ச்சிச் சாப்பிட யத்தனித்தார்கள். அவ்வீட்டில் முதிர்ந்த வயதுள்ள ஒரு பெண்பிள்ளை அங்குமிங்கும் பரபரப்பாய் நடந்துபோய் உண்கலங்களை மேசையின்மீது பரப்பி, உரொட்டிகளைத் துண்டு துண்டாக்கி வெண்ணெயைத் தடவி வைத்தாள். குளிருக்கு இதமான வெப்பம் உண்டாக்க நெருப்பு மூட்டம் போடப்பட்டிருந்தது. அப்படிப் போட்டிருந்த இரும்படுப்பில் வெந்நீர்க்கரகம் ஒன்று வைத்துக் காய்ந்துகொண்டிருந்தது. தீ, கொழுந்து விட்டெரிய அந்தக் கரகத்திலிருந்த நீர் அதிகச் சூடேறிச் சற்றுத் தளதளவென்று கொதிக்கையில், கரகத்தின் மூக்கிலிருந்து 'உஸ்'; 'உஸ்' என்று நீராவி புறப்பட்டது. மேற்சொன்ன கிழவிக்கு இவையெல்லாம் பாராட்டத் தக்க ஓர் அதிசயமாகத் தோன்றவில்லை. நெடுநாளாய் இப்படித்தான் நெருப்பு எரிகிறதும் வெந்நீர்

கொதிக்கிறதும் ஆவி எழும்புகிறதும் பார்த்திருக்கிருள். இனிமேலும் இப்படித்தான் இருக்கப் போகிறது. ஆ கை ய ா ல், புதுமை யொன்றும் அவளுக்குத் தோன்றவில்லை.

அந்தக் கிழவி அடுப்பருகே சென்று குனிந்து, கொதிக்கும் வெந்நீரை ஒரு பாத்திரத்தில் இருத்து வடிகட்டுகையில், அந்த நெருப்புக்கு எதிரில் அவளுடைய பன்னிரண்டு வயதுள்ள ஜேம்ஸ் என்னும் குமாரன் ஒரு தாழ்ந்த பீடத்தின் மீது உட்கார்ந்து முழங்காலின்மேல் முழங்கைகளை ஊன்றிக் கொண்டு இரண்டு கைகளால் கன்னத்தைப் பற்றிக் கொண்டு, எரிகிற நெருப்பையும், காய்கிற கரகத்தையும், அதனின்று எழும்புகிற நீராவியையும் கருத்தாய் உற்றுப்பார்த்துக்கொண்டு, அதைப் பற்றி ஒரே நினைவாய்ச் சிந்தித்துக்கொண்டு, மற்றெல்லாவற்றையும் மறந்திருந்தான். இப்படி இந்தச் சிறுவன் நெருப்பின் மீதே கண்ணுயிருக்கையில், தாயானவள் அவன் மீதே கண்ணுயிருந்தே, 'நம்முடைய ஜெம்மியைப் பார்க்கிலும் சோம்பேறிப் பிள்ளை இவ்வுலகத்தில் வேறொருவன் உண்டோ?' என்று எண்ணிக்கொண்டிருக்கையில், அயல் வீட்டுக்காரி ஒருத்தி அங்கே வர, அவளைப் பார்த்து, எங்கள் ஜெம்மியினுடைய மனப்போக்கைப் பார்; அவன் அந்த நெருப்பண்டை உட்கார்ந்துகொண்டு, அந்த வெந்நீர்க் கரகத்தையும் நீராவியையும் இமைகொட்டாமல் விழிபிதுங்கப் பார்த்துக் கொண்டிருக்கிருன். இப்படிப்பட்ட வீண் பிள்ளையைப்போல் மற்றொரு பிள்ளையை நீ எங்கேயாவது கண்டதுண்டா அம்மா?' என்று கேட்டாள்.

தாயின் கருத்து அப்படி இருந்தது. தாய் சொன்னது உண்மைதான்; அந்தப் பிள்ளை பார்த்த பார்வையில் ஒரு விசேடம் இருந்தது. அந்தப் பார்வையின் மூலமாய் அவன் புத்தியால் பார்த்துக் கனவில் ஏதோ ஒரு பகட்டான அற்புதத்தைக் கண்டு வியக்கிறவனாய் அசைவற்று ஒரே நோக்கமாயிருப்பவன்போல் காணப்பட்டான். கரகத்திலிருந்து கொண்டல் கொண்டலாய் வெளிப்படுகிற நீராவி வர வர லேசாய் மேலெழுந்து கனம் குறைந்து விந்தை விந்தையாய்ச் சுழன்று செல்வதையும், அந்த ஆவி கரகத்தின் மேல்மூடியை ஒவ்வொரு தரம் கிளப்புவதையும், அப்பொழுது 'குப்பு. குப்'பென்று வெளிப்படுகிற ஆவியையும், கிளம்பின மூடி மறுபடியும் சத்தத்தோடு கரகத்தின் வாயில் படிவதையும் இவை முதலான விநோதங்களைக் கருத்துறப் பார்த்துக் கொண்டிருந்தான். அந்த நீராவிப் புகையில் ஒரு வல்லமை இருப்பதை அந்தச் சிறுவன் கண்டு கொண்ட மாத்திரத்தில் புதிதான ஒரு நினைப்பு தற்செயலாய் அவனுக்குப் பிறந்தது. அஃதாவது, கரகத்திலிருந்து புறப்படுகிற நீராவியின் முயற்சியைப் பார்த்தால், மனிதன் புத்தி சக்திகளால் பஞ்சபூதங்களைத் தன் வசப்படுத்திக் கொள்ளலாமென்பதற்கு இது ஓர் அறிகுறியாயிருக்கிறதென்று நினைத்தான்.

அவன் இன்னும் அதைப்பற்றியே வேறு வேறாய்ச் சிந்தித்து வருகையில், அதுவரையில் ஒருவரும் அறிந்து சொல்லாமல் இருந்த நீராவிச் சக்தியால் மரக்கலங்கள் சமுத்திரத்தில் காற்றின் உதவியில்லாமலும், பாய் விரிக்காமலும் விரைவாய் இயங்குவது போலும், மனித நடமாட்டமில்லாத

காடுகளிலும் மணல் வெளியிலும் வண்டித்தொடர் வேகமாய் ஓடுவதுபோலும் அச்சிறுவன் கண்ணுக்குக் கனவில் காணும் காட்சிபோல் தோன்றின. இவ் விதமாய் மனக்கோட்டை கட்டிக்கொண்டிருக்கையில், தாயானவள் அவனைப் பார்த்து 'ஜெம்மீ! ஜெம்மீ!! இப்படித் திரும்பிப் பார். தேத் தண்ணீர் குடிக்க இங்கு வந்து உட்காரமாட்டாயா? நீ மறுபடி அந்த நெருப்பையே உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பா யாகில் உன் தலை நோகக் குட்டுவேன்' என்றாள்.

அந்தச் சிறுவன் தன் தாய் கோபமாகச் சொன்னதைக் கேட்டு உடனே எழுந்திருந்து சொன்னபடி செய்தான். அவன்தான் பிற்காலத்தில் 'ஸர் ஜேம்ஸ் வாட்' என்னும் பேரும் புகழும் பெற்ற புத்திமான் ஆனான். நீராவியின் ஆற்றலை மனிதருக்குப் பல விதத்திலும் பயன்படும்படி முதன் முதலில் அறிந்து வழி காட்டினபடியால், அந்த மகா புருடனுக்குத் துரைத்தனத்தார் 'ஸர்' என்னும் பட்டங் கொடுத்துப் பெருமைப் படுத்தினார்கள்.

அந்த நீராவியானது நமது உலகத்தைப் புதிய உலகமாக மாற்றிவிட்டதென்பதற்குச் சந்தேகமில்லை. அது மனிதனுக்குச் செய்யாத காரியம் ஒன்று இருக்கிறதா? அது, நெடுநாளைய கப்பல் யாத்திரை சில நாளுக்குள் முடியும்படி அவனை விரைவாகப் பெருங் கடல் மேல் ஏற்றிக்கொண்டு போகின்றது. அவனுடைய ஆகாரத்திற்காகக் கோதுமை முதலான தானியங்களை அரைத்துக் கொடுக்கின்றது. அது பருத்தி நூலும் பட்டு நூலும் நூற்று அவனுக்கு உடை நெய்து கொடுக்கின்றது. அவனுக்கு

இரும்பை உலேயிலிட்டுக் காய்ச்சிப் பதப்படுத்தித் தருகின்றது. பயிருக்குத் தண்ணீர் இறைக்கின்றது. தரையிலும் நீரிலும் பெருஞ் சுமையை இழுத்துச் செல்லுகின்றது. ஆயிரங் குதிரைகளின் பலத்துக்குச் சரியான பலமுடையதாயிருப்பினும் அந்த நீராவி யானது யந்திரத்தால் ஒரு சிறுவன் கைக்கு அடங் கவும், சொன்னபடி எல்லாம் செய்யவும், இப்படிக் கீழ்ப்படிந்து பணிவிடை செய்கின்றது. மனித னுடைய இன்ப நுகர்ச்சி ஏதேதுண்டோ அதை யெல்லாம் அது நொடியில் அமைக்கின்றது. விஞ்ஞானத்திற்கு வெற்றிக் கொடியான இந்த நீராவியின் ஆற்றலேப்பற்றிப் பேசினவர்களேப் பலர் ஏளனஞ் செய்த காலமும் ஒன்றிருந்ததல்லவா! ஒரு சிறு பிள்ளே, அடுப்பு நெருப்பிற்கு எதிரில் உட்கார்ந்தபோது விநோதமாய்ப் பார்த்துக் களித்த சிறு கரகத்தினின்று நூலிழைபோல் வெண்ணிறத் தோடு எழும்பிய நீராவிப் புகைதானே என்று அற்பமாக நிஃனத்த நாள்களும் இருந்தனவன்ரே! 'விஞ்ஞான சாத்திரம்' என்பது இன்னும் இளமைப் பருவத்திலிருந்தாலும், இந்தப் பருவத்திலேயே மனிதனுக்கு மேற்சொல்லிய பெரிய காரியங்களேச் செய்யுமானல் இது யௌவனத்தில் என்னென்ன அற்புதங்களேச் செய்யமாட்டாது? பூர்வத்தில் தோன்றின அதிமேதாவிகளேப்போல் இனிமேலும் தோன்றி, இந்தச் சாத்திரத்தை விசேடமாய்ப் பயின்று வளரச் செய்வார்களல்லவா?

மேற்சொன்ன வரலாறு கட்டுக்கதையன்று. ஜேம்ஸ்வாட் என்பவன் 1736ஆம் ஆண்டு பிறந்தவன். அவனுக்குப் பன்னிரண்டாவது வயதில்

இந்த நீராவியைப் பற்றிய நிகழ்ச்சி நடந்தது. அவன் மேற்சொன்னபடி ஸ்காட்லாந்தில் க்ரீனுக்குப் பட்டணத்திலுள்ள அற்ப வியாபாரியின் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவன். இசைப் புத்தகமும் கிறித்தவ வேதப் புத்தகமும் தவிர வேறு புத்தகங்களைப் படித்தவனல்லன்; ஆயினும், நுட்பபுத்தியும் பேரறிவும் ஒரே தேசத்துக்காவது ஒரே காலத்துக்காவது உரியனவல்லவே! எந்தத் தேசத்திலும் கால நியதியில்லாமல் அவை தோன்றலாமல்லவா? பழங் காலத்தில் இந்து தேசத்தில் காளிதாசனும், கிரீசு தேசத்தில் ஓமரும் பெருங் கவிகளாய்த் தோன்றியிருந்தனர். அப்படியே இங்கிலாந்து தேசம் பிற் காலத்தில் மில்டன் என்னும் கவியரசனைப் பெற வில்லையா? அலெக்சாந்திரியாவில் முற்காலத்தில் ஒரு மாவீரன் உண்டாகிப் பல வெற்றிகளைப் பெற்றானென்று சிறப்பித்தால், ஸ்காட்லாந்திற்கு ஜேம்ஸ் வாட் என்னும் அதிமேதாவி தோன்றி உலகத்தைப் புது உலகமாக மாற்றினதைச் சிறப்பித்துச் சொல்லலாமே!

### பயிற்சி

1. **அருஞ்சொல் விளக்கம்:**

உண்கலம்-உணவு உண்ணும் பாத்திரம்; கரகம் - வெந்நீர் வைக்கும் கெண்டி; கருத்துற-கருத்தோடு, கூர்ந்து; இயங்குதல்-நடமாடுதல்; நியதி – கட்டுப்பாடு; மேதாவி - சிறந்தவன்; யௌவனம் – காளைப்பருவம்.

2. **வினாக்கள்:**

1. வெந்நீர்க் கரகத்திலிருந்து வந்த ஆவி, கிழவிக்கு என் வியப்பைத் தரவில்லை?

2. கிழவி, ஜேம்சைப் பற்றி என்ன நினைத்தாள்?

3. நீராவி நமது உலகத்தைப் புதிய உலகமாக மாற்றி விட்டதென்பதற்கு ஐயமில்லை—எப்படி ?

4. ஜேம்ஸ் வாட் என்பவரின் வரலாற்றுக் குறிப்பு எழுதுக.

3. **இலக்கணம் :**

1. முருகன், வள்ளி, மரம், கோழி—இவை ஒரு பொருளைக் குறித்தன. இவ்வாறு ஒரு பொருளைக் குறிப்பது ஒருமை எண் எனப்படும்.

2. பிள்ளைகள், பெண்கள், மரங்கள்-இவை ஒன்றற்கு மேற்பட்ட பல பொருள்களைக் குறிக்கின்றன. இவ்வாறு ஒன்றற்கு மேற்பட்ட பல பொருள்களைக் குறிப்பது பன்மை எண் எனப்படும். எண் - எண்ணிக்கை

---

# 21. வள்ளலும் முல்லையும்

[திரு வித்துவான் ஐயன்பெருமாள்கோனார் அவர்கள்]

பிறவுயிர்கள் வருந்தும் துன்பநிலையைக் கண்டு மனமிளகி இரங்குவோர் மண்ணுலகில் பலர். ஆனால், அத்துன்ப நிலையைப் போக்க உதவி புரியும் செயலில் துணிவு கொள்வோர் ஒரு சிலரே. இன்னும், வாய் திறந்து பேசாத ஓரறிவு, ஈரறிவு உயிர்களின் துன்ப நிலையைக் கண்டு மனமுருகித் தாமே சென்று அவற்றின் துன்பத்தைத் துடைக்கும் அருளாளர் சிலரினும் சிலரே. அதனாலேயே, அவ்வருளாளரின் சிறிய செயல்களையும் பெரியனவாகக் கொண்டு உலகோர் போற்றுகின்றனர். அத்தகைய உயர் புகழுக்கு உரியோராய் ஒளிர்வோரில் வள்ளல் பாரி ஒருவன்.

வள்ளல் பாரி, தன்னை நாடிவந்த இரவலர்களுக்குப் பொன்னரிமாலை, பொன்னாலாகிய பூ, கரி, பரி, தேர், ஊர் முதலிய எவ்வளவோ விலையுயர்ந்த

பொருள்களையெல்லாம் விழைவுடன் பரிசிலாக அளித்திருக்கிருன். அவையெல்லாம் இரவலர்கள் வந்து தங்கள் விருப்பத்தைக் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ புலப்படுத்திய பின்னரே அளிக்கப்பட்டவையென்பதில் ஐயமில்லை. அவ்வாறின்றி, வாய்திறந்து பேசாத முல்லைக்கொடி யொன்றின் துன்ப நிலையைக் கண்டு இரங்கி அத் துன்பத்தைப் போக்கிய பாரியின் அருட்கொடையையே ஒப்பற்றதென்று புலவர்கள் போற்றிக் கூறியுள்ளனர். செயல் சிறியதாயினும் அதற்கு அடிப்படையான அருள் பெரிய தென்பதே அதற்குக் காரணம். வள்ளல் பாரியின் வளமார்ந்த புகழை மாநிலத்தார் அனைவரும் அறிந்து கொண்டாடும்படி விளக்கிய அவ்வருட்செயலை இனிதறிந்து போற்றுவோம்.

வள்ளல் பாரி தன் வழக்கம்போல் பறம்பு நாட்டின் வளங்களைக் கண்டு களிக்க விரும்பினுன். அன்று அரண்மனையிலிருந்து ஆற்ற வேண்டிய அலுவல்களெல்லாம் முடிந்து விட்டன. பிற்பகலில் ஓய்விருந்தது. அந்த ஓய்வு நேரத்தில் சோம்பியிருக்க மனமின்றி வளங்காண்பதில் நாட்டம் கொண்டான். உடனே வலவனை நோக்கித் தேர் கொண்டு வரும்படி கட்டளையிட்டான். தேர் வந்ததும் அதில் ஏறித் தானே தேரைச் செலுத்திக்கொண்டு தனியே சென்ருன்.

தேர் சென்ற வழியில் கனிமரங்களும் மலர்ச் செடிகளும் பூங்கொடிகளும் நிறைந்து, இயற்கையின் இனிய நலங்களையெல்லாம் எடுத்துக் காட்டுவனபோல் எழில் மிக விளங்கிய சோலை யொன்று காணப்பட்டது.

அதைக் கண்டதும் இறும்பூது எய்திய பாரி, அச்சோலைக்குள் புகுந்தான்.

மன்னன் வருகையைக் கண்டு, மனமகிழ்ந்து வரவேற்பதுபோல் விளங்கியது, சோலை. மரங்களிலும் கொடிகளிலும் கவிந்து தொங்கும் தளிர்கள் கொடை வள்ளல் பாரிக்குக் குடை பிடித்தன; காற்றில் அசைந்தாடும் மலர்ச் செடிகளின் கிளைகள் கவரி வீசின; மலர்களிலுள்ள தேனை நாடித்திரியும் வண்டுகளும், தளிர்களைக் கோதுகின்ற குயில்களும் இன்னிசை பாடின; காண்பவர் மனத்தைக் கவரும் கவின் பெற்றுத் திகழும் மயில்கள் தமது பன்னிறத் தோகையைப் பகட்டாக விரித்து நாட்டியமாடின; கனிகளின் பளுவைத் தாங்காமல் தாழ்ந்து தாழ்ந்து எழும் மரக்கிளைகள் மன்னனை விருந்தருந்தப் பரிவுடன் அழைத்தன. சிந்திய மலர்கள் குவியலாய்க் கிடந்து அமர்வதற்குரிய ஆசனமாய் அமைந்திருந்தன.

இவ்வாறு இயற்கையளிக்கும் இன்பக் காட்சிகளில் ஈடுபட்ட உள்ளத்தினனாய் வரும் பாரி வள்ளலுக்கு எதிரில் கண்ட காட்சி, உள்ளத்தைக் கலக்கமுறச் செய்து, இதுகாறும் கண்டுகளித்த காட்சியின்பங்களை யெல்லாம் போக்கடித்து விட்டது. கொடி முல்லையொன்று செழித்து வளர்ந்து பற்றிப் படர்வதற்குரிய கொழுகொம்பின்றிக் காற்றால் அலைப்புண்டு தவித்து நின்றதே அக்காட்சி. முல்லைக் கொடியின் நிலை கண்ட பாரி உடனே தேரை நிறுத்திக் கீழே யிறங்கிக் கொடியின் அருகில் சென்று பார்த்தான்.

முல்லைக்கொடி பசுமை நிறைந்து தளதளவென்று தழைத்திருந்தது; பல்லைப் போன்ற முல்லை மலர்கள்

பூத்துப் பொலிவுடன் தோன்றின. மேல் நோக்கி யெழுந்த கொடியின் கொழுமையான நுனிகள் படர்வதற்கிடமின்றித் தத்தளித்துக் கொண்டிருந்தன. இந்நிலையைக் கண்ட பாரியின் உள்ளத்தில் இரக்கம் சுரந்தது கொடியின் துயர் நிலையைக் கூர்ந்து நோக்கினன். "வள்ளலே! காப்பவர் எவருமின்றிக் கலங்குகிறேன்; என் துன்ப நிலையைப் போக்கி உதவி செய்வீராக!" என்று, முல்லைக் கொடி தன் பல்லைக் காட்டிக் கைகளை நீட்டிக் காலில் விழுந்து வணங்கி வேண்டுவதுபோல் தோன்றியது வேள் பாரிக்கு.

"ஆகா! இந்தக் கொடிமுல்லை ஐம்புல அறிவில் உற்றறியும் ஓரறிவே உடையதாயினும் தன் துன்பத்தைப் புலப்படுத்தும் தன்மையில் அறிவு சிறந்து காணப்படுகிறதே! மக்கள் உடம்பில் வாழும் உயிருக்கும் மற்ற விலங்கு, பறவை, தாவரம் முதலியவற்றின் உடல்களில் வாழும் உயிர்களுக்கும் இடர் ஏற்பட்டால் அஃது ஒரே தன்மையுடையது தானே! ஆகையால், கொழுகொம்பின்றித் தவிக்கும் இந்தக் கொடி முல்லையின் துன்பத்தைப் போக்குவேன்" என்று, வேள்பாரி இரக்கத்தால் மனமுருக எண்ணினன்.

வள்ளல் பாரி, தன் உள்ளத்தில் எழுந்த அருட் பெருக்கால் செலுத்தப்பட்டுத் தேரினிடம் சென்றான்; தேரில் பூட்டியிருந்த இரு குதிரைகளையும் அவிழ்த்துத் தன் இருப்பிடம் நோக்கிச் செல்லும்படி விரட்டி விட்டான்; பிறகு தேரையிழுத்து முல்லைக்கொடியின் அருகில் நிறுத்தினன்; உருளைகளைக் கழற்றி ஒரு பக்கமாகப் போட்டான்; தேர் தரையில் படிந்து

நின்றது. உடனே காற்றில் அசையும் முல்லைக் கொடியை எடுத்துத் தேரின்மீது படரும்படி விட்டான். அக்கொடி கொழுகொம்பினைப் பெற்றுக் களித்துத் தன் முல்லை மலரால் நன்றி கூறுவதுபோல் தோன்றியது பாரிக்கு. தான் ஏறி வந்த அழகிய தேர், முல்லை படர்ந்து செழிப்பதற்குரிய பொற்பந்தராகப் பொலி வதையும், முல்லை அதன்மீது தவழ்ந்து நிற்பதையும் உவகை பொங்க நோக்கிய பாரி, இதுவரையில் அடைந்திராத இன்பப் பெருக்கில் தன்னை மறந்து சிறிது நேரம் அசைவற்று நின்றிருந்தான்.

பரிசில் பெற்ற பாவலர்களும் பிறரும் மனங் குளிர்ந்து பாரியை வாழ்த்தி யிருக்கிறார்கள். அதனால் பாரியும் மகிழ்ந்திருக்கிறான்; இன்பமும் அடைந்திருக் கிறான். ஆனால், தேர் பெற்ற முல்லைக்கொடி வாய் திறந்து வாழ்த்தவில்லை. தன் துன்பத்தைப் போக்க வேண்டுமென்று கேட்கவும் இல்லை! ஆயினும், பாரிக்கு முல்லை தன் குறையைத் தெரிவிப்பதுபோல் தோன்றியது; தேரைப் பெற்று வாழ்த்தி நன்றி தெரிவிப்பதுபோல் தோன்றியது. அதனால் அடைந்த மகிழ்ச்சியோ பெரிது; இன்பமோ அதனினும் பெரிது. பாரி அதுவரையில் அடையப் பெறாத பெரு மகிழ்ச்சி யையும் இன்பத்தையும் பெற்றான்.

வேள்பாரி முல்லைக் கொடிக்குத் தேர் வழங்கிய செய்தி பறம்பு நாடெங்கும் பரவியது; பாண்டிய நாடு முழுவதும் பரவியது; பின்னர் தமிழகம் எங்கணும் பரவிச் சென்றது. செய்தியறிந்தவர்களெல்லாம் வியந்து, பாரியின் வள்ளன்மையைப் பாடல்களில் வைத்துப் போற்றிப் புகழ்ந்துள்ளார்கள்.

## பயிற்சி

**1. அருஞ்சொல் விளக்கம்:**

துணிவு - தைரியம்; அருளாளர் - அன்புடையவர்; ஒளிர்வோர் - விளங்குபவர்; வள்ளல் - இல்லையென்னது கொடுப்பவர்; விழைவு - விருப்பம்; இரவலர் - யாசிப்பவர்; ஆற்றுதல் - செய்தல்; நாட்டம் - விருப்பம்; வலவன் - தேர்ப்பாகன்; கங்குல் - இரவு, இருள், இங்கு மேகம்: இறும்பூது - மகிழ்ச்சி; கவின் - அழகு; பரிவு-அன்பு; கொழு கொம்பு - பற்றுக்கோல்: பொலிதல் - விளங்குதல்; விம்மிதம் உறுதல் - மகிழ்ச்சியுறுதல்.

**2. வினக்கள் :**

1. அருளாளரின் சிறிய செயல்களும் பெரியனவாகப் போற்றப்படுவது ஏன்?

2. பாரியின் கொடைச்சிறப்பைப் புலவர்கள் போற்றுவது ஏன்?

3. பாரிவள்ளல் சென்றடைந்த சோலை எவ்வாறு இருந்தது?

4. பாரியின் உள்ளத்தைக் கலக்கமுறச் செய்த காட்சி யாது?

5. கொழு கொம்பின்றித் தவித்த முல்லைக்கொடி பாரி வள்ளலுக்கு எவ்வகையில் காட்சி யளித்தது?

6. பாரி வள்ளல் முல்லைக் கொடிக்கு எவ்வாறு உதவி செய்தான்?

**3, இலக்கணம் :**

1. இப்பாடத்தில் வந்த பெயர்ச் சொற்களில் சிலவற்றைப் பொறுக்கி, அவற்றிற்குத் திணை, பால், எண் கூறுக.

2 அறுவகைப் பெயர்களுக்கும் இப் பாடத்திலிருந்து உதாரணங்கள் எடுத்துக் காட்டுக.

---

# 22. தாயும் தள்ளுவண்டியும்

[திரு எஸ். கோவிந்தன், பி. ஏ., அவர்கள்]

சின்னஞ்சிறு குழந்தை; அன்ன நடை போட ஆசை; எண்ணம் ஈடேற எப்படியோ முயற்சிக்கிறது; கன்னம் சிவக்க எழுந்து நிற்கப் பார்க்கிறது; பாதியில் விழுந்து விடுகிறது; இன்னும் கால்களுக்குப் போதிய சக்தி ஏற்படவில்லை; சக்தியிருப்பினும் நடை போடப் பயிற்சி இல்லை.

பக்கத்திலிருந்து இக்காட்சியைப் பார்க்கிருள், அன்னை. பச்சிளங் குழந்தையின் இச்சையை அறிகிருள்; தன் குழந்தை சீக்கிரமே நடப்பதில்—அதைக் கண்டு களிப்பதில்—அவளுக்குக் கொள்ளை யின்பம்; அப்படியே அள்ளியணைத்துத் தனது மழலைச் செல்வத்தின் மலர்க் கரங்களில் தள்ளு வண்டியைத் தருகிருள்.

தத்தித் தத்தித் தவழும் கிளியோவென குழந்தை வண்டியைத் தள்ளுகிறது. வண்டி நகர நகர, குழந்தை நடக்கப் பழகுகிறது. தானுக நடக்கும் சக்தி ஏற்படுமளவும் இப்பயிற்சி நடைபெறுகிறது. பயிற்சிக் காலத்தில் வண்டி கவிழும்; குழந்தை தடுமாறிக் கீழே விழும். அப்பொழுதெல்லாம் தாய் பின்னின்று பாதுகாப்பளிப்பாள்.

இப்பொழுது குழந்தை தானே நடக்கக் கற்றுக் கொண்டுவிட்டது. தள்ளு வண்டியில்லை; தாயும் பக்கத்தில் இல்லை. குழந்தை நடக்கும்பொழுது தவறிவிடுமே யென்று தாய் அவ்வளவாகப் பயப்

படுவதும் இல்லை. ஏனெனில் தவறி விழுந்தாலும் எழுந்து நிற்கப் போதிய பலம் இறக்கிறதல்லவா? இந்த நிலைக்கு மூலகாரணம், ஆதார சக்தியளித்தது தள்ளுவண்டி. சாதாரணமாகப் பார்க்கும்பொழுது அது ஒரு மரத்தாலான தள்ளுவண்டியே. ஆனால், அது குழந்தையின் வளர்ச்சியில், வாழ்க்கையில்தான் எவ்வளவு பெரிய புரட்சியை உண்டாக்கிவிடுகிறது! இன்றைய தினம் நாட்டிலே நடைபெற்று வரும் சமுதாய நலத் திட்டத்தின் முழுக கருத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறதல்லவா இப் புரட்சிக் கருவூலம்!

தள்ளுவண்டியும் ஒரு சாதனம்; அதுபோல சமுதாய நலத் திட்டமும் ஒரு சாதனமே. இரண்டும் ஒரு லட்சிய சித்திக்கே உதவுகின்றன. இரண்டையும் தனியாகப் பார்க்கும்போது எதனிடத்தும் எவ்வித சக்தியுமில்லை. சக்தியை அளிக்கும் சாதனமாகவே இவை விளங்குகின்றன. ஐந்தாண்டுத் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றுவதற்கு வேண்டிய விசையைத் தரும் சாதனமாகச் சமுதாய வளர்ச்சித் திட்டம் விளங்குகிறது. தனி மனிதரின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதே சமுதாய வளர்ச்சித் திட்டத்தின் குறிக்கோள். சமுதாயத்தை, தனி மனிதனை உயர்த்துவதற்கு முற்படுவதிலும், தனி மனிதன் தனது சொந்தக் கிராமத்தையும், அதன் மூலம் இந்திய நாட்டையும் மேம்படுத்துவதிலுந்தான் சமுதாய நலத் திட்டத்தின் முக்கியத்துவமே அமைந்திருக்கிறது.

தள்ளுவண்டி-சமுதாய நலத் திட்டம்-இரண்டும் விழைவது புரட்சியே; புரட்சி யென்றால் மண்டையை

உடைப்பது மட்டுமன்று; புரட்சி என்றால் மாற்றம். ஏற்கனவே இயங்கிவரும் ஓர் அமைப்பில் சிறப்பு மிக்க, குறிப்பிடத்தக்க ஒரு மாற்றத்தை ஏற்படுத்து வதும் புரட்சியே. தரையில் கால்களையும், கைகளையும் உராய்ந்து தவழும் குழந்தை எளிதாகக் கையை வீசி நடக்கிறதே, அங்கே ஒரு புரட்சி நடைபெறுகிறது. அறியாமை, பிணி, வறுமை இவைகளின் சூழலில் அகப்பட்டுத் தத்தளிக்கும் சாதாரண மனிதனின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதே இந்தியாவின் இன்றைய நிலைமையில் பெரும் புரட்சியாகக் கருதப் படல் வேண்டும்.

இரு புரட்சிகளும் நிகழும் சூழ்நிலை, சுற்றுச் சார்பு அநேகமாக ஒன்றே. நடக்க முயலும் குழந்தை யுள்ளத்திற்கு வண்டி தள்ளுவது சமாதானமான ஒரு பணி. பலாத்கார முறை குழந்தையிடம் பலனளிப்பது கடினம். அது போலவே சமாதான வழியில், கூட்டுறவு முறையில், மக்களாட்சி முறையில், நாட்டிலே ஒரு பெரும் புரட்சியை நிகழ்த்துவது சமுதாய வளர்ச்சித் திட்டம்.

இரு தரப்பிலும் துன்பங்களும் உண்டு; இன்ப மும் உண்டு. உரிமைகளும் கடமைகளும் உண்டு, ஆபத்தும் உண்டு; ஆதரவும் உண்டு. பயிற்சியில் குழந்தை தவறி விழும்போது கைக் கொடுத்துக் காப்பாற்றத் தாய் இருக்கிறாள். அதுபோலவே, மக்களும் தங்கள் முயற்சியில் தவறுதல் நிகழும் போது சரி செய்து நல்வழியில் நடத்திச் செல்ல அரசாங்கம் இருக்கிறது; ஊழியர்கள் இருக்கிறார்கள். தாய்க்கும் குழந்தைக்கும் ஒத்துழைப்பும் கண்

காணிப்பும் மிக அவசியம். அதுபோலவே, மக்களுக்கும், மக்கள் ஊழியர்களுக்கும் ஒத்துழைப்பும், கூட்டுறவும், கண்காணிப்பும் மிகமிக அவசியம்.

இரு தரப்பிலும் ஆர்வம் முன்னிற்கிறது. முயற்சி தளரா முயற்சியாகித் திருவினை பயக்க ஆர்வம் அடிப் படைத் தேவை. சுறுசுறுப்பான குழந்தை சீக்கிரமே நடைபோடக் கற்றுக்கொள்ளும். கொஞ்சம் சோடை யான குழந்தைக்கு என்னதான் ஆதரவு இருந் தாலும் நடைபோடச் சற்று நாளாகும். அதுபோலவே அரசாங்கம் என்னதான் திட்டங்கள் வகுத்து, அவை களின் நிறைவேற்றத்திற்கான வசதிகளையெல்லாம் செய்து கொடுத்த போதிலும், அதனால் பயனடையும் மக்களுக்கு ஆர்வம் இருக்கவேண்டும். அந்த ஆர்வம் தொடர்ந்து நீடித்து உயிருள்ள, நிரந்தரமான, அமைப்புக்களை நிர்மாணிக்கத் தக்கதாக வளர்ந்து பெருக வேண்டும்.

தன்னிறைவு பெறுதலே இரு நிகழ்ச்சிகளின் முடிவு. தாயின் உதவியின்றிக் குழந்தை நடக்கிறது. இங்கே எடுத்ததற்கெல்லாம் அரசாங்கத்தையே எதிர் பார்க்கும் பழக்கம் மாற்றப்பட்டு, மக்கள் தாங்களே தங்கள் தேவைகளை யுணர்ந்து அவைகளுக்கு வழி காணும் முயற்சியில் தாங்களே தங்களுக்கு வேண்டிய திட்டங்களையும் தீட்டிக்கொண்டு அவைகளைச் செயல் படுத்த வேண்டும். திட்ட நிறைவேற்றத்தில், அரசாங்கம் ஓரளவுக்குதான் உதவி செய்யும்; வீட்டில் நடக்கக் கற்றுக்கொண்ட குழந்தைக்கு வெளியில் நடக்கும்போது அறிவுரை தேவையல்லவா? அது போலவே, அரசாங்கமும் தன்னிறைவு பெற்ற சமுதாயத்திற்கும் சீரிய ஆசானாக விளங்கும்.

குழந்தை படிப்படியாக வளர்ந்து வாலிபனாகி, அறிவாளியாகி, சமூகத்தின் ஓர் உறுப்பாகிறான். அவன் தனது கடமை என்னவென்பதை உணருகிறான். திருமணம் நடக்கிறது. தனது குடும்பத்திற்கும், தான் பிறந்த சமூகத்திற்கும் தனது ஊருக்கும், நாட்டிற்கும் பயனுள்ள குடிமகனாக, நற்பணியாற்ற ஆற்றல் பெறுகிறான். இப்போது இவனுக்குத் தள்ளுவண்டியின் ஞாபகமில்லை; அது தேவையுமில்லை. என்றாலும் தன்னிறைவோடு வாழ்வதற்குச் சில வசதிகள் தேவை. இந்தத் திருமணம்தான் இன்றையப் புதிய பஞ்சாயத்துச் சட்டம். ஒவ்வொரு கிராமமும் சிறிய குடியரசாகி எல்லா வாழ்க்கை வசதிகளும் அங்குக் கிடைப்பனவாகி விளங்க வேண்டுமென்பதும், இந்நிலையை ஏற்படுத்துவதில் கிராம மக்களுக்கு முழு உரிமையும் அளிக்கப்பட வேண்டுமென்பதுந்தான் இதன் குறிக்கோள்; நமது கிராம மக்களிடம் அறிவு, அனுபவம் மலிந்து கிடக்கிறது. ஆற்றல் இருக்கிறது. உழைப்பு உறங்கிக் கிடக்கிறது. உற்சாகம் இருக்கிறது. இவைகளை எல்லாம் இணைத்து, ஒருமுனைப்படுத்தி, சீரிய பாதையில் செலுத்தினால் விளையும் பயன் மிகப் பெரியதாக இருக்குமென்பதுதான் பஞ்சாயத்துச் சட்டத்தின் நம்பிக்கை.

பயிற்சி

1 **அருஞ்சொல் விளக்கம் :**

பயிற்சி – பழக்கம்; ஆதாரம் – அடிப்படை; கருவூலம் – பொக்கிஷம்; சித்தி – கை கூடுகை; ஆர்வம் – ஆசை; தன்னிறைவு – தனக்குரிய தேவை முழுதும் பெற்று நிறைதல்; ஆசான் – ஆசிரியர்; இணைத்து – சேர்த்து.

**2. வினுக்கள் :**

1. தள்ளுவண்டி குழந்தையின் வளர்ச்சியில் உண்டாக்கிய புரட்சியினை எழுதுக

2. சமுதாய நலத் திட்டத்தின் முக்கியத்துவம் என்ன?

3. நம் நாட்டில் இன்றைய நிலையில் பெரும் புரட்சியாகக் கருதப்படுவது யாது? அதனை உண்டாக்கியது யாது?

4. தள்ளுவண்டியும் சமுதாய வளர்ச்சித் திட்டமும் ஒரே நிலையில் இருப்பன ஆகும்—எவ்வாறு?

5. 'புதிய பஞ்சாயத்துச் சட்டம்'—இதனை விளக்குக.

**3. இலக்கணம் :**

கண்ணன் பாடுகிருன். கமலம் ஆடுகிருள்.
மழை பெய்தது நாடு செழித்தது

இவற்றுள் பாடுகிருன் ஆடுகிருள் பெய்தது செழித்தது என்பன கண்ணன் முதலியவர்களின் தொழிலை உணர்த்தி நிற்கின்றன. இவ்வாறு ஒன்றன் தொழிலைக் குறித்து வரும் சொல் வினைச்சொல் ஆகும். வினைச்சொல்லும் திணை, பால் எண், இடம் ஆகியவற்றை உணர்த்திவரும்.

உ-ம் : வருகிருன். இவ்வினைச்சொல் உயர்திணை, ஆண்பால், ஒருமை எண் படர்க்கை இடம் ஆகியவற்றை உணர்த்தியதை அறிக.

---

# 23. கடற்கரையில் பாரதியார்

[திரு ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்., அவர்கள்]

தமிழ் நாட்டுக்குப் புத்துயிரும் வாழ்வும் அளித்தவர் பாரதியார். பாருக்குள்ளே நல்ல நாடு—பண்பும் பழமையும் வாய்ந்த நாடு—பாரதப் பெருநாடு உரிமையிழந்து, பெருமைகுன்றி, வெள்ளையராட்சியில் குறுகி நின்ற நிலைகண்டு அவர் மனம் கொதித்தார். 'இம் என்றுல் சிறைவாசம்; ஏன் என்றுல் வனவாசம்'

என்பதை நன்ருக அறிந்திருந்தும் வெள்ளையர் ஆட்சியை எதிர்த்தார் அவ்வீரர். பாட்டாலும் உரையாலும் தமிழ் நாட்டாரைத் தட்டி எழுப்பி வீர சுதந்திர வேட்கையை ஊட்டினர்.

சென்னையம்பதியின் கண்ணென விளங்கும் திருவல்லிக்கேணியிலே பல்லாண்டு வாழ்ந்தார் பாரதியார். நாள்தோறும் அந்தி மாலையில் கடற் கரையிலே நின்று ஆவேசமாய்ப் பாடுவார். ஒருநாள் அக்கடலை நோக்கி ஆர்வமுறப் பேசலுற்ருர்:

"அருந்தமிழ்க் கடலே! இன்று உன்னைக் காண ஏனே என் உள்ளம் களிக்கின்றது! 'எங்கள் அருமைத் தமிழகத்தை வாழ்விக்க வந்த வள்ளுவர் முன்னுளில் உன்னைக் கண்டார்; உன் காற்றை உண்டார்; உன் கரையில் உலாவினர்' என்று எண்ணும்பொழுது இன்பம் பொங்குகின்றது என் உள்ளத்தில்! 'உன் மணற் பரப்பிலே நன்னீர் சுரந்து அல்லி மலர் பூத்து நின்ற கேணிதான் அக்கவிஞர் பெருமான் கருத்தைக் கவர்ந்ததோ?' 'தொட்டனைத் தூறும் மணற்கேணி' என்ற அருமைத் திருக்குறள் உன் அருகேயுள்ள திருவல்லிக்கேணியைத்தான் குறித்ததோ? இளங்காற்றளித்துச் சிறு நன்மை செய்த உனக்கு எத்துணை அருமையான கைம்மாறு அளித்து விட்டார் அப்பெருமான்! உன் அல்லி மணற் கேணிக்கு அழியாப் பெரும்பதம் அளித்து விட்டாரே! அவர் வாழ்த்துரையால்தான் திருவல்லிக் கேணிக்கு வாழ்வின்மேல் வாழ்வு வருகின்றதோ?

"நீலத் திரைக்கடலே! உன்னைக் கடைக்கணித்த அப்பெருந்தகையை ஏழையேன் என்சொல்லி

ஏத்துவேன்? மாநிலமெங்கும் புகழ்பெற்று விளங்கும் அப்பெருமானைத் தமிழகம் செய்த தவக்கொழுந்து என்பனோ? நானிலம் செய்த நற்றவத்தின் பயன் என்பனோ? ஒரு மாமணியாய் உலகிற்கு ஓங்கிய திருமாமணி என்பனோ? செந்தமிழ்ச் செம்மணிகளாய் இலங்கும் மும்மணிகளுள் அவரே நடுநாயகமாகக் காட்சி தருகின்றார். புனிதமான அக்காட்சியை என் புன்கவியால் எழுதிக்காட்ட முடியுமா? ஆயினும் கடுக்கின்றது ஆசை; கதிக்கின்றது கவிதை.

''கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு — நல்ல

பல்வித மாயின சாத்திரத் தின்மணம்
பாரெங்கும் வீசும் தமிழ்நாடு.

வள்ளுவன் தன்னை உலகினுக் கேதந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை

அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு''

என்று பாடுவேன்; ஆனந்தக் கூத்து ஆடுவேன்.

''நல்லோர் போற்றும் அல்லிக்கேணியே! உன் மலர்க்கேணியின் அழகைக் கண்டுதான் மாமுகில் வண்ணன் அதனருகே கோயில் கொண்டானோ? அன்று பஞ்சவருக்குத் துணைபுரிந்த அஞ்சன வண்ணன், பார்த்தனுக்குப் பாகனாகிய பரந்தாமன், அறப்பெருந் துணைவன், அடியார்க்கு எளியன், நின்னகத்தே நின்று அருள் புரிகின்றான். அந்தக்

''கண்ணனைக் கண்டேன் — எங்கள்

கண்ணனைக் கண்டேன் — மணி

வண்ணனை ஞான மயிலினைக் கண்டேன்''

"தொல்புகழ் வாய்ந்த அல்லிக்கேணியே! இந் நாளில் உன் அருமையை அறிவார் யார்? உன் கடற் கரையில் அன்று தமிழ்த் தென்றல் தவழ்ந்தது; இன்று மேல் காற்று வீசுகின்றது. அன்று உன் அரங்கத்தில் எங்கள் தமிழன்னை ஆனந்த நடனம் புரிந்தாள்; இன்று ஆங்கிலமாது களியாட்டம் ஆடுகின்றுள். அவளுடைய வெள்ளை நாவிலே தெள்ளிய தமிழ் வளம் ஏறுமா? அவள் இறுமாந்த செவியிலே தேமதுரத் தமிழோசை சேருமா? அந்தோ! திருவல்லிக் கேணியே! வேற்றரசின் கொடுமையால், நீ சீர் இழந்தாய்; பேர் இழந்தாய்; 'திரிப்பளிக்கே' ஞகத் திரிந்து விட்டாய்!

"அல்லிக் கருங்கடலே! உன் அழகமைந்த கரையிலே, வெள்ளையர் விளையாடித் திரிகின்றுர்; வெறியாட்டயர்கின்றுர்; உலாவுகின்றுர்; குலாவு கின்றுர்; அவரைக் கண்டு அஞ்சி, நம்மவர் நெஞ்சம் குலைகின்றுரே! சிப்பாயைக் கண்டால் அச்சம்; துப்பாக்கியைக் கண்டால் நடுக்கம்; சட்டைக்காரனைக் கண்டால் குட்டிக்கரணம். இப்படி வாழ்வதும் ஒரு வாழ்வாகுமா? பிறந்த நாட்டில் பிறர்க்கடிமை செய்தல் பேதைமை யன்றே?

"அறப் பெருங்கடலே! வீர சுதந்திர வேட்கை இந் நாட்டிலே வேரூன்றி விட்டது. இனி அதை அசைக்க எவராலும் ஆகாது. 'வந்தே மாதரம்' என்ற மந்திர மொழியால் பாரத நாட்டைத் தட்டி எழுப்பிய பாலகங்காதர திலகரை அரசாங்கத்தார் சிறையில் மாட்டலாம். தென்னுட்டுத் திலகர் என்று பேர் பெற்ற எங்கள் சிதம்பரனுரைச் சிறைக் கோட்டத்தில் அடைக்

கலாம்; செக்கிழுக்க வைக்கலாம்; துச்சமாக எண்ணித் தூறு செய்யலாம். ஆயினும் அவர் மூட்டிய கனல் வெள்ளையர் ஆட்சியை வீட்டியே தீரும்.

"சொந்த நாட்டில் பிறர்க்கடி மைசெய்தே
துஞ்சிடோம் – இனி அஞ்சிடோம்"

என்ற வீர சுதந்திர வேகத்தை நிறுத்த யாரால் முடியும்? எரிமலையைத் தடுக்க – அதன் வாயை அடக்க – எவரால் இயலும்?

"செந்தமிழ்க் கடலே! இக் கரையிலே கொஞ்சம் இடம் வேண்டும் என்று கெஞ்சிய வெள்ளைக்காரன் இன்று மிஞ்சிவிட்டான்; கோட்டை வளைத்தான்; நமக்குக் கேட்டை விளைத்தான். இந்நகரை வெள்ளையர் பாக்கம் என்றும் கருப்பர் பாக்கம் என்றும் பிரித்தானே! வெள்ளையர் மேலோராம்; கருப்பர் கீழோராம். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்று பரந்த கொள்கையைப் பழித்து நிற்பது வெள்ளையர் ஆட்சி. அது வீழ்ந்தே தீரும்.

"என் அருமைத் தமிழ்க் கடலே! அது விழுகின்ற நாளிலே பாரத சமுதாயம் ஒன்றுபட்டு வாழும். சாதிப் பூசல்கள் ஒழியும்; சமயப் பிணக்கங்கள் அழியும்; தமிழ்நாடு தலையெடுக்கும். அப்போது,

"உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம் — **வீணில்**
உண்டுகளித் திருப்போரை
நிந்தனை செய்வோம்"

என்று ஆடுவோம்; பள்ளுப் பாடுவோம்; ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்' என்று அகம்களித்து

இக்கடற்கரையில் இறுமாந்து உலாவுவோம்'' என்று ஏறுபோல் நடந்து சென்றார் பாரதியார்.

### பயிற்சி

**1. அருஞ்சொல் விளக்கம் :**

புதுமை + உயிர் = புத்துயிர்; உரிமை-சுதந்திரம்; வேட்கை-விருப்பம்; நன்னீர் – நல்லநீர்; தொட்டனைத் தூறும் – தோண்டிய அளவாக நீர் ஊறும்; நன்மை + தவம் – நற்றவம்; மாமணி - சிறந்தமணி; மும்மணி-கம்பர், திருவள்ளுவர், இளங்கோவடிகள். கடுத்தல் - மிகுதல் ; கதிக்கின்றது – எழுகின்றது; மாமுகில் – கரியமேகம்; வண்ணம் – நிறமுடையவன்; திருமால்; பஞ்சவர் – பாண்டவர்; அஞ்சனம் – மை; பார்த்தன் – அர்ச்சுனன்; இறுமாந்த - அகங்காரங்கொண்ட; வெறியாட்டு – வெறி பிடித்தாடுதல்; துச்சம் – அற்பம்; தூறு – பழிச்சொல்; வீட்டி – வீழ்த்தி; துஞ்சிடோம் – தூங்கமாட்டோம்; பாக்கம் – பகுதி; பிணக்கம் - மாறுபாடு.

**2. வினாக்கள் :**

1. வள்ளுவரை நினைத்துக் கடற்கரையிலே பாரதியார் கூறியதென்ன?

2. வேற்றரசின் கொடுமையால் திருவல்லிக்கேணி என்ன நிலை அடைந்ததாகக் கூறுகின்றார் பாரதியார்?

3. பாரதியார் வெள்ளையர் கொடுமையைப்பற்றிக் கூறுவது என்ன?

**3. இலக்கணம் :**

முருகன் வந்தான்.
முருகன் வந்து

இவற்றுள் வந்தான், வந்து என்பன வினைச் சொற்கள் ஆகும். இவ்வினைகளுள் வந்தான் என்பதில் வருதல் தொழில் முற்றுப் பெற்றுள்ளது. வந்து என்பதில் வருதல் தொழில் முற்றுப் பெறவில்லை. தொழில் முற்றுப் பெற்று நிற்கும் வினை

முற்றுவினை என்றும், தொழில் முற்றுப்பெருதவினை எச்சவினை என்றும் பெயர் பெறும்.

எச்சவினை பெயரைக்கொண்டும் வினையைக் கொண்டும் முடியப்பெறும்.

1 பெயரைக் கொண்டு முடியும் எச்சம் பெயரெச்சம் எனப்படும்.

உ-ம்.: வந்த முருகன்

2. வினையைக் கொண்டு முடியும் எச்சம் வினையெச்சம் எனப்படும். வினையெச்சமானது, வினைமுற்று. பெயரெச்சம், வினையெச்சம் ஆகியவற்றைக் கொண்டு முடியும்.

உ-ம்.: வந்து நின்முன் —வினைமுற்று

வந்து நின்ற முருகன்—பெயரெச்சம்
வந்து நின்று பேசினுன்—வினையெச்சம்

---

# 24 குமண வள்ளல்

[டாக்டர் மா. இராசமாணிக்கனுர், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி. அவர்கள்]

**காட்சி 1**

[முதிரமலைத் தலைவனை குமண வள்ளல் தன் அரச மண்டபத்தில் இருக்கின்றுன். அமைச்சர், சேனைத் தலைவர் முதலியோர் இருக்கின்றனர்.]

குமணன்: (முதல் அமைச்சரைப் பார்த்து) முதல் அமைச்சரே, நீர் நமது நாடு முழுவதும் சுற்றிப் பார்த்து மீண்டீர் அல்லவா?

முதல் அமைச்சர்: ஆம், அரசே!

குமணன்: இவ்வாண்டில் பயிர் விளைவு எப்படி இருக்கிறது?

மு. அ: இவ்வாண்டுத் தொடக்கத்தில் நாம் பெரிய குளங்களைப் பல இடங்களில் வெட்டுவித்தோம்; வயல்கட்கு நீர் கொண்டுசெல்லத்தக்க கால் வாய்கள் பலவற்றைப் புதியனவாக வெட்டு வித்தோம். ஆதலால், சென்ற ஆண்டு விளைவைவிட இந்த ஆண்டு விளைவு மிகுதி யாகும் என்பதில் ஐயமில்லை

குமணன்: மிக்க மகிழ்ச்சி நம் குடிமக்கள் நமது அரசாட்சியைப்பற்றி என்ன பேசுகிறார்கள்?

மு. அ: குடிமக்கள் நமது அரசாட்சியை மனமாரப் பாராட்டுகின்றனர். நாம் ஆண்டுதோறும் அவர்கள் நன்மைக்காகப் பல துறைகளிலும் பாடுபட்டு வருவதே அவர்கள் பாராட்டுக்குக் காரணம் ஆகும்.

குமணன்: நமது நாட்டில் வீடு இல்லாத மக்களுக்கு வீடுகள் கட்டித்தர ஆணை பிறப்பித்தோமே. அந்த ஆணைப்படி அனைவரும் வீடுகளைப் பெற்றனரா?

மு. அ: அரசே, அத்திட்டம் சென்ற ஐந்து ஆண்டு களாக நடைபெற்று வந்து இந்த ஆண்டு முடிவுற்றது. இப்பொழுது வீடற்ற ஒரு குடும்ப மும் நமது நாட்டில் இல்லை. எல்லா மக்களும் இத்திட்டத்தைப் பாராட்டிப் பேசுகின்றனர்.

குமணன்: (எல்லோரையும் பார்த்து) அமைச்சர்களே, தானைத் தலைவர்களே, பெருமக்களே, உங்கள் மனமார்ந்த ஒத்துழைப்பினால் நான் நம் குடி

கட்குக் காவலனுக இருந்து வருகிறேன். எனது எட்டாண்டு ஆட்சியில் கரம்பு நிலங்கள் விளை நிலங்களாக மாறின; தண்ணீர் இல்லாத பல ஊர்கள் நன்னீர்க் குளங்களைப் பெற்றன; ஆண்டுதோறும் விளைவு மிகுதிப்பட்டு வருகிறது. கைத்தொழில்களும் வளர்ச்சிபெற்று வருகின்றன. இவ்விரண்டினுலும் நம் மக்கள் வறுமையின்றி வாழ்வதைக் காண நான் மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன். (முதல் அமைச்சரைப் பார்த்து) நமது நாட்டில் கல்வி நிலை எப்படி இருக்கிறது?

மு. அ: பெருமானே, ஒவ்வொரு கிராமத்திலும் பள்ளிக்கூடம் இருக்கின்றது. பிள்ளைகள் மிக்க ஆவலுடன் கல்விகற்று வருகின்றனர்; 'எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்' என்பதைக் கிராம மக்கள் நன்கு உணர்ந்திருக்கின்றனர்.

குமணன்: நமது தாய் மொழியாகிய தமிழ் நன்ருக வளரவேண்டும் என்பது எனது ஆவல். நமது தமிழ் இயல், இசை, நாடகம் என மூவகைப் படும் அல்லவா? இயற்றமிழுக்கு உரிய புலவரும், இசைத் தமிழுக்கு உரிய பாணரும், நாடகத் தமிழுக்கு உரிய கூத்தரும் நன்கு போற்றப் பட்டால்தான் முத்தமிழும் செழித்து வளரும். நாம் இதுவரை இம்மூவகை அறிஞரையும் போற்றி வந்திருக்கின்ருேம்; இனியும் அவ்வாறே செய்வோம். தமிழைப் போற்றி வளர்க்காதார் தமிழர் ஆகார் அல்லவா?

மு. அ: அரசே, முத்தமிழ் அறிஞரை நாம் போற்றிப் பாதுகாக்குமளவு வேறு எந்த அரசரும் பாதுகாப்பதில்லை என்று நம் அரண்மனைக்கு வந்து மீண்ட முத்தமிழ் அறிஞர்களே சொல்லக் கேட்டிருக்கிறேன். தங்கள் தொண்டர்களாகிய நாங்களும் தமிழர்கள் ஆதலால், எங்களால் இயலும் அளவு முத்தமிழ் அறிஞரை ஆதரித்து வருகிறோம் என்பதைத் தாழ்மையாகத் தெரிவித்துக் கொள்கிறோம்.

காட்சி 2

[குமணன் தம்பியாகிய இளங்குமணன் குமணனைக் கொன்று அரசைக் கைப்பற்றச் சூழ்ச்சி செய்தான். அதனை உணர்ந்த குமணன் காட்டிற்கு ஓடிவிட்டான். இளங்குமணன் அரியணை ஏறினன். மன்னன்மீது பற்றுக்கொண்ட பெரு மக்கள் சிலர் அவனுக்கு வேண்டிய உணவினைமட்டும் தவருது அனுப்பி வந்தனர். அந்நிலையில் குமணனைக் கண்டு பரிசில் பெற விரும்பிய பெருந்தலைச்சாத்தனுர் என்ற புலவர் அரண் மனைக்குச் சென்ருர்; தாம் தேடி வந்த வள்ளல் அரசு துறந்து காட்டில் இருப்பதைக் கேள்வியுற்ருர்; இளங்குமணனைக் காண மனம் வராது காடு சென்ருர்; மிக அரிதின் முயன்று குமணனைக் கண்டார்.]

புலவர்: அரசர் பெருமானே, நான் ஒரு புலவன். தங்களைக் காணத் தலைநகரம் சென்றேன்; தாங்கள் இங்கு இருப்பதை அறிந்து வந்தேன்.

குமணன்: புலவரே, உமது வரவு நல்வரவாகுக. நீர் எந்த நாட்டினர், எவ்வூரீர்?

புலவர்: அரசே, நான் புலவர் மரபில் வந்தவன். நானும் ஓரளவு தமிழ் வாசித்தவன். என்னையும் புலவர் என்று மக்கள் கூறுவர்.

குமணன் : ஐயா, நீர் புலவர் மரபினர் என்பது கேட்க மகிழ்ச்சி அடைகின்றேன்.

புலவர் : பெருமானே, புலமை இருந்து பயன் என்ன ? புலமையுடன் வறுமை தொடர்ந்து வருகிறதே! வறுமைக் கொடுமை புலவரை அன்றோ அடைக்கலமாகக் கொண்டிருக்கிறது ! என் வீட்டில் சமைத்தல் தொழில் இல்லாமையால் அடுப்பில் காளான் பூத்துக் கிடக்கின்றது. நேரத்திற்குப் போதிய உணவு இல்லாததால் என் மனைவி உடல் வற்றிக் கிடக்கின்றாள். அவள் அந்த நிலையில் இருப்பதால் தாய்ப்பால் பருக வழியின்றி என் குழந்தை அழுகை ஓய்வதில்லை. இவ்வாறு அழும் குழந்தை தாய் முகம் நோக்க, தாய் 'இதற்கு என் செய்வது ?'' என்ற முறையில் என் முகம் நோக்க, யான் தங்கள் முகம் நோக்க ஓடி வந்தேன்; வந்த நேரம் சரியன்று. தாங்கள் முடி துறந்து அடி நோவக் காட்டில் அலைகின்றீர்கள். இந்தக் காலத்தில் வர நேர்ந்தமை என் தவக்குறையே ஆகும்.

குமணன் : புலவரே, உமது வறிய நிலையைக் கேட்டு உள்ளம் உருகுகின்றது. நான் அரியணைமீது இருந்து புலவர் மனம் குளிரப் பொருள் கொடுத்த காலத்தில் நீர் வரவில்லை. நான் உயிருக்கு அஞ்சிக் காட்டில் அலையும் இத்துன்பக் காலத்தில் நீர் வந்து துன்புறுகிறீர். உமது துன்பத்தை எவ்வாறு போக்குவேன் ! (சிறிது நேரம் யோசித்து) சரி, நான் கூறுவதைக்

கேளும் : என் தலையைக் கொண்டு வருபவர்க்குத் தக்க பரிசு தருவதாக என் அருமைத் தம்பி அறிவித்திருக்கிறான். ஆதலால், நீவிர் என் தலையை அறுத்துச் சென்று அவனிடம் கொடும்; அவன் பரிசளிப்பான்; உமது வறுமை நீங்கும். கொலையஞ்சான் ஒருவன் என்னைக் கொன்று என் தலையைக் காட்டிப் பரிசு பெறுவதைவிட, அறிவும் கல்வியும் ஒழுக்கமும் உடைய புலவராகிய நீர் என்னைக் கொல்லின், யான் மன அமைதி பெறுவேன்; என் தலை ஒரு புலவர் குடும்பத்தின் வறுமையைப் போக்கியது என்று மகிழ்வேன். ஆதலின் ஐய, அன்பு கூர்ந்து, மறுமொழி கூறாது, என் தலையை இந்த வாளால் அரிந்து எடுத்துச் செல்க. (அரசன் வாளைத் தருதல்).

புலவர் : ('நாம் இந்த வாளை வாங்காவிடில் இவ்வரசர் இதனால் தம் தலையை அறுத்துக்கொள்ளவுங் கூடும்' என்று எண்ணி வாளை வாங்கிக் கொண்டார்). அரசர் பெருமானே, நான் இந்த வாளுடன் செல்வேன்; தங்கள் தம்பியை இங்கு அழைத்து வருவேன்; தங்களை அரியணையில் இருத்துவேன்; போய் வருகின்றேன். (குமணனை வணங்கிப் போதல்.)

பயிற்சி

1 **அருஞ்சொல் விளக்கம் :**

முதிரமலை – கோயம்புத்தூர் மாவட்டம் உடுமலைப்பேட்டைத் தாலுக்காவில் உள்ளது; கரம்புநிலம் – விளைவற்ற நிலம்; எண் -

கணக்கு; இயற்றமிழ் – செய்யுளும் உரை நடையும் ஆகிய தமிழ்; புலமை – அறிவு; மறுமொழி – பதில் வார்த்தை.

2. **வினாக்கள் :**

1. குமணன் குடிகட்குச் செய்த நலன்கள் யாவை?
2. முத்தமிழ் எவை? முத்தமிழ் அறிஞர் யாவர்?
3. குமணன் தமிழ்ப்பற்று மிக்கவன் என்பது எதனால் தெரிகிறது?
4. குமணன் ஏன் காடு புகுந்தான்?
5. புலவர் தம் வறுமையை எவ்வாறு விளக்கினார்?
6. குமணன் வறுமையைப் போக்கக் கூறிய வழி யாது? அவன் அதனை எவ்வாறு எடுத்துரைத்தான்?
7. புலவர் யாது கூறி அகன்றார்?

3. **இலக்கணம் :**

முருகன் வள்ளியை மணந்தான்.

இவ்வாக்கியத்துள் முருகன் என்பது இவ்வாக்கியம் தோன்றுதற்கு [எழுதற்கு] இடமாக அமைந்துள்ளது. மணந்தான் என்பது முருகன் செய்த தொழிலைக் குறிக்கின்றது; வள்ளியை என்பது முருகன் செய்த தொழிலாகிய மணத்தல் என்ற தொழிலின் பயனை அடைவதாக அமைந்துள்ளது. இவ்வாறு ஒரு வாக்கியந் தோன்றுதற்கு இடமாய் அமைந்து, தொழிலைச் செய்கின்ற கர்த்தாவைக் குறிப்பது எழுவாய் எனப்படும்; கர்த்தா செய்யும் தொழிலை உணர்த்தி வாக்கியத்தின் பொருளை முடித்து நிற்பது பயனிலை எனப்படும்; எழுவாய் செய்யும் தொழிலின் பயனை அடையும் பொருளைக் குறிப்பது செயப்படுபொருள் ஆகும்.






ஹோமியோபதி பிரஸ், கும்பகோணம்.

TB
031(6) N63

